# அருணாசல புராணம்



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

சரசுவதி மகால் நூலக வெளியீட்டு எண். 255

# அருணாசல புராணம்
# விருத்தாசல புராணம்
# திருவோத்தூர் புராணம்

சௌனச் சுருக்கம்

**மலைமருந்தன் என்னும் பருவத சஞ்சீவி**
**அவர்கள் எழுதியது**

பதிப்பாசிரியர்
சாகித்ய சிரோமணி
திருமதி S. ராஜலெக்ஷ்மி, M. A., B.L.I.S.,
சம்ஸ்கிருதப் பண்டிதர்
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.

**தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்**

**சரசுவதி மகால் நூலகம்**

**தஞ்சாவூர்**

*2007* விலை ரூ. *100 - 00*

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : அருணாசல புராணம்<br>விருத்தாசல புராணம்<br>திருவோத்தூர் புராணம் |
| பதிப்பாசிரியர் | : திருமதி S. ராஜலெக்ஷ்மி |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண். | : 255 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : நவம்பர், 2007 |
| தாள் | : 14. 2 கி. கி. சேஷசாயி |
| நூல் அளவு | : 21 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 172 |
| படிகள் | : 250 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : ராப்பர் |
| பொருள் | : புராணம் |
| விலை | : 100 - 00 |

# வெளியீட்டாளர் முகவுரை

பன்மொழிச் சுவடிகளைத் தன்னகத்தே கொண்டு தனிச் சிறப்புடன் விளங்கும் தஞ்சாவூர் சரசுவதி மகால் நூலகம், அதன்கண் அமைந்துள்ள அரிய சுவடிகளை நூல்களாக வெளியிடும் பணியை தொய்வில்லாமல் தொடர்ந்து செய்து வருவது குறிப்பிடத் தகுந்தது. அந்த அடிப்படையில் இந்நூலகம் எண்ணற்ற இலக்கிய நூல்களையும், இலக்கண நூல்களையும், சோதிட நூல்களையும், மருத்துவ நூல்களையும், புராண நூல்களையும் பதிப்பித்து வெளியிடும் பணியை இடையறாது ஆற்றிவருகிறது

இந்நூலகத்தில் உள்ள தமிழ்ச்சுவடிகளின் பிரிவில் சிதம்பர புராணக்கருத்து என்ற தலைப்புள்ளசுவடி 1161/D1670 என்ற எண்ணில் பதிவாகியுள்ளது. இச்சுவடியில்

அருணாசல புராணச் சுருக்கம்
விருத்தாசல புராணச் சுருக்கம்
திருவோத்தூர் புராணச் சுருக்கம்

என்ற மூன்று புராணச் சுருக்கங்களும் மணிப்பிரவாள நடையில் வசனமாக உள்ளது. இந்நூலாசிரியர் கள்ளப்புலியூர் எனும் ஊரினர் என்பதும் இவரது இயற்பெயரான பருவத சஞ்சீவி என்பதை மலைமருந்தன் என்று மாற்றி வைத்துக்கொண்டுள்ளார் என்பதும் அறிய முடிகிறது.

இப்புராணங்கள் தலம், மூர்த்தி, தீர்த்தம் ஆகிய மூன்று சிறப்புக்களைக் கூறுவன. இப்புராணங்கள் மூலம் நம் நாட்டின் பழமையான இதிகாசச் செய்திகளையும், சிவவழிபாட்டின் சிறப்புக்களையும், விபூதி, உருத்திராக்கம், லிங்கம் ஆகியவற்றைப் பற்றியச் சிறப்புச் செய்திகளையும் அறியலாம். அருணாச்சலபுராணம், 13 சருக்கங்களையும், விருத்தாசலபுராணம் 17 சருக்கங்களையும், திருவோத்தூர் புராணம் 27சருக்கங்களையும் கொண்டது. இவற்றின் நடையழகு, வடசொல்லாட்சி மிக்கவை. இதனால் சென்ற நூற்றாண்டில் இத்தகைய தமிழ்வசன நடை நிலவியதை இந்நூல் மூலம் அறியலாம். இந்நூல் தற்சமயம் இரண்டாம் பதிப்பாக வெளிவருகின்றது.

இந்நூலைஆர்வத்துடன் பதிப்பித்துள்ள நூலக வடமொழிப்பண்டிதர் திருமதி. எஸ். இராஜலெக்ஷ்மி அவர்களுக்கு எனது பாராட்டுக்கள்.

இத்தகைய அரிய நூல்களை நன்முறையில் வெளிக்கொணர நிதியுதவி நல்கும் மைய அரசுக்கு என் நன்றி. இந்நூலை வெளிக்கொணர முயற்சிகள் மேற்கொண்ட சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் பொறுப்பு வகிக்கும் திரு. சாமி. சிவஞானம், எம். ஏ., அவர்களுக்கும், நூலகக் கணினிப் பிரினருக்கும் மற்றும் இந்நூல் நன்முறையில் வெளிவர துணைநின்ற அனைவருக்கும் என் நன்றி.

**சா. விஜயராஜ் குமார்**, இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
5-11-2007

## பொருளடக்கம்

### அருணாசல புராணம்



### விருத்தாசல புராணம்

**திருவோத்தூர் புராணம்**

## முன்னுரை

*தில்லையைக் காணக் காசியி லிறக்கச் சிறக்குமா ரூர்தனிற் பிறக்க*
*எல்லையி லருணை கிரிதனை நினைக்க வெய்தலாமுத்தி*

என்பது ஆன்றோர் வாக்கு. நாம் விரும்புவது போல் பிறவி எடுக்க முடியாது. அது போன்றே இறக்கவும் முடியாது. நம் எண்ணப்படி சென்று தரிசிப்பது கூட எல்லோராலும் முடியாது. ஆனால் இருந்த இடத்திலிருந்தே அருணையை நினைக்கலாம். இது மிக மிக எளிது.

அப்படி இறைவன் உறைகின்ற இடங்கள் பல. அவற்றுள் இங்கு எடுத்துக் கூறப்பெறும் தலங்கள், அருணாசலம், விருத்தாசலம், திருவோத்தூர் ஆகிய மூன்றுமாம்.

## புராணங்கள்

தோற்றம்: இந்திய நாட்டு இலக்கியங்களுள் புராணங்கள் ஒரு பெரும் பகுதி. அவற்றைப் பற்றி அறிஞர்கள் ஒரு நூற்றாண்டுக்கு மேலாக ஆராய்ச்சி செய்தும் நம்பக்கூடிய எந்த முடிவுகளும் தோன்றவில்லை. ஆயினும் கீழ்க்கண்டவற்றைக் கூறலாம். எது தொன்று தொட்டு இன்று வரைக்கும் பரவி இருக்கின்றதோ அதுவே புராணம் என்று வாயு புராணம் கூறுகிறது. அதர்வண வேதகாலத்திலே புராண நூல்கள் சிறந்த இலக்கியங்களாகக் கருதப்பட்டு இருக்கின்றன. புராணம் என்னும் சொல் உபநிஷதங்களிலும் சாஸ்திரங்களிலும் காணப்படுகிறது. மஹாபாரதத்தில் புராணங்களின் பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன.

கி.மு. நான்காம் நூற்றாண்டில் கௌடில்யர் தமது அர்த்த சாஸ்திரத்தில் அரசகுமாரர்கள் முக்கியமாக கற்கவேண்டிய நூல்களுள் புராணமும் ஒன்று என்று கூறுகிறார். அமரசிம்மன் போன்ற பழைய நிகண்டாசிரியர்கள் புராணம் என்னும் நூல் உலகத்தோற்றம், ஒடுக்கம், மனுவந்தரம், முனிமரபு, அரசமரபு ஆகிய ஐந்து இலக்கணங்களை உடையதாக இருக்க வேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். ஆனால் முற்காலத்துப் புராணங்கள் மட்டுமே இந்த ஐந்து இலக்கணங்களையும் உடையனவாக இருக்கின்றன. புராணங்களில் ஆதி புராணங்கள் புத்தர் காலத்திற்கு முன்னரும் ஏனைய புராணங்கள் புத்தர் காலத்திற்கு பின்னரும் ஆக்கப்பட்டவை என்று கூறலாம்.

**வடமொழிப் புராணங்கள்:**

புராணங்கள் மகாபுராணம் என்றும் உபபுராணம் என்றும் இருவகைப்படும். மகாபுராணங்கள் அனைத்தையும் இயற்றியவர் வேதவியாசர். மகாபுராணங்கள் பதினெட்டு. உபபுராணங்கள் பதினெட்டு. அவைகளை இயற்றியவர் பலர். மகாபுராணங்கள் எல்லாம் அச்சிடப்பட்டு இருக்கின்றன.

**மகாபுராணங்கள்:**

பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பவிஷ்யம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம், வாமனம், கூர்மம், மச்சம், காருடம், [1]ஸ்காந்தம் பிரமாண்டம் ஆகப்பதினெட்டு.

---

1. விருத்தாசல புராணம், திருவோத்தூர் புராணம் இவைகள் இரண்டும் ஸ்காந்த புராணத்தின் ஒரு பகுதிகள்.

**உபபுராணங்கள் :**

*சனத்குமாரபுராணம், காந்தபுராணம், நந்திபுராணம், நாரதபுராணம், மானவபுராணம், பிரமாண்டபுராணம், காளிபுராணம், சாம்பபுராணம், பராசரபுராணம், நரசிம்மபுராணம், சிவதருமபுராணம், துருவாசபுராணம், கபிலபுராணம், ஔசநசபுராணம், வருணபுராணம், மகேசுவரபுராணம், சௌரபுராணம் (ஆதித்திய) மாரீச புராணம் ஆகியவை.*

*ஆதிபுராணம் என்று மற்றொரு வகையான பதினெண் புராணங்களும் இருக்கின்றன. பார்க்கவபுராணம், முத்கல புராணம், விநாயக புராணம், சரிதவிரிவு கர்க்கபுராணம், கல்கிபுராணம், கிருஷ்ணாவதாரக்கதை, வாசிஷ்டம், பசுபதி, பிருகத்தருமம், பிருகந்நாரதீயம், பவிஷ்யோத்தரம் பிருகத்வாமனம் பிருகத்மாத்ஸ்யம், சிவோத்தரதருமம், சண்டி, இலட்சுமி, பிராநந்தம் என்பன.*

*ஜைன, பௌத்த மதத்தவர்களும் புராணங்கள் இயற்றியுள்ளார்கள். ஸ்ரீபுராணம், மேருமந்தரபுராணம், முதலியவை குறிப்பிடத்தக்கவை. இந்து மதத்தின் சிறப்பான புராணங்கள் பாகவதம், என்பதும் புராணத்தில் அடங்குபவையே. சூதபுராணம் என்பதும் குறிப்பிடத்தக்க ஒன்று.*

**தமிழ்ப்புராணங்கள்:**

*புராணம் என்பதற்கு பழமை என்பது பொருள். சிலப்பதிகாரம், அடியார்க்குநல்லார் உரை, இறையனார் அகப்பொருள் உரை இவற்றில் மகாபுராணம், பூதபுராணம்*

என்று தொல்காப்பியத்துக்கு முன்பே, தமிழ்மொழியில் இருந்தனவாகக் கூறப்பெற்றுள்ளன. புராணங்கள் வடமொழியில் வேதம், இதிகாசம், என்று இவற்றிற்கு அடுத்து வைத்துப் பாராட்டப்படுகின்றன. வடமொழிப் புராணங்கள் பல தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன.

இவ்வாறு சிறப்பாக மொழி பெயர்ப்பு எழுந்தது பதினைந்தாம் நூற்றாண்டில் இருந்துதான் என்று கருதலாம்.

**தல புராணங்கள்**

தலபுராணங்கள் தமிழ் இலக்கியத்தில் சிறந்ததோர் இடம் பெறுகின்றன. கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்று ஔவையார் கூறியிருப்பதற்கு ஏற்ப பெரும்பாலும் ஒவ்வோர் ஊரிலும், ஒவ்வொரு கோயில் இருக்கத் தமிழ் நாட்டில் காண்கிறோம். தமிழ் நாட்டுத் தலங்கள், மூர்த்திகள், தீர்த்தங்கள் ஆகியவைபற்றியும் கோயிலைப் பற்றியும் எழுந்த தலபுராணங்களில் கோயிலில் உள்ளபல தெய்வ வடிவங்களையும், கதை வடிவமாக விளக்கி வைக்கின்றன. திருப்பத்தூர் புராணம், ஆண்டவனுடைய ஏழுவகை தாண்டவங்களையும் தெளிவுபடுத்துகின்றது. புராணம் எழுதியவர்களுக்கு கோயிலில் உள்ள விக்கிரகங்கள் உள்ளீடாக என்றும் அழியாது ஒளிரும் அழகு வடிவாகச் சிற்பிகண்ட காட்சியே ஆகும். அறக்கொடியோர் எல்லாம் தாம் செய்த கொடுமைக்கு அஞ்சி, ஆண்டவன் எதிரே மனம் மாறி நிற்கின்ற, அவர்களை ஆண்டவன் தன்அருளால் மேலுலகம் அனுப்புகின்ற கதைகள் பல இந்தப் புராணங்களில் வருகின்றன. மிகப் பழைய காலத்திலிருந்தே புராணக் கதைகளுக்குத் தத்துவார்த்தம் கூறும் வழக்கம் இருக்கின்றது.

தலபுராணங்களைப் பாடிய புலவர்களில் பெரும் பாலோர் சிறந்தநாடு எவ்வாறு இருக்கவேண்டும் எனக் கனவுகண்டு, இலக்கிய நயமெல்லாம் தோன்றப் பாடியுள்ளனர். பெரும்பகுதி உழவு முதலியவற்றைப் புனைந்துரைத்தாலும், அரசியல் அமைப்பினைப் பற்றியும் சிறிது காண்கிறோம். கள்வர் இல்லாமை, அனைவரும் செல்வராதல் முதலிய சமுதாய உயர்நிலைகள் காணப்பெறுகின்றன. தலபுராணம் பாடிய பெரியார்கள் எல்லாம் நாட்டுப் படலமும் நகரப்படலமும் பாடுவதனை மரபாகக் கொண்டுள்ளனர்.

புராணங்களில் நாட்டு வரலாறும் ஊர்களின் வரலாறும் சிலவற்றில் காணப்படுகின்றன. திருவிளையாடற் புராணத்தினால் பாண்டியர் வரலாறு தெரிகிறது. கோயிற்புராணம், இரணியவர்மன், சிம்மவர்மன் என்ற அரசர்கள் பெயர்களைச் சுட்டுகின்றது. இவர்கள் பல்லவ அரசர் குடியைச் சேர்ந்தவர்களோ என்று வரலாற்று ஆராய்ச்சியாளர் கருதத் தொடங்கியுள்ளனர்.

தஞ்சையின் பெரியகோவிலைப் பற்றியும் பதினாறு சோழ மன்னர்களைப் பற்றியும், [1]பிருகதீஸ்வர மாகாத்மியம் என்னும் தலபுராணம் கூறுகிறது. [2]தஞ்சபுரீமாஹாத்மியம் என்னும் நூல் தஞ்சாவூரில் விண்ணாற்றங்கரையில் உள்ள நீலமேகப் பெருமாள் கோவிலைப் பற்றியும் தஞ்சாவூர் எனப் பெயர் வரக்காரணம் என்ன என்பதையும் விளக்குகிறது. ஆண்டவனுடைய அடியார்களைப் பற்றிக் கூறும் நூலான திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணத்தில்) பல சரித்திர சான்றுகளை எடுத்தியம்புகின்றது. மேலும் சில புராணங்களில் சிறப்பாக நிகழ்ந்த குறிப்புகளையும், அத்தலத்திற்குச் சிறப்பைத் தெரிவிக்கும் செய்திகளையும் தொகுத்துக் கூறுகின்றன.

---

1, 2 சரஸ்வதி மகால் வெளியீடு

இதைப் போன்ற செய்திகளைத் தன்னகத்தே கொண்ட காரணத்தால் ஆய்வாளர்களின் ஆராய்ச்சிக்கு இப்புராணங்கள் பயனாக இருக்கும் என்பது கண்கூடு.

இத்தகைய புராணங்கள் பல இருந்த போதிலும். குறிப்பிட்ட தலங்களுக்கேயுரிய தலபுராணங்களும், காலப் போக்கில் தோன்றின. அவற்றில் அந்தந்த தலங்களிர் உறையும் மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றி அறிய முடியும். சில செய்திகளை மிகைப்படுத்தி கூறியிருந்தாலும், அவற்றில் நுணுகிக் காண்போமேயானால், செய்திகள் ஏராளமாக உள்ளன என்பதும், அதனுடைய அடிப்படை கருத்துக்களையே நாம் காணவேண்டும் என்பதும் காஞ்சி முனிவர் சங்கராச்சாரிய சுவாமிகளின் அருளுரை.

தலபுராணங்களின் அடிப்படையில் எழுந்த அருணாசலபுராணம், விருத்தாசலபுராணம், திருவோத்தூர் புராணம் ஆகிய மூன்று தலபுராணங்களின் சுருக்கங்கள் தற்போது வெளிவருகின்றன.

**1. அருணாசல புராணம்:**

ஸ்காந்தபுராணத்தில் உருத்திரசம்ஹிதையில் கூறப் படுகிறது.

**2. விருத்தாசல புராணம்**

பதினெட்டு மகாபுராணங்களில் பத்தாவது புராணமாகக் கூறப்பெறும் பிரம்மவைவர்த்தம் என்ற சிவபுராணத்தில் விருத்தாசலபுராணம் கூறப்படுகின்றது.

**3. திருவோத்தூர் புராணம்:**

ஸ்காந்த புராணத்தில், சங்க்ரஹ சம்ஹிதையில் சிவவாக்ய கண்டம் என்ற பிரிவில் திருவோத்தூர் புராண வரலாறு கூறப்பெறுகின்றது.

இந்த நூல்கள் வடமொழியில் இருந்து வசனநடையில் தமிழாக்கம் (சுருக்கம்) செய்யப்பட்டவை ஆகும். இந்நூலைத் தமிழாக்கம் செய்த கள்ளப்புலியூர் பர்வத சஞ்சீவி ஐயர், வசன சங்கிரகம் என்று ஒவ்வொரு புராணத்தின் ஆரம்பத்திலும் கூறியுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**தமிழாக்கச் சுருக்கம்:**

உலகிலேயே சுருங்கச் சொல்லுகின்றவன் அறிஞன். சுருக்கமாகிய நூல்களுக்குப் பெருமை அதிகம். வடமொழியிலே சுருக்கமாக அமைந்த நூல் பிரமசூத்திரம் . தென்மொழியிலே சுருக்கமான நூல்கள் திருக்குறளும் சிவஞான போதமும் ஆகும். ஐம்பது வார்த்தைகளைச் சொல்லி விளக்குவதைக் காட்டிலும் ஐந்து வார்த்தைகளால் விளக்குபவனே அறிஞன்.

ஆகவே நமது முன்னோர்கள் அறிவின் சிகரமானவர்கள். எதனை எப்படி செய்யவேண்டும் என்று நன்கு உணர்ந்தவர்கள் என்று அருள்மொழி அரசு, திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் அவர்கள் கூறியுள்ளார்கள். இவ்வழி வந்தவரே இந்நூலாசிரியர். இவரது சுருக்கமான தமிழாக்கம் எளிய நடையில் உள்ளது. வடமொழிச் சார்பாக அமைப்பு தழுவப்பட்டிருப்பதால் இவ்வமைப்பை மாற்றவில்லை. மணிப்பிரவாள நடையில் உள்ளதால் சில பதங்கள் வடமொழி உச்சரிப்பின்படியே உள்ளன. தமிழாக்கத்தின் அமைப்பு முறை நன்கு தெளிவாக இருப்பதால் வடமொழி உச்சரிப்புகளை மாற்றுவது அவசியமில்லாததால் உள்ளவாறே அச்சிடப்படுகிறது. மிகச் சுருக்கமாக வரும் இடங்களுக்கு அடிக் குறிப்புக் கொடுக்கப்பட்டுள்ளது.

மேலும் இந்நூலாசிரியர் புராணத்தில் வரும் சில கருத்து வேறுபாடுகளையும் அவரே சிறு குறிப்புப் போல் கொடுத்துள்ளார். முக்கியமான பல விஷயங்களை நயமாக எடுத்தியம்பியுள்ளார்.

**காலம்:**

இப்புராணங்களின் தமிழாக்கச் சுருக்கங்களை சுவடிகளின் இறுதியில் கொடுக்கப் பெற்றுள்ள கால அளவுகளைக் கொண்டு கீழே காணும் வண்ணம் வகைப் படுத்த முடியும். 1. அருணாசல புராணத்தை 2-4-1894லும், 2. விருத்தாசல புராணத்தை 25-1-1895லும், 3. திருவோத்தூர் புராணத்தை 1-2-1901லும் எழுதியுள்ளார் என்பதையும் அறியலாம்.

**சுவடி பற்றிய விளக்கமும் நூலாசிரியரும்:**

எமது நூலகத்தில் சிதம்பர புராணக்கருத்து என்ற தலைப்புள்ள ஓலைச்சுவடி தமிழ்ப் பிரிவு சுவடியில் 1161, D.1670 என்ற எண்ணில் பதிவாகியுள்ளது. இச்சுவடியில்

**அருணாசல புராணச் சுருக்கம்**
**விருத்தாசலபுராணச் சுருக்கம்**
**திருவோத்தூர் புராணச் சுருக்கம்**

என்ற மூன்று புராணச் சுருக்கமும் வசன நடையில் மணிப்பிரவாளத்தில் உள்ளன. இவருடைய கைப்பட எழுதிய சுவடிகள் வடமொழிப் பிரிவிலும், தமிழ்ப் பிரிவிலும் உள்ளன. இச்சுவடிகள் வித்வான் C. M. சிவராமகிருஷ்ண சாஸ்திரி M.A., B.O.L., அவர்கள் இந்நூலகத்திற்கு தமிழ்ப்பிரிவில் அளித்த 89 சுவடிகளில் இப்புராணச் சுருக்கமும் ஒன்றாகும். இச்சுவடி தமிழும், கிரந்தமும் கலந்த மணிப்பிரவாள நடையில் உள்ளது.

இந்நூலாசிரியர் கள்ளப்புலியூர் என்னும் ஊரினர் என்பதும் இவரது இயற்பெயரான பருவதசஞ்சீவி என்பதை மலைமருந்தன் என்று மாற்றி வைத்துக்கொண்டுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**இவர் எழுதிய வேறு நூல்கள்:**

1. தமிழிசைப் பாடல்கள்
2. *அருணாசலேசர் மீது வண்ணம்
3. *தாதுவருஷத்துக் கரிப்புக் கும்மி
4. ஜாவளிகள் (70 வகை ஜாவளிகள்)
5. *விரதங்கள் (வடமொழியில் இருந்து தமிழாக்கம் செய்தவை.)

**நன்றியுரை:**

இந்நூலைப் பதிப்பிக்கும் பணியினை எனக்களித்த எமது மகால் இயக்குநரும், மாவட்ட ஆட்சியருமாகிய திரு. T. R. இராமசாமி, இ. ஆ. ப., அவர்கட்கும், இம்மகால் நூலக நிருவாக அதிகாரி திருவாளர் அ. பஞ்சநாதன் எம். ஏ., பிலிப்.எஸ்ஸி., அவர்கட்கும் எனது நன்றி உரித்தாகிறது. இந்நூலைப் பதிப்பிப்பதற்கு அவ்வப்போது எனக்கு உதவிகள் செய்து பிழைத்திருத்தம் செய்வதற்கு முழுப்பொறுப்பையும் ஏற்றுக்கொண்டு பல உதவிகள் செய்த தமிழறிஞர் திரு. வ. வேணுகோபாலன் அவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலைப் படித்துப் பேறுபெற எல்லாம் வல்ல இறையருள் முன்னிற்கட்டும்.

**இங்ஙனம்**

திருமதி S. ராஜலெக்ஷ்மி,

சம்ஸ்கிருதப் பண்டிதர்

**சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.**

# அருணாசல புராணச் சருக்கக் கருத்து

1. **திருநகரச் சருக்கம்:** நதிகளின் பேரும் சிவஸ்தலங்களின் பேரும்

2. **திருமலைச் சருக்கம்:** பிரும்மாவினால் - லோகச் ருஷ்டி பிரும்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் யுத்தம், திருவண்ணா மலை உற்பத்தி அதை பிரும்மாவும், விஷ்ணுவும் பூஜை செய்தல்.

3. **திருஅவதாரச் சருக்கம்:** தக்ஷன் யாகம்-வீரபத்ரரால் அழிவு - ஈஸ்வரி ஜனனம் - சுவாமி தபசு - காமதஹனம், சுவாமிக்கு கல்யாணம் சுப்ரமண்யோத்பத்தி, சூரசம்ஹாரம்.

4. **திருக்கண் புதைத்த படலம்:** சுவாமியின் கண்களை அம்மன் மூடல், அம்மன் காஞ்சிபுரத்தில் - பூசை - கங்கை வருதல் - திருவண்ணாமலையில் போய் தபசு செய்தல்.

5. **இடப்பாகம் பெற்ற சருக்கம்:** மகிஷாசுரன் சம்ஹாரம், இடப்பாகம் பெறல்

6. **வஜ்ராங்கத பாண்டியன் சருக்கம்:** வஜ்ராங்கதன் வேட்டை - காந்தி சாலிக்கும், கலாதரனுக்கும் துருவாசர் கொடுத்த சாபவிமோசனம், சிவன் மாம்பழத்தை சுப்பிரமண்யருக்கு கொடுத்தல், வஜ்ராங்கத பாண்டியன் கிரிபிரதக்ஷணம்

7. **தீர்த்தச் சருக்கம்:** அருச்சகனும், தாசியும் உற்பத்தி, அருணாசல ஸ்தலத்திலுள்ள, தீர்த்தங்களில் ஸ்நானம் செய்கிற காலமும் அதனால் வருகிற பலனும்

8. **திருமலை வலம்புரிச் சருக்கம்:** அருணாசலத்தை பிரதட்சணம் செய்கிற கிரமமும், அதனால் வருகிற பலனும்,

9. **ஆதித்தச் சருக்கம்:** சிவனைப் பழித்தவர் - அடைகிற துன்பமும், சூரியன், அருணாசல பிரதட்சண கதையும்.

10. **பிரதக்தச் சருக்கம்:** சிவன் பொருளைத் திருடினவர் அடைகிற துன்பங்களும், பிரதக்த ராஜன் சிவ பூஜையால் குரங்குமுகம் நீங்கின கதையும்.

11. **பாபம் தீர்த்தச் சருக்கம்:** அஷ்டவசுக்கள் செய்த பாபம் பிரும்மா, திலோத்தமைமேல் மோகித்த - பாபம், சிவனால் லோகமுண்டாக விஷ்ணு பயந்து சிவனை பூஜித்தல்

12. **புளகாதிபச் சருக்கம்:** புளகாசுரன் கதை

13. **வல்லாள மகாராஜா புராணம்:** சுவாமியானவர் வல்லாள மகாராஜனுடைய தரும பலத்தை சோதித்து தாமே பிள்ளையாக அவதரித்த கதை.

**நூலாசிரியர் குறிப்பு**

மூன்றாவதான திருவவதார சருக்கத்தில் சொன்ன கதை ஸ்காந்தத்தில் சொன்ன கதை.

# அருணாசல புராண சுருக்கம்

**திருநகரச் சருக்கம்:**

ஸ்ரீ கைலாச கிரியின் உச்சியில் இரத்தின மண்டபத்தில் இரத்தின சிம்மாசனத்திலே ஸ்ரீ நந்திகேசுவரர் வீற்றிருந்தார். அப்போது, மார்க்கண்டேய ரிஷியானவர் அநேக ரிஷிகளுடன் போய், அந்த நந்திகேசுவரரை வணங்கி சுவாமி நாங்கள் மோட்சம் அடையும் படியான வழியை எங்களுக்கு அருளிச் செய்ய வேணுமென்று கேட்க, அதற்கு நந்திகேசுவரர் சொல்லுகிறார்.

கேளும் மார்க்கண்டேயரே, பூமியிலிருக்கிற அநேக புண்ய நதிகளில் போய் ஸ்நானம் செய்தால் அவைகள் உங்களது பாபத்தைப் போக்கும். காசி, சிதம்பரம், கேதாரம், மல்லிகார்ச்சுனம், காளஹஸ்தி, காஞ்சிபுரம், விரிஞ்சிபுரம், சீர்காழி, திருவையாறு, திருவிடைமருதூர், கும்பகோணம், திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி, இரத்தினகிரி, மதுரை, இராமேச்சுவரம், இவைகளில் போய் இறந்தாலும், பிறந்தாலும், சுவாமியை தரிசித்தாலும், பூஜித்தாலும், ஆலயம் கட்டி வைத்தாலும் நந்தவனம் வைத்தாலும், நல்ல மோட்சகதி உண்டாகும் என்றார்.

அதற்கு மார்க்கண்டேயர், தேவரீர் சொன்ன நதிகளிலும் ஸ்தலங்களிலும் போய், தாங்கள் சொன்னதைச் செய்ய வேண்டியதற்கு, தேவர், சித்தர், முனிவர் இவர்களாலும் ஆகாது. அப்படியிருக்க, மனுஷ்யர்களால் எப்படி முடியும்? ஆகையால், தேவரீர் சொன்ன நதிகளிலும், ஸ்தலங்களிலும்

போய் அநேக காலம் ஸ்நானம் செய்து தரிசனம் செய்கிறதால் வருகிற பலத்தை கொஞ்ச காலத்திலேயே வருத்தப்படாமல், எளிதில் கொடுக்கும்படியான ஒரு ஸ்தலத்தை, அடியேனுக்கு அருளிச்செய்ய வேணும் என்று கேட்டு வணங்க, நந்திகேசுவரரானவர் அருணாசல ஸ்தலத்தை நினைத்துப் பரவசமாகி, தோத்திரம் செய்து சொல்லுகிறார்.

கேளும் மார்க்கண்டேயரே! அருணாசல ஸ்தலத்தின் மகிமையானது, எதிலும், அதிகம் என்று சொல்லி அதன் பெருமைகளை விவரித்துச் சொல்ல, அதை மார்க்கண்டேயர் கேட்டு சந்தோஷமாகி, நீர் சொல்லியது எனக்கு நிச்சயப்படவில்லை என்றார். அதற்கு நந்திகேஸ்வரர் அந்த சந்தேகத்தைப் பின்பு சொல்லுகிறோமென்று சொல்ல, அதற்கு மார்க்கண்டேய ரிஷியானவர், சிதம்பரத்தைத் தரிசனம் செய்தாலும் காசியில் இறந்தாலும், திருவாரூரில் பிறந்தாலும், அருணாசலத்தை நினைத்தாலும் மோக்ஷம் உண்டாகுமென்று அருளினீர்.

இந்த நான்கு ஸ்தலங்களும் ஒன்றுக்கொன்று சமம் என்று சொல்லாமல், அருணாசலத்தை மாத்திரம் அதிகமென்று சொன்னது என்ன என்று கேட்க, அதற்கு நந்திகேசுவரரானவர், அருணாசலத்தின் மஹத்துவமும், அதனால் உற்பத்தியான மரம் முதலானவைகள் அடைந்த புண்ணியமும், அதில் தவம் செய்தவர்கள் அடைந்த சுகமும் அருணாசலத் தலத்தை பிரதட்சணம் செய்தவர்கள் அடைந்த சுகமும் ஆகிய இவை முதலானவைகளை விவரித்துச் சொன்னார்.

**முதல் சருக்கம் முற்றும்**

## 2. திருமலைச் சருக்கம்

முன்பு நந்திகேசுவரர், சொன்னதை, மார்க்கண்டேயர் கேட்டு சந்தோஷமாகி, பரமசிவன் அக்கினி, மலையானதையும், அதைப் பிரும்மாவும், விஷ்ணுவும் அதன் அடி முடி தேடி வருத்தப்பட்டதையும், சுவாமியானவர் அவர்களுக்கு அனுக்கிரஹம் செய்ததையும் சொல்ல வேணுமென்று நந்திகேசுவரரை வணங்கிக் கேட்க, நந்திகேசுவரர் சொல்லுகிறார்.

"கேளும் மார்க்கண்டேயரே! பிரும்மாவானவர் உலகத்திலுள்ள தேவர்கள் ராக்ஷசர்கள், முனிவர்கள், சூரிய சந்திரர்கள் அஷ்டதிக்பாலகர்கள் இவர்கள் முதலான எல்லோரையும் படைத்து நம்முடைய ஸ்ருஷ்டியி னாலல்லவா சகலரும் உண்டானார்கள் என்று அகங்காரம் கொண்டு, வைகுண்டத்துக்குப்போய், விஷ்ணுவைப் பார்த்து, தான் சிருஷ்டி செய்ததைச் சொல்லி, விஷ்ணுவைப் பழித்துப் பேசி, இருவரும் ஒருவருக்கொருவர் பழித்துப் பேசிக் கோபத்துடன் ஒருவரையொருவர் எடுத்து ஆகாயத்தி லெறிந்து, பெருஞ்சண்டை செய்தார்கள். அதனால் உலகத்தில் அதிக துன்பங்கள் உண்டாயின. தேவர், முனிவர், தேவேந்திரன், இவர்களும் அதிக துன்பத்தை அடைந்தனர். தேவேந்திரனானவன் தேவர்கள் சகிதமாய் கைலாசத்திற்குப்போய், பரமசிவனை வணங்கி, பிரும்மா, விஷ்ணுவின் சண்டையை நீக்கி எங்களைக் காக்க வேண்டுமென்று கேட்க, பரமசிவன் அவர்களுக்குத் தைரியம் சொல்லி அனுப்பிவிட்டு அந்தச் சண்டை நடக்கிற இடத்தில் ஒரு பெரிய அக்னி மலையாய் எழுந்தருளினார். அப்போது

அவர்கள் சண்டை செய்வதை விட்டு, இந்த மலையின் அடியையாவது, முடியையாவது அறிகிறவரே பெரியவர் என்று சொல்லி, விஷ்ணு, வராகரூபங்கொண்டு அடியை அறிந்து வருகிறேனென்று, பூமியில் போய்த் திரும்பினார். பிரும்மாவானவர் அன்னமாய் உருவெடுத்து, முடியை அறியப் போகும்போது பல காலம் வரையில் போயும், முடி அகப்படாததினால், இனிமேல் நாம் முடியைக் கண்டோமென்று பொய்யாவது சொல்ல வேணும், அதற்கு சாட்சி ஒருவரும் இல்லையேயென்று நினைத்தார். அப்போது அவர் எதிரே ஒரு தாழம்பூவின் இதழானது பரமசிவன் முடியிலிருந்து நழுவி அவர் எதிரில் வந்தது. அதை அவர் கையில் பிடித்து விசாரித்து நான் (பிரும்மா) இந்த மலையின் முடியைக் காண வெகுகாலமாய் வந்தும் அது அகப்படவில்லை. இனிமேல் எனக்குப் போகச் சக்தியில்லை. ஆகையால், நான் சிரசைப் பார்த்தேன் என்று நீ சாட்சி சொல்ல வேண்டுமென்று ரொம்பவும் வேண்டிக்கொண்டார். அதற்கு, அநேக தர்மசாஸ்திரங்களைச் சொல்லி சம்மதப்படுத்தி, பூமியில் வந்து விஷ்ணுவைப் பார்த்து, நான்பரமசிவன் முடியைப் பார்த்து விட்டு வந்தேன் என்றார். தாழம்பூவும் மெய்தா னென்று சொல்லிற்று. அப்போது அந்த அக்கினிமலையானது, படீலென்றுவெடிக்க அதில் பரமசிவன் எழுந்தருளினார்.

அதை பிரும்மா பார்த்து, பயம் கொண்டார். விஷ்ணு, பரமசிவனைப் பாடி வணங்கி நிற்க, சுவாமியானவர் இவருடைய பக்தியை அறிந்து, இவர் கேட்ட வரங்களைக் கொடுத்து, பிரும்மாவைப் பார்த்து, நீ பொய் சொன்னதால் உனக்குப் பூமியில் கோவிலும் பூஜையும் இல்லாமல் போகக் கடவது என்று சொல்லி, தாழம்பூவைப் பார்த்து நீ பிரம்மா வுக்காகப் பொய் சாட்சி சொன்னதால் இது முதல் நான்

தரிசிக்க மாட்டேன் என்று சொல்லிக் கோபித்தார். அப்போது பிரும்மா, அதிக பயம் கொண்டு சுவாமியைப் பலவாறாகத் தோத்திரம் செய்து வணங்க, அப்போது, பரமசிவன் பிரும்மாவுக்குத் தைரியம் சொல்லி, முன்போல ஸ்ருஷ்டித் தொழில் செய்யும்படிக் கட்டளையிட்டார். ஈசுவரன், விஷ்ணுவைப் பார்த்து, தேவர்களும், இந்திரனும், தன்னிடத்தில் வந்து சண்டை செய்கிறதைச் சொன்னதும், அதற்காகத்தான் மலையுருவாய் ஆகி, அவர்களை சோதித்ததையும், அருணாசலத்தின் மகிமையையும் சொன்னார். உடனே பெரிய அக்கினி மலையானது குறுகி, சின்னமலையாயிற்று.

பிரும்மாவும், விஷ்ணுவும் இதனைப்பார்த்து ஆச்சரியப்பட்டு, இந்த மலையின் பிரகாசத்தை யாரும் பார்க்கக் கண் கூசுவதால் இந்த மலையின் பிரகாசம் மங்கியிருக்க வேண்டும் என்று கேட்க சிவன் அப்படியே செய்தார். பிறகு, அவர்கள் இந்த மலையின் நுனியில் ஒரு பிரகாசம் எந்நாளும் தெரியும்படியாய் அருள் செய்யவேண்டும் என்று கேட்க அதற்கு பரமசிவன் கார்த்திகை மாசத்தில் கிருத்திகை நட்சத்திரத்தில் ஒரு பிரகாசம் காண்போம் என்று சொல்லி அருணாசலத்தின் மகிமையையும் சொன்னார். அப்பால், அவர்கள் நாங்கள் பூசை செய்ய தேவரீர் ஒரு லிங்க ரூபமாய் இருக்கவேண்டும் என்று கேட்க, பரமசிவன், அப்படியே செய்யுங்கள் என்று சொல்லி மலைக்குள்ளே மறைந்து அங்கே ஒரு லிங்கமானார். அதை, அவர்கள் பார்த்து, தேவதச்சனால் அங்கு ஆலயம் செய்வித்து, மரவுரி தரித்து, சிவவேடம் தரித்து, அந்த லிங்கத்தை பதினான்காயிரம் ஆண்டுகள் பூசை செய்து, உத்தரவு பெற்றுக்கொண்டு, அவரவர் இடம் போய்ச் சேர்ந்தார்கள்.

**இரண்டாம் சருக்கம் முற்றும்.**

# 3. திருஅவதாரச் சருக்கம்

நந்திகேசுவரர் சொல்கிறார். "கேளும் மார்க்கண்டேயரே" பிரும்மாவின் பிள்ளையான தட்சன் அரியதானதவங்களைச் செய்து உயர்ந்த வரங்களைப் பெற்று மிகவும் சிறக்க வாழ்ந்திருந்தான். அந்தக் காலத்திலே தட்சணானவன் தனக்கு பரமசிவன் எழுந்து மரியாதை செய்யவில்லை என்று கோபம் கொண்டு தன் வீட்டுக்கு வந்து, சிவனுக்கு, தான் மேலாக வேண்டுமென்று நினைத்து சிவனை நீக்கி, மற்ற தேவர்களை எல்லாம் கூட்டிக்கொண்டு ஒரு பெரிய யாகம் செய்ய எத்தனித்தான். அதைப் பார்வதி அறிந்து அந்த யாகத்திற்குப் போகிறேனென்று சுவாமியை உத்தரவு கேட்க அதற்கு அவர் தட்சன் என்னை நீக்கிவிட்டு யாகம் செய்வதால், நீ போகக்கூடாது என்று தடுக்க, அதற்கு ஈஸ்வரி ஸ்வாமிக்கு அநேக ஸமாதானம் செய்து உத்திரவு வாங்கிக்கொண்டு போய் தன் தாயையும் தந்தையான தட்சனையும் வணங்கினாள். அவர்கள் அம்மனைத் தழுவி உபசாரம் சொல்லாமல் இருந்தார்கள். அதை அம்மன் அறிந்து கோபித்து, சாபம் கொடுத்துவிட்டு கைலாசத்திற்கு போய் சுவாமியிடம் இந்த சங்கதிகளைச் சொல்லிவிட்டு சுவாமியின் உத்திரவின் படிக்கு யோகத்தில் இருந்து பிராணனை விட்டு இப்பர்வதராசனுக்குக் குமாரியாகப் பிறந்தாள்.

இவள் கதை இப்படியிருக்க, முன்னே அம்மன் சொன்னவுடன், சுவாமியானவர் அதிக கோபம் கொள்ள அப்போது, அவர் நெற்றிக் கண்ணிலிருந்து, பத்து சிரசுடன் வீரபத்திரர் உண்டாகி பரமசிவன் முன்னின்று "என்னை அழைத்த காரணம்" என்ன என்று கேட்டார். அதற்குச் சுவாமியானவர் "நீபோய் தட்சன் செய்கிற யாகத்தை அழித்துவிட்டு வா" என்று சொன்னார்.

வீரபத்திரர் தேர் மேலேறி அநேகமான பூத சேனைகளுடனும் அநேக வாத்தியங்களுடனும், புறப்பட்டுப்போய் தட்சன் யாகத்தை அழித்து, தட்சனின் தலையை அறுத்தார். தேவர்களை வாரி எடுத்து வீசினார். அஷ்டதிக் பாலர்கள் வந்தெதிர்க்க அவர்களைப் பூதங்கள், எடுத்து ஆகாயத்தில் பந்து போலெறிந்தார்கள். வீரபத்திரர் சூரியனை பல்லும், கண்ணும் தெறிக்கும்படியாயடித்து, சந்திரனைத் தள்ளி, காலால் தேய்த்தார். அப்போது முன் இறந்தவைகள் பிசாசாகி வந்து எதிர்க்க அவர்களை வீரபத்திரர் அடித்துக் கொன்றார். பிரம்மா இறந்து போனவர்களை யெல்லாம் க்ஷணத்தில் உண்டாக்க அவர்கள் போய் மறுபடியும் எதிர்க்க அவர்களை வீரபத்திரர் கொன்று விட்டு பிரும்மாவையும் கொன்றார். அப்போது விஷ்ணு போய் எதிர்த்து சண்டை செய்து கோபித்து சக்ராயுதத்தைப் பிரயோகிக்க அது போய் வீரபத்திரர் பாதத்தில் விழுந்து பணிந்தது. பின்பு விஷ்ணுவானவர் பன்றியாகவும், சிம்மமாகவும் உருவெடுத்துப் போய் சண்டை செய்ய அவற்றை வீரபத்திரர் கொன்றார். பின்பு விஷ்ணுவானவர் மீனுருவமெடுத்து சமுத்திரத்தில் போய் ஒளிந்து கொண்டார். இந்தப் பிரகாரமாக வீரபத்திரர் செய்துவிட்டு, கைலாசத்தில் போய், சுவாமியை பணிந்து, தான் போய் நடத்தின சங்கதிகளைச் சொல்ல சுவாமியானவர் கோபம் நீங்கி கிருபையுண்டாகி யாகத்தில் இறந்த தேவர்கள் முதலானவர்களைப் பிழைக்கச் செய்து அனுப்பி விட்டு தட்சனுக்கு ஆட்டுத் தலையை வைத்துப் பொருத்தி எழுப்பிவிட்டு யோக நிஷ்டை செய்திருந்தார்.

இவை இப்படியிருக்க முன்னே அம்மன் மலையரசர் வீட்டில் உதித்தவுடன் நாரதர்போய் அம்மனுடைய இலக்கணங்களைப் பார்த்து (இமவானை) ராஜாவைப் பார்த்து, "உன்னுடைய குமாரிக்கு பரமசிவனே கணவனாக

வந்து அமைவான்" என்று சொல்லிவிட்டுப் போனார். அதை அரசர் கேட்டு மகிழ்ந்திருக்கும்போது, சிலநாள் கழித்து ராஜாவானவர் பரமசிவன் யோக நிஷ்டையில் இருக்கிறார் என்று கேள்விப்பட்டு அம்மனையும் அவளது தோழிகளையும் அழைத்துக்கொண்டு போய் சுவாமியைப் பணிந்து, சுவாமிக்கும் பணிவிடை செய்யும் படியாய் அங்கேயே விட்டு விட்டுப் போனார்.

இது இப்படியிருக்க தேவர்களும், அஷ்டதிக் பாலர்களும் தாரகாசுரனால் அதிக சங்கடத்தை அடைந்து, அதை சத்தியலோகத்தில் போய் பிரும்மாவைப் பணிந்து சொல்ல, அதற்கு அவர் எவராலும் அவனைக் கொல்ல இயலாது. பர்வதராஜன் புத்ரியான பார்வதியிடத்தில் சுப்ரமணியர் அவதரித்து, அவனைக் கொன்று உங்களை ரக்ஷிப்பார். அதற்கு நீங்கள் இப்போது யோக நிஷ்டையில் இருக்கிற பரமசிவன், அதிசீக்கிரத்தில் பார்வதியை விவாகம் செய்யும்படிக்குச் செய்யுங்கள்" என்று சொல்லி அவர்களை அனுப்பினார். அவர்கள் தேவலோகத்திற்குப் போனார்கள். இந்திரன் மன்மதனை அழைப்பித்து சுவாமியின் யோகத்தை அழிக்கவேணுமென்று சொல்ல அப்பால் தேவேந்திரன் அவனுக்கு, அநேக உபசார வார்த்தைகள் சொல்ல, மன்மதன் அதற்குச் சம்மதப்பட்டு கைலாசத்தில் போய் சுவாமியின் மார்பில் புஷ்ப பாணத்தை விட்டான். அப்போது சுவாமி நெற்றிக்கண்ணைத்திறந்து பார்க்க, மன்மதன் எரிந்து,

---

குறிப்பு: இந்தத் தாரகன் என்பான் சூரபன்மனது தம்பியாகிய தாரகனல்லன் திரிபுரத்து அரசர்களாகிய தாரகாக்கண், கமலாக்கண், வித்துன்மாலி என்னும் மூவருக்கும் தந்தை இவனாகும் இவன் சரித்திர விரிவை சிவரகசியம் திருக்கூவப்புராணம் என்பவற்றிற் காண்க

(அருணாசலபுராணம் பக்கம் -218)

சாம்பலானான். பின்பு சுவாமி சிவகணங்களுடன், கைலாசத்திற்குப் போய், சப்தரிஷிகளை அழைப்பித்துப் பர்வதராஜனிடம் அனுப்பி விவாகம் பேசிவரச் சொன்னார். பிரும்மா, விஷ்ணு, இந்திரன் முதலான எல்லோருக்கும் ஓலை அனுப்பி வரவழைத்து, அழைத்துக்கொண்டு, ரிஷபத்தின் மேலேறி பர்வதராஜன் வீட்டில்போய் மகாசம்பிரமத்துடன் பார்வதியைக் கல்யாணம் செய்து, அம்மனை அழைத்துக்கொண்டு கைலாசமடைந்து மன்மதனை எழுப்பினார். அப்பால் விநாயகரும், சுப்ரமணியரும் ஈஸ்வரியிடத்தில் பிறக்க சுவாமியானவர் சுப்பிரமணியருக்கு வேலாயுதத்தைக் கொடுத்து சூரபத்ம சம்காரம் செய்து விட்டு வாவென்று சொல்லியனுப்ப அவர் போய் தாரகாசுரனைச் சண்டை செய்து கொன்று விட்டு, கைலாசத்திற்கு வந்தார்.

**மூன்றாம் சருக்கம் முற்றும்**

## 4. திருக்கண் புதைத்த சருக்கம்

நந்திகேசுவர் சொல்கிறார்: கேளும்! மார்க்கண்டேயரே! ஸ்ரீ பரமேசுவரனும் பார்வதியும் கைலாசத்தில் பலவிதமாக விளையாடிக்கொண்டிருந்தார்கள். அப்போது பார்வதி எழுந்து, சுவாமியைப் பணிந்து, "சுவாமி! சந்திரனும், சூரியனும் யார்" என்று கேட்க, அதற்குச் சுவாமி, "அவர்கள் இருவரும் நம்முடைய கண்கள்" என்று சொல்ல, அம்மன் வேடிக்கையாகத் தன் இரண்டு கைகளால், சுவாமியின் இரண்டு கண்களையும் மூடினார். அப்படி மூடின அளவில் பூமி இருளடைந்தது. பூமியிலிருக்கின்ற வையமெல்லாம் ஸ்தம்பித்து, பிரும்மா, விஷ்ணு முதலான சகலரும் குருடராகி,

சுவாமியிடத்தில் போய் முறையிட, சுவாமி அவர்களுக்குத் தைரியம் சொல்லி, ஈசுவரியின் கைகளை அப்புறம் எடுக்கச் சொல்லித் தன்மூன்று கண்களையும் திறந்து பார்க்க பன்னிரண்டு கோடி சூரியர்கள் உதித்தாற்போல பிரகாசமுண்டாகி ஏழு உலகமும் இருள் நீங்கிற்று. அதை ஈசுவரி பார்த்துப் பயந்து "சுவாமி இந்த ஏழு உலகமும் இருளடைந்து அதில் இருக்கிற பிராணிகளெல்லாம் அவஸ்தைப்பட நான் உங்கள் கண்களை மூடி சம்பாதித்துக்கொண்ட பாவமானது, எங்கே போய் தபசு செய்தால் நீங்குமென்று கேட்க, அதற்குச் சுவாமியானவர், உன்னை பாபம் சேராது, மற்றவர்கள் செய்த பாவமானது நீ தபசு செய்யவேணுமானால், அயோத்தி முதலான [1]முக்தித்தலங்கள் ஏழில் மேன்மையான காஞ்சி புரத்திற்குப்போய் சிவனை பூசை செய்து, தபசு செய்தால் பாபம் நீங்கும்" என்றார்.

அதை, ஈசுவரி கேட்டு சுவாமியினிடத்தில் உத்தரவு வாங்கிக்கொண்டு, புறப்பட்டு, காஞ்சிபுரத்தில் கம்பாநதியின் பக்கத்தில் போய் நீராடி, அனுட்டானம் செய்து, மணலைக் குவித்து, லிங்கமாகச்செய்து வேத விதிப்படி பக்தியுடன் பூசை செய்தாள். அப்போது, சுவாமி, ஈஸ்வரியின் மனோபலத்தை அறிவதற்காக, அந்த நதியில் கங்கையைப் பெருகி வர செய்ய, அப்போது, ஈசுவரி அந்த மணல் லிங்கத்துக்கு அபாயம் வரும் என்று நினைத்து அந்த லிங்கத்தைக் கைகளால், மார்புடன் அணைத்துக் கட்டிக் கொண்டாள். அப்போது, அந்தக் கம்பை

---

குறிப்பு: முத்தித்தலங்கள் ஏழு

1 மதுராபுரி, மாயாபுரி, காசி, அவந்தி, துவாரகாபுரி, அயோத்தி, காஞ்சி

நதியானது, இரண்டாய்ப் பிரிந்து, லிங்கத்தைச் சுற்றிக்கொண்டு போயிற்று. அப்பால் பரமசிவன் ரிஷப வாகனத்தில் மேலேறித் திருக் கூட்டத்துடன் வந்து தரிசனம் கொடுத்து, "உனக்கு என்னவரம் வேண்டும்" என்று கேட்க அதற்கு ஈஸ்வரியானவள், "உம்முடைய இடது பாகத்தை எனக்கு கொடுக்க வேண்டுமென்றாள்".

அதற்கு சுவாமியானவர், "இதற்குத் தெற்கில் இருக்கிற அருணாசல ஸ்தலத்தில் வந்து தபசு செய்தால் இடது பாகம் தருவோம்" என்றார். அதற்கு ஈஸ்வரியானவள், கைலாசம், காசி இதைவிட காஞ்சிபுரம் அதிகமென்றீர், இப்போது இதைவிட அருணாசலம் அதிகம் என்கிறீர். ஆதலால் அதன் பெருமையைச் சொல்ல வேணும் என்று கேட்க, சுவாமியானவர் அருணாசல ஸ்தலப்பெருமையை நன்றாய்ச் சொல்லிக் கைலாசமடைந்தார். அப்பால், ஈஸ்வரியானவள் முத்துப் பல்லக்கிலேறி, கணபதி, முருகர், சப்தகன்னி, சிவகணங்கள், பைரவர், இவர்களுடன் புறப்பட்டு இரண்டு காத தூரம் போய் அங்கே வாழை மரத்தால் பந்தல் போட்டு, அதில் வீற்றிருந்து, சுப்ரமண்யரைப் பார்த்து நாம் சந்தியா வந்தனம் செய்ய உன் வேலாயுதத்தை விட்டு ஜலம் அழைப்பியும் என்று சொல்ல அவர், வேலாயுதத்தை மேற்கே விட - அது போய் போதவான் முதலான ஏழு பேரையும் அவர்களிருந்த ஏழு மலைகளையும் பிளந்துகொண்டு சமுத்திரத்திற்குப் போய் ஜலம் கொண்டு வந்தது. அதுவே சேயாறு என்ற பெயராயிற்று. அந்த நதியில் அம்மனானவள் ஸ்நான, ஜப, தப, அனுஷ்டானம் செய்துகொண்டு, வாழைப் பந்தலில் வீற்றிருந்து, "ஆற்று நீர் சிவந்திருப்பது ஏன் என்று சுப்ரமண்யர் கேட்டதற்கு"

அநந்தமாபுரத்தில் ஏழு பிராமணர்கள் தபசு செய்த கதையைச் சொல்லி மறுநாள் உதயத்தில் அந்த நதியில் ஸ்நான, ஜப, தபசு, அனுஷ்டானம் செய்து புறப்பட்டு அருணாசல ஸ்தலத்தில் கௌதமர் ஆஸ்ரமத்தில் போய் சேர்ந்து அவருடன், பரமசிவன் சொற்படிதான் நடத்தின விதங்களைச் சொல்லி திருவண்ணாமலைக்குக் கிழக்குப் பக்கத்தில் பர்ணசாலை செய்வித்து அதில் போய் சப்தமாதர்கள் முதலானவர்களை சுற்றி காவல் வைத்து நெருப்பில் நன்றாய் காய்ச்சிய செப்பூசியில் இடது காலை ஊன்றி வலது காலை மடித்து இடது துடையில் வைத்து சுவாமியை நோக்கி அகோர உக்ர தபசு செய்தாள். அப்போது, பிரும்மா, விஷ்ணு முதலான சமஸ்த தேவர்களும் வந்து ஈசுவரியைப் பணிந்து மஹிஷாசுரனால் தாங்கள் சங்கடப்படுவதைச் சொல்ல, ஈசுவரியானவள், துர்க்கையம்மனைப் பார்த்து, நீ போய் மஹிஷாசுரனை சம்ஹாரம் செய் என்றார். பின்பு பிரும்மா, விஷ்ணு முதலான சமஸ்த தேவர்களெல்லாம் அவர் அவர்கள் இடம் போய்ச சேர்ந்தார்கள்.

**நான்காம் சருக்கம் முற்றும்**

குறிப்பு:

ஊசியிலோர்கால்விரலை யூன்றியொரு கான்மகுத்து
நரசிமிசை வழியை நாட்டி யழன் மூட்டித்
தேசினமு துருக்கித் தெள்ளமுதையுண்டு தவக்
கோசிகனைப் போன் முயல்வார் கோடானு கோடியே.
(அருணாசலப்புராணம்)

குடத்தின் மேல் பொன்னூசி கூரியவாள் தானிருத்தி
பொன்னூசி மேலேயவள் பெருவிரலைத் தானூணி
அரகராவென்று ஈசுவரியால் அருந்தவத்துமீ தேறி
சிவசிவாவென்று சொல்லி தேவி தவசிருந்தாள்.
(காமாட்ச தவசு)

## 5. இடப்பாகம் பெற்ற சருக்கம்

நந்திகேஸ்வரர் வாக்கியம்: கேளும் மார்க்கண்ட மகரிஷியே நீலகிரியில் இருக்கின்ற மஹிஷாசுரனானவன் (மாம்சத்துக்காக) நூறு ராட்சசர்களை கூட்டிக்கொண்டு வேட்டையாடப் புறப்பட்டான். அப்போது அவனுடன் வந்த நூறு ராக்ஷஸர்களும், அம்மன் தவம் செய்கிற வனத்தை வந்து சுற்றிக்கொள்ள ஈசுவரிக்கு காவல் இருந்த அஷ்டபைரவர்கள் அந்த நூறு பேரையும் கொன்றார்கள். அதில் சிலர் போய் அதை மஹிஷாசுரனிடம் சொல்ல அவன் அதிக கோபமாகி நூறு பச்சைக் குதிரை கட்டின தேர் மேலேறி நால்வகை சேனையுடன் வந்து ராட்சசர்களால் அநேக மலைகளை அம்மன் தவசு செய்கிற இடத்தில் விட்டெறிய - அஷ்ட பைரவர் போய் நிகும்பாசுரனை சேனைகளுடன் கொன்றார். இதைத் தூதர் போய் மஹிஷாசுரனுக்குச் சொல்ல அவன் நூறு யானை கட்டின தேரிலேறி நூறு ராட்ஸஸ வெள்ளத்துடன் புறப்பட்டு அம்மன் தபசு செய்கிற வனத்திற்கு வந்தான். அதை அங்கே தபசு செய்கிற ரிஷீஸ்வரர் போய் பார்வதிக்குச் சொல்ல பார்வதியானவள் துர்க்கை அம்மனை ஏவினாள்.

---

**ஆசிரயரின் பின்குறிப்பு:**

**மகிஷாசுரன் வரலாறு:** இடப்பாகம் பெற்ற சருக்கத்தில் சொன்ன மகிஷாசுரன் வரலாறு அறிய அகஸ்தியர் முதலிய ஐம்பது ரிஷிகள் கூடி வரமுனியின் ஆசிரமத்திற்குப் போனார்கள். இவர்களுக்கு அவர் மரியாதை செய்யாதிருந்தார். அப்போது அவர்கள் வரமுனியை எருமைக்கடா முகமுள்ள மகிஷாசுரனாக பிறக்கும்படி சாபம் கொடுக்க, அவன் அப்படியே பிறந்து காட்டில் வேட்டையாடப் போய் ,அங்கே கையில் ஸ்படிக லிங்கத்தை வைத்துக்கொண்டு தபசு செய்கிற மன்னத ரிஷியை லிங்கத்துடன் எடுத்து சாப்பிட அந்த லிங்கம் அவன் கழுத்தில் சிக்கிக் கொண்டது.

துர்க்கையானவள் யாளிவாகனத்தில் ஏறி அஷ்டபைரவர், ஸப்தமாதர்கள் முதலானவர்களுடன் புறப்பட்டுபோய் மஹிஷாசுரனுடன் பெருஞ்சண்டை செய்து அவனுடைய பாதி சேனைகளைக் கொன்றார்கள். அப்போது மஹிஷாசுரன் கோபித்துத் துர்க்கையின் சேனைகளைத் துரத்த அவை பயந்து ஓடிப்போய் காட்டில் ஒளிந்து கொண்டது. அதைத் துர்க்கை அம்மன் பார்த்து மனம் தளர்ந்து ஈஸ்வரியை தியானிக்க அம்மன் உத்தரவால் ஆகாசத்தில் அறுபத்திநான்குகோடி யோகினி சக்திகள் இரைச்சலிட்டெழுந்து நெருப்பு மழையையும், இடியையும் பொழிய மஹிஷாசுரன் சேனைகள் எரிந்து போயிற்று. அப்போது மஹிஷாசுரன் கோபித்து வந்து சண்டை செய்ய சப்தமாதர்கள் அவனுடைய சேனையைக் கொன்றார்கள். அப்பால் துர்க்கையானவள் மஹிஷாசுரனுடன் வெகுநேரம் பெரும் சண்டை செய்து அவனைக் கொல்ல, அவன் யானை-முகம்-குதிரை முகம்-அக்னி, ஜலபிரளயம் இருட்டு, பிரும்மா, விஷ்ணு இதைப் போல ரூபம் கொண்டு வந்து எதிர்க்க, அவைகளை எல்லாம் துர்க்கையானவள் கொன்று, இவன் என்ன செய்தும் சாகவில்லையே என்று மனம் சோர்ந்து ஈஸ்வரியை தியானித்தாள்.

அப்போது ஈஸ்வரியின் உத்தரவால், இந்த மஹிஷாசுரனானவன் மாயவேஷம் கொண்டு வந்தபோது கொன்றால் சாகமாட்டான், எருமைக்கடா முகம் கொண்டு வருகிறபோது அவன் தலையை வெட்டி உன் காலால் மிதித்துக் கொண்டால் சாவான் என்று ஆகாசத்தில் அசரீரி வாக்குண்டாயிற்று. அதைத் துர்க்கை அம்மன் கேட்டுத் தைரியமாகி அவனுடன் சண்டை செய்ய-அவன் அநேக மாயரூபங்கொண்டு எதிர்த்து சண்டை செய்து அப்பால் எருமைக்கடா முகமாகி வந்து சண்டை செய்தான். அப்போது

துர்க்கையானவள் அவன் தலையை வாளால் வெட்டி காலின் கீழே போட்டு மிதித்து அவன் கழுத்திலிருந்து ஸ்படிக லிங்கத்தை ஈஸ்வரி கையில் கொடுத்து நடந்த சங்கதிகளைச் சொன்னாள். அந்த லிங்கமானது, ஆசையால் அம்மன் கையை விடாமலிருக்க அம்மன், மஹிஷாசுரன் கழுத்தில் லிங்கம் வந்த கதையைக் கௌதம முனிவரால் அறிந்தாள்.

**அறுபத்து நான்கு ஸ்படிக லிங்க கதை**

மன்மதரிஷியானவர் ஸ்படிகலிங்கத்தை கையில் வைத்துக்கொண்டு தபஸு செய்திருந்தார். மஹிஷாசுரனானவன் அங்கே வேட்டையாடப் போய் ஒன்றும் அகப்படாமல் பசியால் அதிக வருத்தப்பட்டு அந்த ரிஷியைக்கண்டு அவரை ஒரு க்ஷணத்தில் எடுத்து விழுங்கினான். அந்த லிங்கமானது அவன் கழுத்தில் சிக்கிக்கொண்டது.

கௌதமரானவர், லிங்கம் தரித்தவனைக் கொன்ற பாவம் [1]நவதீர்த்தமாடினால் போகும் என்று சொல்ல அம்மனானவள், துர்க்கையை வாளால் பூமியில் வீசச்சொல்ல, அது சுனையாகி நவதீர்த்தங்களும் வந்தது. அந்தக் கட்கதீர்த்தத்தில் அம்மனானவள் ஒரு மாதம் வரையில் அதில் மூழ்க அந்த லிங்கமானது கையை விட்டு நீங்கிற்று. அதை அம்மனானவள் அந்தச் சுனையின் கரையின் மேல் வைத்து பூஜை செய்து அப்பால் கோவிலில் போய் பிரும்ம

1. நவதீர்த்தங்களாவன:- கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, கோதாவரி, காவிரி, சிந்து, ஸ்ரீதேவி, சோனநதி என்பனவாம்.

இதைப் படித்தவர்களும் கேட்டவர்களும் ஒன்றும் குறை இல்லாமல் வாழ்வார்கள்.

தீர்த்தத்தில் முழுகி கோயிலை பிரதட்சிணம் செய்து சுவாமி முன்னே நின்று தன் குறைகளைச் சொன்னாள். அப்போது பரமசிவன் வந்து நீ இந்த மலையை பிரதட்சணம் செய் என்று சொல்ல அம்மனானவள் அப்படியே அந்த மலையைப் பிரதட்சணம் செய்தாள். அப்போது சுவாமியானவர் ரிஷபவாகனத்தின் மேல் எழுந்தருளி வந்து அம்மனைத் தன் இடது பக்கத்தில் சேர்த்துக் கொண்டார். இரண்டு தேகமும் ஒரு தேகமாயிற்று. இடப்பாகம் பெற்ற சருக்கம் முற்றும்.

**ஐந்தாம் சருக்கம் முற்றும்**

## 6. வஜ்ராங்கத பாண்டியன் சருக்கம்

பாண்டிய தேசத்தை ஆளுகின்ற வஜ்ராங்கத பாண்டியன் குதிரை மேலேறி சேனைகள் சூழ காட்டில் போய் வேட்டையாடி புறப்படும்போது ஒரு புனுகுப் பூனையைப் பின் தொடர்ந்தான். அது ஓடி திருவண்ணாமலையை வலமாய் சுற்றி சோர்ந்து விழுந்து ஒரு திவ்ய தேகத்தைப் பெற்று கலாதரனென்று பேர் கொண்டு புஷ்பவிமானமேறி நின்றது. அப்பால், அந்த பாண்டியனின் குதிரையும் முன்போல விழுந்து ஒரு திவ்ய தேகம் பெற்று காந்திசாலி என்று பேர்கொண்டு புஷ்பகவிமான மேறி நின்றது. இந்த இருவரும் குதிரைக்காலில் விழுந்து வருத்தப்பட்டுக் கொண்டிருக்கிற பாண்டியன் முன்னே போனார்கள். அவர்களைப் பாண்டியன் இது என்ன வகை? என்று கேட்க, கலாதரன் சொல்கிறான். நாங்கள் இருவரும் வித்யாதாரர்கள். நாங்கள் ஒரு நாள் துர்வாஸர் ஆசிரமத்திற்குப் போனோம். அப்போது அங்கிருந்த புஷ்பத்தை நான் பறித்தேன்.

அங்கிருந்த புல்லுகளை இந்த காந்திசாலி மிதித்தான். அப்போது அவர் கோபித்து எங்களை குதிரையும், புனுகுப்பூனையுமாக ஆகும்படி சாபம் கொடுத்தார். இது எப்போது தீரும் என்று கேட்டோம். அதற்கு அவர் நீங்கள் திருவண்ணாமலையை வலம் செய்தால் தீரும். அது உங்களுக்கு பாண்டியனால் கிடைக்கும் என்று சொல்லி ஒரு மாம்பழத்துக்காக கணபதியும், சுப்ரமணியரும் பரமசிவனைச் சுற்றி வந்த கதையைச் சொன்னார். இதுதான் எங்கள் கதை. நீ இந்த மலையைக் காலால் நடந்து பிரதட்சணம் செய்யாமல் குதிரை மேலேறினபடி பிரதட்சணம் செய்ததால் உனக்கு இந்த சங்கடம் உண்டாயிற்று. இனி இந்தச் சுவாமியை பூஜை செய்தால் இந்தப் பாவம் நீங்கும் என்று சொல்லி விட்டு வித்யாதர லோகம் போனார்கள். அப்பால் பாண்டியன் தூதரை அனுப்பி தன் பிள்ளையை அழைப்பித்து பட்டங்கட்டி அரசாள, தன் பட்டணத்துக்கு அனுப்பிவிட்டு, தான் கௌதமர் ஆசிரமத்தில் போய் பர்ணசாலை செய்திருந்து நித்தியம் அருணாசலத்தைப் பிரதட்சணம் செய்தான். அப்போது பரமசிவன், ரிஷப வாகனத்தில் மேல் வந்து அவனைப் பார்த்து நீ முன் ஜென்மத்தில் தேவேந்திரனாய் இருந்தாய். அப்போது நீ நம்மை அலட்சியம் செய்து நம் மேல் வஜ்ராயுதத்தை விட்டாய். அதனால் நீ பூமியில் மனிதனாய் பிறந்து துன்பப்பட்டாய். நீ நம்மை வலம் செய்ததால் துன்பம் நீங்கிற்று. நீ முன்போல் தேவலோகம் போய் இந்திரனாய் இரு என்று சொல்லி விட்டு மறைந்தருளினார்.

**ஆறாம் சருக்கம் முற்றும்**

## 7. தீர்த்தச் சருக்கம்

கௌதமர் ஒரு யாகம் செய்தார். அதில் சிவபிராமணன் அந்த யாகத்தில் அக்கினி சொரூபம் போல பிறந்தான். அவனை அவர் அருணாசலேஸ்வரரை பூஜை செய்ய வைத்தார். பின்பு அந்த யாகத்தில் ஏழு *தருப்பையைப் போட்டார். அவை ஏழு தேவதாசிகளாயின. அவற்றை அவர் சுவாமிக்கு நாட்டியம் ஆட வைத்தார். இந்தக் கதையில் தீர்த்தங்களில் ஸ்நானம் செய்த பலனும் அதற்குத் திருஷ்டாந்தமும் சொல்லப்பட்டுள்ளது.

## 8.திருமலை வலம்புரிச் சருக்கம்

திருவண்ணாமலையை பிரதட்சணம் செய்த பலனும் அதற்கு திருஷ்டாந்தமும் சொல்லுகிறது. இந்தச்சருக்கம் பற்றி வேறு செய்திகள் காணப்படவில்லை.

**எட்டாம் சருக்கம் முற்றும்.**

---

*மற்றுமேழ் தருப்பை தீயில்
விடுதலு மலர்மா தென்னக்
கற்றையங் குழலேழ் மின்னா
ருதித்தனர் கணிகை மாராய்
நிற்றலு மறைவர் முன்னே
நிருத்தமே புரியு மென்றா
னற்றடம் பலவுங் கண்டு
நகரமுஞ் சிறப்புஞ் செய்தார்.

அருணாச்சல புராணம்

## 9. ஆதித்தச் சருக்கம்

[1]சூரியன் திருவண்ணாமலையை மற்ற மலைகளைப் போல நினைத்து மலையென்று சொன்னான். அந்த மலை வெடித்து அக்னியுண்டாகி, சூரியனுடைய சாரதி, குதிரை, தேர் இவற்றை எரித்து நீறாக்கியது. அதை அவன் போய் பிரும்மாவிடம் சொல்ல அவர் திருவண்ணாமலையைப் பிரதட்சிணம் செய்தால் நீ மலையென்று சொன்ன பாபம் தீரும் என்றார். அவன் அப்படியே கிரியைப் பிரதட்சணம் செய்ய பரமசிவன் வந்து முன் இறந்தவற்றை எல்லாம் எழுப்பிக் கொடுத்தார்.

## 10. பிரதத்தராஜன் சருக்கம்[2]

ஜனக ரிஷிக்கு பிரும்மா சொல்லுகிறார். கேளும் ஜனகரே சிவன் பொருளையும், சிவனடியார் பொருளையும்

---

[1]ஐயனை மலையென் றெண்ணி
யகந்தையா லிகழ்ந்து வீழ்ந்த
கையனே யொருகா லத்துங்
கதியிலை யுனக்கென் றாலுஞ்
செய்யுமோர் தொழிலி னாலே
தீர்க்கலாந் தெளிவு ளார்க்கு
மெய்யனை யருணை யானை
வலஞ்செயென் றுரைத்து மிட்டேன்.

[2]சனகமுனிக் கயனுரைப்பான் அருணையீசன்
தன்பொருளைத் திருடினவர் யமலோகம் போய்
கனற்குழியில் விழுந்துநர கடைவார்
அந்நகரி லவருக்கு துணைவரும்
மனமாரச் சிவனடியார் பொருளைக் கொண்டோர்
மயங்காமல் முன்பு கண்டபடியே யாவார்
மனமே கேள் இதற்கு திருஷ்டாந்தத்தை
உரைக்கின்றேன் குறிப்பாக நன்றாய்த்தானே.

காசியில் யான் பிரதத்த என்னும் அரசன்
யாத்தி ரையைக் கருதிச் சென்று
ஆசில்திரு வருணையினில் கோயிலின்
அரன் முன்னே அணுகியாங்கே
காசியின்மே லாசை வைத்து
அரன் செயலால் குரங்குமுகம் தானாகிப்பின்
நேசமுடன் அரன் பூஜை செய்து நன்முகமாகித்
தன்னுள் சேர்ந்தான்

திருடினவர்களும் திருடினவர்களுக்குதுணை போனவர்களும் யமலோகத்தில் போய் அக்கினிக் குழியில் விழுந்து அவஸ்தைப் பட்டு நரகமடைவார்கள். அதற்குத் திருஷ்டாந்தம் ஒன்று சொல்லுகிறேன்.

காசி பட்டணத்தில் இருந்துகொண்டு காசிதேசத்தை ஆளுகின்ற பிரதத்தராஜன் சதுரங்க சேனையுடன் யாத்திரை செய்யப் புறப்பட்டு நடந்து திருவண்ணாமலை கோவிலில் சுவாமி முன்னே போய் அங்கே இருந்த ஒரு தாசிப்பெண்ணின் மேல் ஆசைவைத்து அவளைத் தன் ஊருக்கு கொண்டுபோக நினைத்தான். அப்படி நினைத்தவுடனே அவன் குரங்கு முகமாகினான். மந்திரி குமாரர்கள் அவனை இது என்ன காரணம் என்று கேட்க, அவன் தான் நினைத்த சமாசாரத்தைச் சொன்னான். அதற்கு மந்திரிகள் அவனை சுவாமியை வணங்கென்று சொல்ல, அவன் கொண்டுவந்த சேனைகளை சுவாமிக்கு காணிக்கையாகக் கொடுத்து விட்டு சுவாமியை பூஜை செய்ய பரமசிவன் பிரசன்னமாய் வந்து அவனுடைய பாபத்தை நீக்கினார். அவன் குரங்குமுகம் நீங்கி சுவாமியினிடத்தில் உத்திரவு பெற்றுக்கொண்டு தன் பட்டணம் போய்ச்சேர்ந்தான். அருணாசலேஸ்வரர் பொருளை திருட நினைத்தால் உண்டாகும் பாவம் அப்பொருளுக்கு பதின்மடங்கு திரவியம் செலவழித்தால் தான் அந்தப்பாபம் தீருமென்று சொன்னார் பிரம்மதேவர்.

**பத்தாம் சருக்கம் முற்றும்**

## 11. பாபம் தீர்த்த சருக்கம்

### அஷ்ட வசுக்கள், பிரும்மா, விஷ்ணு இந்த மூவர்களின் பாபவிமோசனம்

ஜனக ரிஷியானவர் பிரும்மாவை நமஸ்கரித்து அறிந்து செய்த பாபம் எப்படி நீங்குமென்று கேட்க பிரும்மா

சொல்லுகிறார் , கேளும் ஜனக ரிஷியே, விஷயங்களை மனம் வாக்கு காயங்களால் செய்த பாபமானது திருவண்ணாமலையைப் பிரதட்சணம் செய்தால் நீங்குமென்று வேதம் சொல்லுகிறது. இதற்கு திருஷ்டாந்தம் முன்னொரு நாளிலே அஷ்டவசுக்கள் என் சபையில் வந்து அவர்கள் தவத்தைப் புகழ்ந்து சந்தோஷித்தார்கள். அதற்கு நான் உங்கள் தவத்தை நீங்களே புகழ்வதால் நீங்கள் செய்த தவம் வீணாய்ப் போகுமென்றேன். அதை அவர்கள் கேட்டு பயந்து இந்த சாபம் எப்போது தீருமென்றார்.

பரமசிவன் கிருபை உங்களுக்கு எப்போது கிடைக்கிறதோ அப்போது தீருமென்றேன். அதை அவர்கள் கேட்டுக்கொண்டு போய் தவத்தைச் செய்தார்கள். அப்போது பரமசிவன் வந்து, உங்களுக்கு என்ன வரம் வேணுமென்று கேட்க அதற்கு அவர்கள், பிரும்மா கொடுத்த சாபத்தை தீர்க்க வேணும் என்றார்கள். அதற்கு சுவாமியானவர் நீங்கள் அருணாசலத்தைச் சுற்றி எட்டு திக்கிலிருந்து தவம் செய்தால் அந்த மலையானது எட்டு முகமாய் என்றைக்கு காட்சி கொடுக்கிறதோ அன்றைக்கு அந்தச் சாபம் தீருமென்று சொல்லி கைலாசம் போனார். அந்தப்படி அவர்கள் அருணாசலத்தை சுற்றி தவம் செய்ய அருணாசலமானது எட்டு முகமாகி தரிசனம் கொடுத்தது. அவர்கள் சாபம் நீங்கி சுவாமியின் கிருபையும், பதவியும் பெற்றார்கள்.

இன்னொரு கதை சொல்லுகிறேன். முன் ஒரு காலத்திலே தேவேந்திரன் என்னிடத்தில் வந்து மூன்று லோகத்திலுமுள்ள அழகுள்ள ஸ்திரீகளின் அழகில் எள்ளளவு எடுத்து திலோத்தமையை யுண்டாக்கி மோஹித்து போகிக்க அவளைப் பிடிக்கப் போனேன். அவள் நான் தகப்பனென்று சம்மதப்படாமல் மான்ரூபம்கொண்டு ஓட நானும் அந்த ரூபமாகவே போனேன். அப்பால் நான் பழையரூபம்

அடைந்து அருணாசலேஸ்வரரை தஞ்சமென்றடைந்து வழிபட்டேன். அப்போது அந்த மலை வெடிக்க அதில் சுவாமி எழுந்தார். நான் காமவிகாரமற்று பயந்து அவரை வணங்க அவர் என்னைப் பார்த்து நீ சிருஷ்டித்த பெண்ணின் மேல் நீயே மோஹித்த பாபமானது நீ கல்பகோடி காலம் தவம் செய்தாலும் நீங்காது. நீ இந்த மலையை தரிசித்ததால் தீர்த்தோம். நீ உன் இடம் போய் சேர்வாயாக, என்று சொல்லி விட்டு மறைந்தார்.

இது தவிர இன்னொரு கதை சொல்லுகிறேன் கேள். முன்னொரு காலத்தில் பரமசிவனுடைய திருவிளை யாட்டினால் கல்ப காலம் முடிவில் இருள் நீங்கியும் கொஞ்சம் இருள் இருந்தது. அதை விஷ்ணு அறியாமல் திருப்பாற்கடலில் நித்திரை செய்தபடியேயிருந்தார். அப்போது யோகீஸ்வரர்கள் பரமசிவனை நினைக்க பரமசிவனானவர் அக்கினியின் ஜோதி ஸ்வரூபமானார். அந்த அக்கினிப் பொறிகளாலே உலகம் உண்டாயிற்று. ஆயினும் விஷ்ணு எழுந்திருக்கவில்லை. அதை யோகீஸ்வரர் அறிந்து போய் விஷ்ணுவை எழுப்ப, அவர் எழுந்து லோக சிருஷ்டிக்கு பிரும்மாவை உண்டாக்காமல் நித்திரை செய்து விட்டோமேயென்று பயந்து பரமேஸ்வரனை தியானித்தார். அப்போது பரமசிவனானவர் ரிஷப வாகனத்தின் மேல் வந்து நிற்க விஷ்ணுவானவர் அவரைப் பணிந்து நான் செய்த தீவினையை தீர்த்தருள வேணும் என்றார்.

அதற்குச் சுவாமியானவர் நீ அஸ்வமேதம் முதலான அநேக யாகங்கள் செய்தாலும் இந்த பாபம் நீங்காது. நாமும் அருணாசலமும் ஒன்றேதான் பேதமில்லை. விஷ்ணுக்களும் பிரும்மாக்களும் பூஜை செய்தது. சந்திரனானவன் தட்சன் கொடுத்த சாபத்தை இந்த அருணாசலத்தில் வந்து தீர்த்துக்கொண்டான். ஆகையால் நீ இந்த அருணாசலத்தில்

பூஜை செய்து பாபத்தை நீக்கிக்கொள் என்று சொல்லி விட்டு மறைந்தார். இந்தப் படிக்கே விஷ்ணுவானவர் அருணாசலத்திற்குப் போய் தீர்த்தங்களில் முழுகி மலையை பிரதட்சிணம் செய்து சுவாமியை பூஜித்துப் பாபம் நீங்கிப் பரிசுத்தரானார்.

**பதினோறாம் சருக்கம் முற்றும்.**

## 12. புளகாசுரச் சருக்கம்

பிரும்மா சொல்லுகிறார்: கேளும் ஜனக மஹாரிஷியே புளகாஸுரனென்று ஒரு ராட்சசன் இருந்தான். அவன் தான் நினைத்தபடிக்கு ரூபங்கொள்ள சக்தி உண்டு. அப்பேர்ப்பட்டவன் ஒருநாள் புனுகுப்பூனை ரூபங்கொண்டு திருவண்ணாமலையின் மேலேறி உலாவி புனுகையிறைத்து அதனால் சுவாமியால் அதிக பலம் பெற்று பூமியில் உள்ள தேவர், முனிவர் முதலான சகலரும் பயப்படும்படி துன்மார்க்கச் செயலைச் செய்திருந்தான். அதை அவர்கள் சகிக்கமுடியாமல் கைலாசத்தில் போய் சுவாமியிடம் சொல்ல அவர் அவர்களை தைரியப்படுத்தி அனுப்பிவிட்டு, புளகாஸுரனை அழைப்பித்து உன் பிராணனை விடு என்றார். அதற்கு அவன் அவரை பலவிதமாக ஸ்தோத்திரம் செய்து, நான் எடுத்த புனுகுப்பூனை உருவத்தாலுண்டான புனுகானது நீர் அணிந்து கொள்ளும்படி அனுக்கிரஹம் செய்ய வேணுமென்று நமஸ்கரித்து பிராணனை விட்டான். பரமசிவன் அவனுக்கு மோக்ஷம் கொடுத்தார். அன்று முதல் சுவாமிக்கு புனுகுசாத்தலாயிற்று.

**பன்னிரெண்டாம் சருக்கம் முற்றும்**

---

1. இதில் அஷ்டவசுக்கள் கதை திலோத்தமை கதை விஷ்ணு நித்திரை செய்திருந்த கதை. ஆக கதை மூன்று.

## 13. வல்லாள மகாராஜா புராணம்

நந்திகேசுவரர் மார்க்கண்டேய ரிஷிக்குச் சொல்லுகிறார்: கேளும் மார்க்கண்டேய முனிவரே - திருவண்ணாமலையில் சேரர் குலத்திலே வல்லாள மஹாராஜனென்று ஒருவன் இருந்தான். அவன் மகாசத்யவந்தன். தனவந்தன்-நீதிவந்தன். சிவபக்தி மிகுந்தவன். மஹாயோக்யன். அவனுக்கும் பிள்ளை பிறக்கவில்லை. அவன் தனக்கு பிள்ளை இல்லாததினால் அதிக கவலை கொண்டு மந்திரிகளிடம் சொல்ல அவர்கள் தானம், தருமம் குறைவில்லாமல் செய்தால் பிள்ளை பிறக்கும் என்றார்கள். அந்தப்படிக்கே அவன் பறையறைவித்து, தான தருமங்களை குறைவில்லாமல் செய்திருக்கும்போது நாரதர் போய் அந்த ராஜாவைப் பார்த்து, புத்ரன் உண்டாவதற்காக தானதருமம் செய்வதை ராஜாவினால் அறிந்து அந்த சங்கதியை கைலாசத்தில் போய் சுவாமியிடம் சொன்னார்.

சுவாமியானவர் வல்லாள மகாராஜாவினுடைய தரும பலத்தை சோதிக்க நினைத்து குபேரனை திரவிய சஹிதமாக குமார ஜங்கமவேஷம் கொண்டு சிஷ்யனாய் அழைத்துக்கொண்டு திருவண்ணா மலையிலுள்ள தாசிகள் தெருவில் வந்து தாசிகளைப் பார்த்து, உங்களுக்கு உண்டான பணத்தைக் கொடுக்கிறேன் என்று சொல்ல, சுவாமியானவர் ஆள் ஒன்றுக்கு நூறு பொன் வீதம் குபேரனிடத்தில் வாங்கி தாசிகளுக்கெல்லாம் கொடுத்து ஒவ்வொருத்திக்கும் ஒவ்வொரு சிவனடியாரை அனுப்பி விட்டு வல்லாள மஹாராஜன் சபைக்குப் போய் அவனுடன் பேசி நீ அநேகதானதருமம் செய்கிறாயாம், இன்றைய ராத்திரிக்கு ஒரு ஸ்திரீ எனக்கு சேர்ப்பிக்க வேணுமென்றார்.

அதற்கு அவன் ஒருத்தியை விவாஹம் செய்துகொண்டால் உங்களை விட்டு பிரியமாட்டாள். ஆகையால் தேவரீருக்கு ஒரு ஸ்திரீயை விவாஹம் செய்து வைக்கிறேனென்று ரொம்பவும் பக்தியுடன் சொல்ல, அதற்கு அவர் ஒரு தாசியை எனக்கு சேர்ப்பிக்க வேணுமென்றார். அதற்கு அவன் சம்மதப்பட்டு தன் சேவகரை தாசித் தெருவுக்குப் போய் ஒருத்தியை அழைத்துக்கொண்டு வாருங்களென்று அனுப்ப அவர்கள் போய்ப் பார்க்கும்போது அந்தந்த வீடுகளில் ஒவ்வொரு சிவனடியார்கள் இருக்கக் கண்டு அதைப் போய் ராஜாவிடம் சொன்னார்கள். அப்பால் அவன் தன் மந்திரிகளை அனுப்ப அவர்கள் தாசிமார் தெருவுக்குப் போய் பார்த்து முன் சொன்னபடியிருக்கிறதைக் கண்டு, அதை மந்திரி போய் ராஜர்விடம் சொல்ல, ராஜாவானவர் புறப்பட்டு தாசிகள் தெருவில் போய் என்னுடைய அரசாட்சி முதலான சகலமும் கொடுத்து பணிவிடை செய்கிறேன். ஜங்கமருக்கு இன்றைய ராத்திரி ஒருத்தி வரவேணும் என்று சொல்ல அவர்கள் முன்னே மந்திரிகளுடன் சொன்னபடிக்குச் சொன்னார்கள். அதை அவன் கேட்டுக்கொண்டு தன் வீட்டில் போய் ஒன்றுந் தோன்றாமல் அதிக கவலையுடன், இருந்தான். அப்போது அவன் பார்யாளில் மூத்தவளான மல்லமா தேவியும் இளையவளான சல்லமா தேவியும் ராஜாவை நமஸ்கரித்து உமக்கு இன்றைய தினம் வந்த கவலையை சொல்ல வேணும் என்று கேட்க - அவன் ஆதியோடந்தமாய் நடந்த சங்கதிகளை எல்லாம் சொன்னான். அதை அவர்கள் கேட்டு எங்களில் சின்னவளை அவருக்கு இன்றைக்கு சேர்க்க மனம் இருந்தால் உங்கள் எண்ணமும் தருமமும் நிறைவேறுமென்று சொல்ல -

வல்லாள மஹாராஜாவானவன் அதிக சந்தோஷத்தை அடைந்து அப்படி செய்யுங்கள் என்று சொல்லிவிட்டு ஜங்கமரிடத்தில் போய் தங்களிஷ்டப்படிக்கு அமைத்தே னென்று சொல்லி அவரை அழைத்துக்கொண்டு போய் அந்த பள்ளி அறையில் சேர்ப்பிக்க, அவள் போய் அந்த குமாரஜங்கமர் பக்கத்தில் நின்று கொண்டு அவர் நித்திரை நீங்குவதற்காக வீணை வாசித்தாள். பன்னீரை அவர் மேல் தெளித்தாள். அவர் எழுந்திருக்கவில்லை. அப்பால் அவன் தன் ராஜன் சொன்ன வசனம் பொய்யாய் போகுமென்று நினைத்து அவரை நமஸ்கரித்து அவர் பக்கத்தில் மெதுவாக சாய அப்போது அவர் சின்ன குழந்தையாகி அழுதார். அதை ராஜா கேட்டு அங்கே வந்து இது சுவாமியின் திருவிளையாடல் என்று நினைத்து அந்தக் குழந்தையை அன்போடு முத்தமிட்டு முகத்தோடணைத்தான். அடுத்த க்ஷணம் அந்த குழந்தை மாயமாய் மறைந்து போயிற்று. அப்போது அந்த ராஜாவானவன் தன் இரண்டு கைகளையும் தலை மேல் கூப்பிக்கொண்டு சுவாமியை பலவாறாக ஸ்தோத்திரம் செய்ய சுவாமியானவர் பார்வதி சமேதராய் ரிஷப வாஹனத்தின் மேலெழுந்தருளி வந்தார் . அவரை அவன் வணங்கி ஸ்தோத்திரம் செய்து எனக்குப்பின் அரசாட்சி செய்வதற்கு, எனக்கொரு புத்ரன் அருள் செய்ய வேணுமென்று கேட்க அதற்கு, சுவாமியானவர் நாமே வந்து உனக்கு புத்திரனாய்ப் பிறந்தால் உனக்கு உன் புத்திரனால் செய்யப்பட்ட கர்மவிதிகளை நாம் உனக்கு செய்கிறோமென்று சொல்லிவிட்டு கைலாசமடைந்தார். அப்பால் அந்த ராஜாவானவன் வெகுகாலம் அரசாண்டிருந்தான்.

**பதின்மூன்றாம் சருக்கம் முற்றும்**

## விருத்தாசல புராணச் சருக்கக் கருத்து

*1. **கிரிச்சருக்கம்:*** மதுகைடபர் வதம் - சிவன் விருத்தகிரியாக உலகமுழுவதும் வியாபித்திருத்தல் - பிரும்மாவினால் சிருஷ்டிக்கப்பட்ட மலைகளுக்கு இடமில்லாது பிரமன் கோபித்தல் - பின் சிவன் செயல் என்று அறிதலும், சிவன் பிரம்மாவுக்கு வரம் கொடுத்தலும்.

*2. **தலச்சருக்கம்:*** தலமகிமையும், தீர்த்தமகிமையும்

*3. **விதர்க்கணச்சருக்கம்:*** விபசித்து முனிவர் கணநாதருக்கு தனது விருத்தாந்தத்தை சொல்ல கணநாதர் தன் கதையை கூறல்.

*4. **விபசித்துச்சருக்கம்:*** கணநாதர் சொற்படி விருத்தாசலத்தில் தவம் இருத்தலும், வரம் பெறுதலும்.

*5. **நிருத்தச்சருக்கம்:*** விருத்தாசலத்தின் மகிமையைக் கூறல்

*6. **அகத்தியச்சருக்கம்:*** விருத்தகிரியானது ஆகாசம் வரை வளர்தல், வில்வலன் வாதாபியை அழித்தல், விந்தியகிரி பூமியைச் சமமாக்குதல்.

*7. **கலிங்கச் சருக்கம்:*** கலிங்கராஜன் தனது விருத்தாந்தத்தை ரோமசரிஷியினிடம் கூறல்.

*8. **கலிமலர்ச் சருக்கம்:*** விருத்தகிரியின் மகிமையை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்க சூதமுனி கூறல்.

9. **சுவேதச் சருக்கம்:** சுவேதராஜன் மரணத்திற்குப் பயந்து விருத்தகிரீசரைப் பணிதலும் வீட்டுப் பேற்றைப் பெறுதலும்.

10. **அன்பர் பூஜைச் சருக்கம்:** அடியார்களின் பெருமையும், அவர்களை வழிபடுதலால் உண்டாகும் பயனும்

11. **சிவபூஜாவிதிச் சருக்கம்:** சிவபூஜையின் சிறப்பைக் கூறுதல்.

12. **விபூதிச் சருக்கம்:** விபூதி தரித்துக் கொள்ளும் முறையும், அதன் பயனும்

13. ருத்திராக்கச் சருக்கம்: ருத்திராட்சத்திந் இலக்கணமும், சிறப்பும்.

14. சிவதீர்த்தச் சருக்கம்: சிவநாமத்தின் மகிமையும், பிரதட்சண பலன்களும்

15. **கோபர்வதச் சருக்கம்:** நாதசன்மா, அனவர்த்தி அம்மைக்கு கோபர் வதனத்தின் சரித்திரத்தைக் கூறல்.

16. **பிருடிச் சருக்கம்:** பிருடிதனென்கிற பிராமணன் சரிதம், சக்தீஸ்வரர் திருவடியை அடையும் விதம்.

17. **சசிவண்ணச் சருக்கம்:** சசிவண்ணன் பல தீய செயல்களைச் செய்தலும் - அதனால் ஏற்பட்ட வியாதிகளை கோபர்வதத்தில் நீக்குதலும், சசிவண்ணன் சிவலோகம் அடைதலும்.

# விருத்தாசல புராண சங்கிரஹம்

## 1. கிரிச்சருக்கம்

ஸ்ரீ கைலாசத்திலே பரமசிவனானவர் பதினெண் புராணங்களை பரமேஸ்வரிக்குச் சொல்ல அதை சுப்ரமணியர் கேட்டு வேத வியாசருக்குச் சொல்ல அவர் சுமந்த முனிவருக்குச் சொல்ல அவர் தெய்வவன்மருக்குச் சொல்ல அவர் சூத முனிவர்களுக்குச் சொல்ல அவர் நைமிசாரண்ய முனிவர்களுக்குச் சொன்ன பதினெட்டு புராணங்களில் 10வது புராணமாகிய பிரும்மகைவர்த்தமென்கிற சிவபுராணத்தில் விருத்தாசல புராண சரித்திரத்தை சொல்லுகின்றது.

பரமேசுவரரானவர் ஈசவரிக்கு விருத்தாசல மகிமையைச் சொல்லி அப்பால் சொல்லுகிறார். கேளும் பெண்ணே முன் காலத்திலே பிரும்மாவானவர் ஜலத்தை ஸ்ருஷ்டித்து அதில் தன் வீரியத்தைவிட அது முட்டையாய் மிதந்தது. அதை உடைத்தபோது அதில் முக்குணங்கள் உண்டாகி அந்த குணங்களில் பஞ்சபூதம் உண்டாயிற்று. அப்பால் விஷ்ணுவின் இரண்டு காதிலுமுள்ள குறும்பியில் மது, கைடபர் என்று இரண்டு ராக்ஷஸர்கள் பிறந்து லோகத்திலுள்ள சகலரையும் கொன்று விஷ்ணுவை எதிர்த்து சண்டை செய்ய விஷ்ணுவானவர் சத்துவகுணம் இரசோகுணம், தமோகுணம் தோற்று அவர்களிடத்தில், என் கையால் நீங்கள் இறக்கும்படியான வரம் கொடுங்களென்று வரம் வாங்கிக்கொண்டு அவர்களை சண்டை செய்து கொன்று - அவர்களுடைய மாமிசமானது ஜலத்தில் கலந்திருக்கும் படியாய் பரமசிவனை தியானிக்க, பரமசிவனானவர் பாதாளம் முதல் ஆகாயம் வரையில் பெரிதாக விருத்தகிரியாக

பிரகாசித்தார். அதை பிரும்மாவானவர் பரமசிவனாலுண்டானதென்று எண்ணாமல் மன ஆனவத்தால் அநேக மலைகளை ஸ்ருஷ்டித்து அவைகளை பூமி எங்கிலும் பரவும்படிக்கு அனுப்ப அவைகள் பூமி எங்கிலும் போய் பார்த்து இடமில்லாதிருப்பதை அறிந்துவந்து அதை பிரும்மாவிடம் சொல்லிற்று. அதை பிரும்மா கேட்டு ரொம்பவும் அகங்காரம் கொண்டு கோபித்து பின்பு இது சிவன் செயலென்று அறிந்து சிவனை தியானித்து பஞ்சாட்சரத்தைச் ஜெபிக்க - பரமசிவனானவர் கோடி சூரிய பிரகாசமாய் உமாதேவியுடன் ரிஷபவாஹனத்தின் மேல் வந்து நின்று தரிசனம் கொடுத்து - பிரும்மா கேட்டபடிக்கு மலைகளுக்கெல்லாம் இடங்கொடுக்கும்படி செய்து பிரும்மாவுக்கு கேட்ட வரங்களை கொடுத்து மறைந்தார். பின்பு பிரம்மாவானவர் அந்த வர பிரஸாதத்தால் ஸ்ருஷ்டித்தொழிலை நடத்திக் கொண்டிருந்தார்.

**கிரிச்சருக்கம் முற்றும்**

## 2. தலச் சருக்கம்

நாதசன்மாவானவன் தன் தேவியான அனவர்த்தி அம்மையாருக்கு விருத்தாசல மகிமையைச் சொல்ல முன்சொன்னநாதசன்மாவானவர் அனவர்த்திக்கு விருத்தாசல சமீபத்திலுள்ள மணிமுத்தா நதி தீர்த்த மகிமையையும், க்ஷயரோகம் முதல். ஆறு ரோகம் கொண்ட செட்டிப் பிள்ளைகள் ஆறு பேருக்கும் அகஸ்திய ரிஷியானவர் அந்த ரோக விமோசனம் ஆகும் விதம் சொன்னார்.

**தலச்சருக்கம் முற்றும்**

# 3. விதர்க்கணச் சருக்கம்

பரமசிவனானவர் ஈசுவரிக்கு சொல்லுகிறார். கேளாய் பெண்ணே - பிரும்மாவுக்கு ஐந்தாம் வயதிலே திரேதாயுகத்திலே கோசல தேசத்திலே, மணிபிங்கலை என்னும் பட்டணத்திலே, விபசித்து என்கிற ஒரு பிராமணணானவன் அதிக தரித்திரமடைந்து காடுகளில் போய் காய் கனிகளும் அகப்படாமல் திரிந்து அங்கிருந்து ஒரு சுனையில் ஸ்நானம் செய்து அங்கேயிருந்த சிவலிங்கத்துக்கு பூஜை செய்துஆறுநாள் வரைக்கும் ஆகாரமில்லாமல் காட்டில் திரிந்து ஏழாம் நாளில் திரியும்போது வழியில் ஒரு சுனைக்கரையில் கணநாதருடனும் தேவஸ்திரீகளுடனும் ஒரு தெய்வ விமானம் வந்திறங்கிற்று. அதை (மேற்படி) விபசித்து முனிவர் பார்த்து அதிலிருந்து கணநாதரை வணங்கி தன் விருத்தாந்தத்தைச் சொல்ல அவர் தன் கதையைச் சொல்லுகிறார்.

அதாவது கேளும் விபஜித்துவே, நான் முன்ஜென்மத்திலே, பாஞ்சாலதேசத்திலே, விதையம் என்கிற பட்டணத்திலே செட்டியார் வம்சத்திலே விதர்க்கண செட்டியாரென்று பேருடைய எனக்கு ஒரு தொழிலும் கிடைக்காமல் கூலிக்கு சுமையெடுத்து ஜீவனம் செய்யும்போது ஒரு நாள் ஒருவனுக்கு கூலிக்கு சுமை எடுத்துக்கொண்டு விருத்தகிரிக்குப் போனனேன். அன்றைக்கு மார்கழி மாதம் திருவாதிரை நாளாகையால் அன்றைக்கு பல பெரியோர்களும், முனிவர்களும், யோகீசுவரர்களும் மணிமுத்தா நதியில் ஸ்நானம் செய்தார்கள். நானும் அந்த முனிவர் முதலானவர்களைத் தரிசனம் செய்து அவர்களுடன் மணிமுத்தா நதியில் மூழ்கி விபூதி, ருத்ராட்சம் தரித்து, கோவிலுக்குப் போய் சுவாமியைத் தரிசனம் செய்து உபவாசமிருந்து, அன்றைய ராத்திரி அங்கேயிருந்து பழமலை நாதரும், பெரியநாயகியம்மையாரும் எழுந்தருளி

இருக்கின்ற மகோற்சவ வைபவத்தைக் கண்டு வணங்கி தோத்திரம் செய்து மறுநாள் காலையில் அந்த மணிமுத்தா நதியில் ஸ்நானம் செய்து கோவிலில் சுவாமியை நமஸ்கரித்து ஒரு வீட்டில் சாதம் வாங்கி பாரனை செய்து கூலி செய்துவந்த திரவியங்களை கோவிலுக்கு உபயோகப்படுத்திவிட்டு என் வீட்டில் வந்து சில காலம் இருக்க எனக்கு மரணம் வந்தது. அப்போது என்னைக் கொண்டுபோக எமதர்மன் வரவே அப்போது பரமசிவன், உமாதேவியுடன் ரிஷபத்தின் மேல் வந்து எனக்கு தரிசனம் கொடுத்தார். அவருடன் தேவவிமானம் வந்தது. நான் அதிலேறி லோகம் எல்லாம் சஞ்சரித்தேன். அதுதான் இந்த விமானம். நான் விருத்தாசலத்தை தரிசித்ததால் இந்த விமானமும் சுகமும் எனக்கு கிடைத்தது. ஆகையால் நீயும் விருத்தாசலத்துக்குப் போனால் உன்னையும் ரட்சிப்பார் என்று சொல்லி மறைந்தார்.

**விதர்க்கணச் சருக்கம் முற்றும்**

## 4. விபசித்துச் சருக்கம்

முன் சருக்கத்தில் சொன்ன விதர்க்கண முனிவரானவர் அப்பால் அந்தக் கணநாதரை நினைத்து ஸ்துதித்து, அந்தச் சுனையிலிறங்கி ஸ்நானமும், அநுஷ்டானமும் செய்து, கவலையுடன் இருந்தார். அப்போது சில தெய்வஸ்திரீகள் விமானத்தினின்றும் இறங்கி ஆபரணங்களைக் கழற்றி அந்த சுனையின் கரைமேல் வைத்துவிட்டு அந்த சுனையில் இறங்கி ஸ்நானம் செய்து அந்த ஆபரணங்களை எடுத்துத் தரித்துக்கொள்ளும் போது அதில் வந்த குபேரன் தங்கையின் மூக்குத்தியை ஒரு சிச்சிலிக் குருவியானது எடுத்துக்கொண்டு போய் ஒரு மரத்தின்மேல் வைத்துக்கொண்டு அதை மூக்கால் குத்தி விட்டுவிட அது விபசித்து முனிவருடைய மடியில் வந்து விழுந்தது.

அதை அவர் எடுத்துப்பார்த்து பயப்பட அதை தெய்வப்பெண்கள் அறியாமல், அந்த குபேரன் தங்கைக்கு தாங்கள் மூக்குத்தியை எடுக்கவில்லையென்று அநேக சத்ய வசனங்கள் சொன்னார்கள். அதை அந்த குபேரன் தங்கை கேட்டு என் மூக்குத்தியை கொடுத்தவர்களுக்கு சிவாக்ஞைப் படிக்கு என் ஆபரணங்களெல்லாம் கொடுப்பேனென்று சொல்ல அதை அந்த விபசித்து முனிவர் கேட்டு இவளிடத்தில் போய் அந்த மூக்குத்தியைக் கொடுக்க அதை அவள் வாங்கி தரித்துக்கொண்டு அவருடைய விருத்தாந்தங்களை விசாரித்தறிந்து, தன் ஆபரணங்களை யெல்லாம் கழற்றிக் கொடுத்து இதை வைத்துக்கொண்டு நீர் விருத்தாசலேஸ்வரருக்கு திருப்பணி வேலை செய்யுமென்று சொல்லி அவரை தங்களுடைய விமானத்திலேற்றி விருத்தாசலேஸ்வரர் மஹத்துவத்தைச் சொல்லி அவரை விருத்தாசலத்தில் கொண்டுபோய் விட்டு விட்டு தேவலோகத்திற்குப் போனார்கள்.

அப்பால் அந்த விபசித்து முனிவரானவர் அந்த விருத்தாசலத்தில் இருக்கிற திருமுத்தா நதியில் போய் ஸ்நானம் செய்து அனுஷ்டானம் முடித்து அந்த ஆபரணங்களை வைப்பதற்கு இடம் பார்க்கும்போது பரமசிவனருளால் ஆகாசத்தில் ஒரு வசனம் பிறந்தது. அதாவது விபசித்துவே நீ வைத்திருக்கிற ஆபரணங்களை மரத்தின் கீழே வைத்துவிட்டு ரோமஸ ரிஷியினிடத்தில் போய் உபதேசம் செய்து கொண்டால் உனக்கு தபசும், மோக்ஷமும் உண்டாகும் என்று சொல்ல அவர் அந்தப் படியே ஆபரணங்களை வன்னி மரத்தின் கீழே வைத்து விட்டு ரோமஸ ரிஷியைப் போய் நமஸ்கரித்து, தனக்கு ஆகாசத்தில் சொல்லிய அசரீரி வாக்கைச் சொல்லி அவரிடத்தில் உபதேசம் பெற்று அங்கேயே நிஷ்டை

செய்திருந்து திருமணிமுத்தா நதியில் போய் ஸ்நானம், அனுஸ்டானம் முடித்துக்கொண்டு கோவிலுக்குப் போய் சுவாமிக்கு பூஜை நைவேத்தியம் செய்து சருகு வாயு ஜலம் கொண்டு இவைகளை தெளித்து ஒரு காலால் நின்று கொண்டு வாயு தாரணையும் தபசும் செய்ய அதனால் அக்னி ஜ்வாலையுண்டாகி, அதனால் லோகத்திலுள்ள சகல ஜீவன்களும் சராசர ஜீவன்களும் அதிக வருத்தமடைந்து அதை போய் ஈசுவரியாகிய பெரிய நாயகியார் போய் விருத்தாசலேசுவரரைப் பணிந்து விபசித்து முனிவருக்கு தரிசனம் கொடுக்க வேண்டுமென்று சொல்ல அப்படியே விருத்தாசலேசுவரரானவர் உமாதேவி சகிதமாய் ரிஷப வாகனத்தின் மேல் எழுந்தருளிப் போய் விபசித்து முனிவர் செய்த ஸ்தோத்திரங்களை ஏற்று நீர், நம்முடைய விருத்தாசலத்தில் திருப்பணிவேலை செய்து கொண்டிரு மென்று சொல்லி மறைந்தார். பின்பு விபசித்து முனிவரானவர் தான் வைத்த ஆபரணங்களை எடுப்பதற்காக அந்த வன்னி மரத்தின் மேலேறினார். அப்போது, அந்த வன்னி மரமானது, ஓ விபசித்துவே, நான் கல்ப விருட்சம், திருப்பணி வேலைக்காக உனக்கு எவ்வளவு திரவியம் வேணுமோ அவ்வளவு கொடுக்கிறேன் எடுத்துக்கொள்ளுமென்று சொல்ல, விபசித்துவானவர், அந்த வன்னி மரத்தில் அநேக திரவியங்களெடுத்து சுவாமிக்கு திருப்பணி வேலைகளும், தேரும், தேர் ஓடுவதற்கு தெரு ஒழுங்கும் சகல உற்சவங்களும் ஆக முதலானவைகளெல்லாம் நன்றாகச் செய்து வைத்து, முடிவில் பரமசிவனுடைய திருவடியில் கலந்தருளினார்.

**விபசித்துச் சருக்கம் முற்றும்**

## 5. நிருத்தச் சருக்கம்

மனுஷ்யர் முதலான சகலமான ஜீவ ராசிகளும் ஒரு தவமும் செய்யாமல் பாபத்தைச் செய்து விருத்தகிரியில் போய், பரமசிவன் திருவடியை அடைகிறார்களே அது என்ன காரணமென்று கேட்டார். அதை அவர் கேட்டு அவர்களை அழைத்துக் கொண்டு வைகுண்டம் போய் அந்த செய்தியை விஷ்ணுவிடம் சொல்ல, விஷ்ணுவானவர், அவர்கள் எல்லோரையும் அழைத்துக்கொண்டு அதை விருத்தாசலேசுவரருடன் சொல்ல நினைத்து விருத்தா சலத்தில் போய் சுவாமியை நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்து நின்றார். இவர்கள் சொல்ல வந்த செய்தியை அங்கேயிருந்த விபசித்து முனிவர் அறிந்து நந்திதேவருக்குச் சொல்ல, நந்திதேவர் போய் அதை சுவாமிக்குச் சொல்ல சுவாமியானவர், மூலலிங்கத்தை விட்டு வெளிப்பட்டு, திருஉருவங்கொண்டு ஹரி பிரும்மேந்திராதி தேவர்களின் முன்னே வந்து நின்று அவர்களைப் பார்த்து நீங்கள் சுகமாய் இருக்கிறீர்களாவென்றார்.

அதற்கு அவர்கள் சுவாமி சகல உயிர்களும் இந்த திருமணி முக்தா நதியில் வந்து முழுகி உம்முடைய திருவடியை அடைகிறதால் எங்கள் பதவிகளில் வருகிறவர்கள் ஒருவருமில்லை எங்களுக்கு ஒரு வேலையுமில்லை, என்று சொல்ல, அதற்கு சுவாமியானவர் இந்த விருத்தாசலத்தில் தவம் செய்பவர்களை நாம் வேண்டாமென்று தள்ளலாமோ, நீங்களும் இந்த ஸ்தலத்தில் தவம் செய்தால் மோக்ஷம் அடைவீர்களென்று சொல்லி மறைந்தருளினார். பின்பு அவர்களெல்லாரும் அந்தப்படியே திருமணி முத்தாநதியில் போய் ஸ்நானம் செய்து பரமசிவனை தியானிக்க, விருத்தாசலேசுவரர் அவர்கள் மத்தியில் வந்து நின்று திருநடனம் செய்து அவர்களுக்கு பஞ்சாட்சர உபதேசம் செய்து அதன் விபரத்தையும், அதனால் வரப்பட்ட

பலத்தையும் சொல்லி மறைந்தருளினார். பிறகு பிரும்மா, விஷ்ணு, முதலான தேவர்கள் எல்லாம் தவம் செய்கிற பெரியோர்கள் விருத்தகிரியில் இருக்கலாமே தவிர மூடர்கள் விருத்தகிரியில் இருக்கலாகாது என்று சபித்தார்கள்.

**நிருத்தச் சருக்கம் முற்றும்**

## 6. அகத்தியச் சருக்கம்

ஒரு காலத்தில் விருத்தகிரியானது மதம் கொண்டு ஆகாசம் வரையில் வளர்ந்து, சூரிய, சந்திரர் சஞ்சரிக்கிற வழியையும் தடுத்து, சூர்ய, சந்திரர், தடைபடவே கோவில்களுக்கு பூஜா காலமும், பிராமணர் முதலான ஜாதியாருக்கு சந்தியா வந்தனம் செய்கிற காரியமும் தப்பிவிட்டது. மேலும் இராப்பகலில்லாமல் மழைப் பெய்வது இல்லாமலும் ஆயிற்று. இவைகளை தேவர்களும், முனிவர்களும், போய் பிரும்மாவுக்குச் சொல்ல, பிரும்மாவானவர், தன் குமாரனான அகஸ்தியரைப் பார்த்து நீர் போய் விந்திய பர்வதத்தின் மதத்தை அடக்கி வில்வலனையும், வாதாபியையுங் கொன்றுவிட்டு வாவென்று சொன்னார். அந்தப் படிக்கே அகஸ்தியரானவர் கையின் பெருவிரலளவு சிறிய உருவம் பெற்று சகல வாத்யத்துடனும், தேவர்கள, சித்தர்கள் முதலானவர்களுடன் புறப்பட்டு வழியில் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து அநேக சிவஸ்தலங்களில் போய் தரிசனம் செய்து விந்தியகிரிக்கு நேராக வந்தார். அப்போது இவர் வருவதை விந்தியகிரியறிந்து எதிர்கொண்டு போய் அவரை நமஸ்காரம் செய்து பூஜை செய்து நிற்க, அகஸ்தியரானவர் அதைப் பார்த்து, நாம் தெற்கு திக்கில் தவம் செய்யப் போகிறோம். நான் உன் மேலேறியிறங்குகிறது ஒரு தடையாகாது.

ஆகையால் நீ இந்த பூமிக்கு சமமாய் அடங்கி இரு. இல்லாவிட்டால் நாம் உன்னை அழித்து சாம்பலாக்குவோ மென்று சொல்ல விந்தியகிரியானது பூமிக்கு சரியாய் அடங்கி விட்டது.

அப்பால் அகஸ்தியரானவர் வில்வலன், வாதாவியிருக்குமிடத்திற்குப் போக அவர்கள் எதிர்கொண்டு வணங்கி அவரை அழைத்துப்போய், விருந்து சொல்ல அதற்கு அவர் சம்மதித்து இருந்தார். வில்வலன் ஆட்டுருவமாகிய வாதாவியை அறுத்து சமைத்து அவருக்கு விருந்திட்டு அவர் சாப்பிட்ட பின்பு வாதாபி வருக சுவாஹா என்று சொல்ல அதை அவர் அறிந்து பரமசிவனை தியானம் செய்து அவர்கள் இருவரையும் சாம்பலாக்கிவிட்டு அந்த பாவத்தை நீக்க வேண்டி விருத்தாசலத்தில் போய் திருமணிமுத்தாநதியில் முழுகி விருத்தாசலேசுவரரை பூஜை செய்து நமஸ்கரிக்க விருத்தாசலேசுவரர் திருமேனி கொண்டு எழுந்தருளி வந்து தரிசனம் கொடுத்தார். அதை அவர் தரிசனம் செய்து மிகவும் தோத்தரித்து, தன்னுடன் கூடவந்த முனிவர்களை அவர் அவர்கள் இடத்திற்கு போக அனுப்பிவிட்டு விருத்தாசலேசுவரரை நித்தியம் பூஜை செய்துகொண்டு இருந்தார்.

**அகத்தியச் சருக்கம் முற்றும்**

## 7. கலிங்கச் சருக்கம்

விருத்தாசலேசுவரரைப் பணிந்து வந்தனை செய்தவர்கள் அடைந்த சுகத்தைச் சொல்லுகிறோம். அதாவது கலிங்கராஜனென்கிற ராஜா தான் செய்த அக்கிரமத்தால் பிசாசுரூபமாகி விருத்தாசலத்திலே ரோமரிஷியின் முன்னே போய் நின்றான். அவர் இவனைப் பார்த்து உனக்கு இந்த பிசாசு ரூபம் வந்தது எதனால் என்று கேட்க அவன் சொல்லுகிறான்,

கேளும் அய்யா நான் அங்கதேசத்திலே பிறந்தவன், என்பேர் கலிங்கன், நான் வீடு, மாடு, சம்பத்து முதலானவைகள் ஒன்றும் குறைவில்லாமல் வாழ்ந்திருக்கும்போது ஐசுவரியமுள்ள வாசலென்று நினைத்து ஒரு யோகீஸ்வரரானவர் என் வீட்டிற்கு வந்தார். அவரை நான் வணங்காமலும் என் கால் கைகளை முடக்காமலும் கர்வித்திருந்தேன். அவர் என்னை அருகே அழைத்து சிரித்து உன்னை யோகீஸ்வரர் கண்டால் உன்னை வணங்கும்படியான செய்கையையடை, இப்படியிராதே. இனி உன் வாழ்வை பிள்ளைகளுக்கு கொடுத்து விட்டு தபஸ்விகளுடன் கூடி தபசு செய்யப் போவாய் என்று சொல்ல நான் அவரை நீ நல்ல ஆபரணமில்லாமல் ருத்ராட்சம் தரித்து அன்னவஸ்திரத்திற்கு கதியில்லாமல் கந்தல் துணியைச் சுற்றிக்கொண்டு வீடு வீடாய் பிட்சை எடுத்து சாப்பிடுகிறாயே என்று கோபித்து சொன்னேன். அவர் கோபித்து என்னை பிசாசாகும்படி சபிக்க நான் பயந்து அவரை வணங்க அவர் என்னைப் பார்த்து நீ விருத்தாசலத்துக்குப் போய் அங்கேயிருக்கிற ரோமஸ ரிஷியை தரிசனம் செய்தால் அவர் இந்த சாபத்தை நீக்குவாரென்றார். அது முதல் நான் பிசாசு ரூபத்துடன் அதிக அவஸ்தைப் பட்டு இப்போது உம்முடைய திருவடியை அடைந்தேன் என்று சொல்ல, அவர் அவன்மேல் கிருபை செய்து தைரியப்படுத்தி நல்ல நீதி மார்க்கங்களைச் சொல்லி நீ இந்த திருமணி முத்தாநதியில் முழுகி விருத்தாசலேசுவரரை தரிசனம் செய் என்று சொல்ல, அவன் அப்படியே செய்து, பிசாசு ரூபம் நீங்கி மோக்ஷமடைந்தான். ஆகையால் பெரியோர்களை தூஷித்த மூடர்கள். அவர் சொன்ன ஒவ்வொரு சொல்லுக்கு ஒவ்வொரு நரகத்திலும் உழன்று வருத்தப்படுவார்கள்.

**கலிங்கச சருக்கம் முற்றும்**

## 8.கலிமலர் சருக்கம்

நைமிசாரணிய முனிவர்களெல்லாரும் சூத முனிவரை வணங்கி விருத்தகிரியின் மகிமையைச் சொல்ல வேணுமென்று கேட்க, சூதமுனிவர் சொல்லுகிறார். கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே - ஸ்காந்தத்தில் ருத்ர சம்ஹிதையில் சொன்ன கலியைத் தொலைத்த சரித்திரத்தைச் சொல்லுகிறேன். அதாவது சனத் குமாரர் முதலான முனிவர்களெல்லாரும் மேருகிரியில் போய் பிரம்மாவை வணங்கி தங்களுடைய எண்ணத்தைச் சொல்ல, அவர் அவர்களைப் பார்த்து உங்களுக்கு நேரிட்ட துக்கமென்ன என்று கேட்க அவர்கள் முனிவர்ளெல்லாரும் கலியின் வசப்பட்டதால் அதிக துன்பமடைந்தார்கள். மழையும் மறுத்தது. தானதர்மம் முதலானதெல்லாம் அற்றதென்று விபரமாய் சொன்னார்கள். அதற்கு பிரும்மாவானவர் அவர்களுக்கு விருத்தகிரியில் போய் பலனை அடைந்தவர்களுடைய சரித்திரங்களை விபரமாய் சொல்லி நீங்களும் கலிமலர்பதி என்கிற விருத்தாசலத்தில் போய் சுவாமியை தரிசனம் செய்யுங்களென்று சொல்ல, அந்த முனிவர்களெல்லாரும் பூஜைக்கு வேண்டிய வஸ்துக்களை எடுத்துக்கொண்டு விருத்தாசலத்தில் போய் சுவாமியை பூஜை செய்து சகலவரங்களும் பெற்று அந்த ஸ்தலத்திலேயே சிவபூஜை செய்திருந்தார்கள்.

**கலிமலர் சருக்கம் முற்றும்**

## 9. சுவேதச் சருக்கம்

அப்பால் துவாபரயுகத்தில் குருகுலத்தில் பிறந்த சுவேதராஜனானவன், யாவருக்கும் தானதருமம் செய்து அரசு

செலுத்தி விருத்த வயதான பின்பு நல்ல சிவதியானமுள்ள பெரியோர்களை யடுத்திருந்தான். அப்படியிருக்கும்போது அவன் மனைவியானவள் மரணாவஸ்தைப்பட்டு இறக்க அவன் அவள் பட்ட மரணாவஸ்தையைப் பார்த்து பயந்து சுக்ரபகவானைப் போய் பணிந்து மிருத சஞ்ஜீவினி மந்திரத்தை உபதேசம் செய்து கொண்டு எமபாதையில்லாத ஸ்தலம் எது என்று விசாரித்துப் புறப்பட்டு அநேக ஸ்தலங்களைப் போய் தரிசனம் செய்து ஸ்வேத முனிவர் என்று பேர் பெற்று விருத்தாசலத்தில் போய் திருமணிமுத்தாநதியில் முழுகி விருத்தாசலேசுவரரை தரிசித்து அங்கேயிருந்த அகஸ்தியரைக் கண்டு வணங்கி மோக்ஷம் கொடுக்கும்படியான ஸ்தலத்தை எனக்கு அனுக்கிரகிக்க வேணுமென்றான்.

அதற்கு அவர் இந்த விருத்தாசலமே மோக்ஷபதம் கொடுக்கும் என்று சொல்லி திருமணிமுத்தாநதியின் பெருமையையும் ஸ்வயம்பு லிங்கமான விருத்தாசலேசுவரர் மகிமையையும் அந்த ஸ்தலத்தில் போய் சுகபட்டவர்கள் சரித்திரமும் சொல்லி நீ இதில் தவம் செய் என்று சொல்ல அவன் அப்படியே யதியாகி நித்தியம் மூன்று காலமும் திருமணிமுத்தா நதியில் மூழ்கி விபூதி ருத்ராட்சம் தரித்து விருத்தாசலேசுவரரைப் பூஜை செய்து பஞ்சேந்திரியங் களையும் அடக்கி யாவருக்கும் தானதருமம் செய்திருந்தான். அப்போது விருத்தாசலேசுவர ரானவர் அவனுக்கு வந்து உபதேசம் செய்து மறைய, அவன் அவரை மிகவும் ஸ்தோத்திரம் செய்ய சுவாமியானவர் அவன் எதிரே போய் நின்று சூதபனென்று பேர் கொடுத்து நந்திகேசுவரருக்கு கீழ்ப்பட்ட சுகத்தையும் பதவியையும் கொடுக்க - அவன் எனக்கு எமவாதையில்லாமல் மோக்ஷமும் உம்முடைய

திருவடியை விட்டு நீங்காதிருக்கும்படி வரமும் கொடுக்க வேணுமென்று கேட்க, சுவாமியானவர் அப்படியே கொடுக்க, அவன் அப்படியே வரம் பெற்று அந்த ஸ்தலத்தில் இருந்தான்.

சுவேதச்சருக்கம் முற்றும்

## 10. அன்பர் பூஜைச் சருக்கம்

சிவகண்டமென்கிற சைவாகமத்தில் பதின்மூன்றாம் அத்தியாயத்தில் சொல்லுகிற விருத்தாசல ஸ்தலத்தில் அடியார்களை பூஜை செய்கிறதால் உண்டான பலனைச் சொல்லுகிறார். அதாவது முன் காலத்தில் ஒரு வைசியனுக்கு நான்கு பிள்ளைகள் இருந்தார்கள். அவர்களில் மூத்தவனானவன் காசியில் இருந்து வந்த பெரியோர்களை விசுவநாதராக பாவித்து பூஜித்து தேஹாத்மியத்தில் காசி விஸ்வநாதர் திருவடியை அடைந்தான். இரண்டாம் புத்திரனானவர் சோமேச்சுவரராக பாவித்து பூஜித்து முடிவில் சோமேச்சுவரர் திருவடியை அடைந்தான். மூன்றாம் புத்திரனானவன் சிதம்பரத்தில் இருந்து வந்த அடியார்களை சபாநாயகராக பாவித்து பூஜித்து முடிவில் சபாநாயகர் திருவடியில் சேர்ந்தான். நான்காம் புத்திரனானவன் கொலை, களவு, முதலான அநேக துன்மார்க்கங்களைச் செய்து அதனால் பிரும்மஹத்தி பிடித்து மூர்ச்சையானான். அதை அவன் தகப்பன் பிராமணருடன் சொல்ல அவர்கள் அவனை விருத்தாசலத்துக்குப் போனால் வியாதி நீங்குமென்றார்கள். அவன் அப்படியே அந்த பிள்ளையை அழைத்துக்கொண்டு விருத்தாசலத்தில் சுவாமியை பூஜிக்க சுவாமியானவர் அவர்கள் முன் வந்து நடன தரிசனம் கொடுத்தார். சுமந்த முனிவரானவர் விருத்தாசல புராணத்தை வாசிக்க அதை தெய்வவன்மன் என்கிற ராஜன் கேட்டு விருத்தாசலத்தில்

சுவாமியையும் அடியார்களையும் பூஜை செய்திருந்தான். சிவனடியார்களை பூஜை செய்தால் இருபத்தோரு தலைமுறை பந்துக்களும் மோக்ஷம் அடைவார்கள். பசு தன்மையால் மோக்ஷமடைவது தலையால் நடந்து போகிறதற்கு சமானமாகும். சிவ சரித்திரத்தால் மோக்ஷமடைவது காலால் நடந்து மோக்ஷமடைகிறதுக்கு சமானமாகும். சிவபூஜையால் மோட்சம் அடைவது பட்சியைப் போல பறந்து போய் மோட்சம் அடைவதற்கு சமானமாகும். அன்பர் பூஜையால் மோட்சம் அடைவது வாயுவேகமாய் போய் மோக்ஷம் அடைவதற்கு சமானமாகும்.

**அன்பர் பூஜைச் சருக்கம் முற்றும்**

## 11. சிவபூஜா விதிச் சருக்கம்

பரமேசுவரியானவள் பரமேசுவரனை சிவ பூஜாவிதியைச் சொல்ல வேணுமென்று கேட்க அவர் சொல்லுகிறார். கேளாய் ஈசுவரியே எவ்வகைப்பட்ட பூஜையிலும் சிவலிங்க பூஜையானது அதிக நன்மையைக் கொடுக்கும். சிவலிங்க பூஜையை மூன்று காலமும் செய்ய வேணும். அப்படி செய்ய முடியாவிட்டால் இரண்டு காலமாகிலும் அல்லது ஒரு காலமாகிலும் செய்யவேணும். அதற்கு அங்க சுத்தியும் அந்தக் கரண சுத்தியும் நல்ல பக்தியுமே நன்மையாகும். அதை சோமசூர்யாக்னியான முச்சுடர்கள் - ஹிருதயம், பிரும்மருத்ரம், திருமுறை - மணல்-மண்-மாவு-திருநீறு, பூர்ணகலசம் கொன்றை-பில்வம், ஜலம், தர்ப்பை, க்ஷீரம், வேதிகை, சுவரில் எழுதின சித்ரம், சாணம். இதில் ஒன்றில் பரமசிவத்தை ஆவாஹனம் பண்ணி அன்புடன் பூஜிக்க வேணும். பரமசிவனை பூஜை செய்யாதவன் எவ்வளவு கல்வி கற்றாலும் எந்த தபம்

செய்தாலும் அவன் பிணத்துக்கு சமமாவான். பரமசிவனை பூஜை செய்யாதவன் நரகமடைவான். இப்படியாக சிவபூஜையின் பலன்களை அநேகமாகச் சொல்லி அப்பால் சொல்லுகிறார்.

விருத்தாசலத்திலுள்ள சிவலிங்கத்துக்கு ஒரு கை ஜலம் அபிஷேகம் செய்தாலும், ஒரு புஷ்பம் சாத்தினாலும், அது திருவிடைமருதூர், மகாமேரு - காசி, சமுத்திரம், கங்கைக்கரை, பிரயாகை, கயை, இமயகிரி இவைகளில் போய் இருந்து வெகுநாள் தவம் செய்து தருமம் செய்ததற்கு சமானமாகும். பிரும்மா, விஷ்ணு, தேவேந்திரன், இவர்கள் சிவபூஜை செய்து தேவர்களில் தலைமை பெற்றார்கள். இது தவிர, லக்ஷ்மி, சரஸ்வதி, இந்திராணி இந்த மூன்று பேரும் சிவபூஜை செய்து லக்ஷ்மியானவள் விஷ்ணுவின் மார்பிலும், ஸரஸ்வதியானவள் பிரும்மாவின் முகத்திலும், இந்திராணியானவள் தேவேந்திரன் துடையிலுமாக உபாசித்தார்கள். ஆருடலிங்கம், தேவலிங்கம், இராட்சஸ படிகலிங்கம், தீர்த்தலிங்கம், சுயம்புலிங்கம், பர்வதலிங்கம் ஆகிய இவைகளை பூஜை செய்தால் எமனும் வந்து அவர்களுக்கு அடிமையாவான். மேலும் பதினான்கு இந்திரர்கள் அரசு செய்கிற காலம் வரைக்கும் சாரூபபதத்தில் இருப்பார்கள். ஒருவர் செய்த பூஜையைப் பார்த்து செய்த பூஜையாலும் மனது ஒருமித்து செய்த பூஜையாலும் கர்வத்தால் விரிவாய் செய்த பூஜையாலும் ஆகிய இவைகளால் நல்ல வித்தையும், சித்தியும், பக்தியும் உண்டாகும். அரசும் கிடைக்கும். என்றைக்கும் அடிமையாய்ப் பரமசிவனை பூஜிப்பவர் மோக்ஷமடைவார்கள். மாமிசம் சாப்பிட்டவன், புலையன். ஒருவர் செய்த நன்றியை மறந்தவன், பசுவைக் கொன்றவன், துர்குணம் உள்ளவன், விரதபங்கன், ஸ்திரீவதை,

பிராமணவதை செய்தவன், ஆகிய இவர்களெல்லாரும் பரமசிவனை பூஜை செய்தால் அந்த பாபங்கள் நீங்கி பரிசுத்தமாவார்கள்.

துறவறத்தையுடையவர்களும் சிவபூஜை செய்தவர்களுக்கு சமானமல்ல. காலை, மாலை, உச்சி இந்த மூன்று காலமும் பரமசிவனை இடைவிடாமல் தரிசனம் செய்தால் அவன் செய்த பாபமெல்லாம் நீங்கி அவனுக்கு ஸ்வர்க்க போகமும் அசுவமேதயாக பலனும் உண்டாகும். பிரதோஷ காலத்தில் பரமசிவனை ஆசாரமாய் வணங்கினால் திரிகாலத்திலும் தர்சனம் செய்த பலன் உண்டாகும். முன்ஜன்மத்தில் சிவாலயப் பொருளைத் திருடின பாபமும், திரயோதசியாகிய பிரதோஷ காலத்தில் பரமசிவனை பூஜித்தாலும், தரிசித்தாலும் நீங்கும். பிரதோஷ காலத்தில் பரமசிவனைதரிசித்தால் சகலபாபங்களும் நீங்கும். பிரதோஷ காலம் என்பது சூரியன் அஸ்தமனமானதுக்கு முன் மூன்றே முக்கால் நாழிகையும், சூரியன் அஸ்தமித்த பின் மூன்றே முக்கால் நாழிகையுமான ஒரு ஜாமமாகும். பிரதோஷ காலத்தில் ஒரு ஆபத்துக்கு பயந்து போனவனும், மழைக்கு ஒதுங்கினவனும், ஆடல் பாடலைப் பார்க்கப் போனவனும், பரமசிவனை தரிசித்தால் அவனுக்கு விவேகமும் தபசும் உண்டாகும். பிரதோஷ காலத்தில் பில்வத்தைப் பொடித்து வெந்நீரில் கலந்து அபிஷேகம் செய்தால் கோடி கன்னிகாதானம் செய்த பலன் உண்டாகும். அஷ்டமிதிதியில், அப்போது உருக்கின பசு நெய்யாலும் நல்லெண்ணெயாலும் பரமசிவனை அபிஷேகம் செய்தால், நூறுகோடி காலம் சிவலோகத்தில் இருப்பார்கள். விபூதியால் அபிஷேகம் செய்தால் சந்திரனாகி வாழ்வான். பசுவின் தயிரால் அபிஷேகம் செய்தால் விஷ்ணுவாவான். அஷ்டமியில் பசுவின் பாலால் அபிஷேகம் செய்தால் சூரிய கிரஹண

புண்ணிய காலத்தில் நான்கு வேதம் அறிந்த பிராமணனுக்கு கோடி கோதானம் செய்த பலன் உண்டாகும். அஷ்டமியில் தேனால் அபிஷேகம் செய்தால் அக்னி தேவனாவான். அதில் ஜலாபிஷேகம் செய்தால் வருணனாவான். அமாவாசைக்கு முன் வந்த சதுர்த்தசியிலும், அமாவாசையும் சோமாவாரமும் கூடின நாளிலும், சிவனைப் பசும்பாலால் அபிஷேகம் செய்தால் மேன்மையான மோக்ஷம் உண்டாகும். அமரபக்ஷத்து அஷ்டமியும் ஆதிவாரமும் கூடின நாளில் பரமசிவனை இளநீரால் அபிஷேகம் செய்தால் தேவேந்திர பதவியுண்டாகும். அமரபக்ஷத்து சதுர்த்தசியில் பரமசிவனை தேன் - நெய் - நல்லெண்ணெய்- கருப்பஞ்சாறு இவைகளால் அபிஷேகம் செய்தால் சாயுஜ்ய பதவியுண்டாகும். நல்ல ஜலத்தாலும் தான் வைத்த நந்தவனத்திலெடுத்த புஷ்பத்தாலும் - மூல மந்திரத்தாலும் இடைவிடாமல் நித்தியம் பூஜிக்கப்பட்டவன் கார்த்திகை மாசத்து பூர்வபட்ச ஏகாதசியில் பரமசிவனுக்கு நெய் அபிஷேகம் செய்து வைத்தால் தன் சுற்றத்தாருடன் கைலாசத்தில் இருப்பான்.

**இனி புஷ்ப வகை சொல்லுகிறோம்.**

சிவலிங்கத்துக்குத் தான் வைத்து வளர்த்த வெள்ளெருக்கம் பூவால் அருச்சித்தால் பதின்கழஞ்சு சுவர்ணத்தை நான்கு வேதமும் அறிந்த பிராமணர்களுக்கு தானம் செய்ததற்கு சமானமாகும். அலரி-வில்வம்-கருவூமத்தம், தும்பை, தருப்பை, வன்னி, நாயுருவி, கருநெய்தல் இவைகளால் பூஜித்தால் ஒன்றுக்கொன்று ஆயிரம் பங்கு அதிகமாகும். ஆயிரம் கருநெய்தற் புஷ்பங்களால் மாலை தொடுத்து சிவலிங்கத்துக்குச் சாத்தினால் மோக்ஷம் உண்டாகும். சிவலிங்கத்திற்கு எல்லா புஷ்பங்களும் தரிக்கலாகும். வாசனை இல்லாத பூ-பூமியில்

விழுந்த புஷ்பம், அரும்பு, பரிசுத்தமில்லாத புஷ்பம் மயிர்ச்சிக்குண்டான புஷ்பம், வண்டுகள் துளைத்த புஷ்பம் நன்றாக மலர்ந்த புஷ்பம் ஆகிய இவைகல் ஆகாது. முன் சொன்ன புஷ்பங்களில் ஒன்றும் அகப்படாவிட்டால் முன்சொன்ன புஷ்ப செடிகளில் - இலை - காய் - புல்லும் - நந்தவனத்தில் இருக்கிற பத்ரங்களும் ஆகும். அவைகளும் அகப்படாவிட்டால் பாவனையாக தியானிப்பதே நன்மையாகும். அர்த ராத்திரியில் கருவூமத்த·ம்புஷ்பம் சாத்தினால் நல்ல சிவலோகத்தை அடைவான்.

சதுர்தசியில் நாயுருவிபத்ரம் சாத்தினால் பரமசிவன் திருவடியில் சேர்வான். பரமசிவனுக்கு நெய்யும், குங்கிலியமும் ஒரு மாதம் தூபம் போட்டாலும் எண்ணெய் தீபம் வைத்தாலும் அவன் சாலோக பதவியை அடைவான். பசுவின் நெய்யால் விளக்கு வைத்தால் அதின் சுடர்முனை ஒவ்வொன்றுக்குப் பெருகுகின்ற ஆயிரஞ் சதுர்யுகம் வரையில் சிவலோகத்தில் வாழ்வான். பரமசிவனை எண் வகை பக்தியால் பூஜிக்கின்றவர்கள் ஈநஜாதியாய் இருந்தாலும் தேவேந்திரனாவான். பிராமண ஜாதியில் பிறந்தவர்கள் பரமசிவனிடத்தில் பக்தியில்லாவிட்டால் ஈனராவார்கள். சிவாலயத் திருப்பணி செய்கின்றவர்களை பரமசிவன் என்று நினைக்காத மனிதரென்று நினைத்தவர்கள் எல்லா நரகங்களையும் அடைவார்கள். கண்ணுக்கு இனிமையான பண்டத்தை பரமசிவனுக்கு அன்பாகக் கொடுத்தால் அவன் புண்ணியலோகம் போய்ச் சேருவான். நல்ல குரு உபதேசம் பெற்று சிவபூஜை செய்கிறவன் ஒரு இடையூறினால், சிவபூஜையிழந்த நாளில் சிவாலயத்துக்குப் போய் பிரதட்சணம் செய்து நமஸ்கரித்தால் சிவபூஜை செய்தது போலாகும். தரித்திரத்தாலும் திரவிய இச்சையாலும் வேதமார்க்கத்தை வஞ்சக மார்க்கமாக உபதேசம் செய்கிற

குருவும் அதைப் பெற்றுக்கொண்ட சிஷ்யனும் நரகத்தில் விழுவார்கள். இந்தப்படி வேத தருமத்தில் சொல்லப்பட்டுள்ளது. தேவர்-முனிவர்-மனிதர்-சித்தர் இவர்கள் செய்த லிங்கங்களும், பாவனை லிங்கங்களும் சுயம்புலிங்கம், வாணலிங்கம், படிக லிங்கம், பஞ்சலோகத்தால் செய்த லிங்கம், இராசலிங்கம், காந்தலிங்கம், நவரத்னலிங்கம், வெள்ளிலிங்கம், சுவர்ணலிங்கம் இவைகளெல்லாம் பிரும்மா, க்ஷத்திரிய, வைஸ்யர், சூத்ரர் என்கிற நான்கு ஜாதியாரும் பூஜை செய்யலாம்.

மற்ற அன்ய ஜாதியில் பிறந்தவர்கள் பூஜிக்கலாகாது. ஸ்திரீகளும், அந்நிய ஜாதியரும் திருவண்ணாமலையில் உண்டான லிங்கத்தை பூஜிக்கலாம். ஸ்திரீகள் இராசலிங்கத்தை தொட்டாலும் நாசமடைவார்கள். இந்த விதி, மார்க்கம் தெரிந்தவன் பழுதுபட்ட லிங்கம், பின்னமான லிங்கம், வெந்த லிங்கம், வெடித்த லிங்கம், இவைகளை கிணறு குளத்தில் விடவேண்டும். விடாமல் அதை பூஜித்தால் வியாதியும், தரித்ரமும் உண்டாகும். சிவபூஜையை வடக்கு திக்கு நோக்கி செய்ய வேண்டும். மற்ற திசை நோக்கியிருந்து பூஜை செய்யலாகாது. ருதுவான மாதர்களும் ஸ்திரீகளும், பாதகர்களும், சிவலிங்கத்தைத் தீண்டினால் பிரதிஷ்டை செய்ய வேண்டும். ஆரிடலிங்கத்துக்கும் சுவயம்பு லிங்கத்துக்கும் பிரதிஷ்டை செய்ய வேண்டியதில்லை. ஒரு மாதம், ஒரு பட்சம், அல்லது அநேக நாள் பூஜை செய்யாதிருந்தால் ஆசார்யரால் பிரதிஷ்டை செய்து சிவாலயத்தில் போய் பரமசிவனை வணங்கி சாந்தி செய்யவும். ரசலிங்கமானது மற்ற பத்து கோடி லிங்கத்துக்கு சமானமாகும். அந்த ரசலிங்கத்தை பூஜை செய்தால் சத்ரு

நாசமும், விவேகமும், மோக்ஷமும் உண்டாகும். ரசலிங்கத்தை பூஜை செய்த தீர்த்தத்தை உட்கொண்டால் சரீரத்தில் உள்ள வியாதியும் ஜன்மப்பிணியும் மற்ற துன்பங்களும் நீங்கும். பிரும்மபதம், விஷ்ணுபதம், இந்தரபதம், இவைகளும் மற்ற பதங்களும் கிடைக்கும். மகாபாதகங்கள் எல்லாம் நாசமாகும். ரசலிங்கத்தை தூஷித்தவர்கள் நரகத்தில் விழுந்து பின்பு தேவகதியால் பிறவிக் கரையில் வந்தேறினார். நாய்-நரி-பூனை-ஓணான்-காக்கை-கழுகு இவைகளின் உருவெடுத்து பின்பு மனிதராய்ப் பிறந்து புலையனுக்கு அடிமையாகி பின்பு கூனராகவும், ஊமையாகவும், குருடராகவும் பிறப்பார்கள். தேக அந்தியத்தில் கடைசியில் அவன் வயிறின் மேல் ரசலிங்கம் இருந்தால் மாதாபிதாக்களை கொன்ற பாபமும்,மதுபானம் செய்ததும் ஜென்மாந்திர பாபங்களும் நீங்கி அஸ்வமேத யாகம் செய்த பலன் உண்டாகும். நிர்மால்யமானது மனிதர் முனிவர்-தேவர் இவர்கள் பிரதிஷ்டை செய்த லிங்கங்களுக்கல்லாமல் மற்ற லிங்கங்களுக்கு இல்லை. ஆகையால் நிர்மால்ய துளசியுடன் அபிஷேக தீர்த்தத்தையும் உட்கொண்டால் பிறவித் துன்பமும் சாபமும் நீங்கி பிரும்ம ஞானமுண்டாகும். தத்வமறிந்த பெரியோர்களும், யோகீஸ்வரர்களும் நிர்மால்யத்தை சாப்பிடலாம். சிவனடியாரல்லாத மற்றவர்கள் அதைச் சாப்பிட்டால் பதினான்கு தேவேந்திரர் காலமளவும் நரகத்தில் விழுவார்கள். க்ஷத்திரியர் முதலான மூன்று ஜாதியாரும் சிற்பாசாரி செய்த சிவலிங்கத்தை பூஜிக்கலாம்.

**சிவபூஜா விதிச் சருக்கம் முற்றும்**

## 12. விபூதிச் சருக்கம்

சன்யாசி, வானபிரஸ்தன், கிருஹஸ்தன், பிரும்மசாரி இந்த நால்வராலும் உண்டாக்கின விபூதி அவர் அவர்களுக்கே ஆகும். அடியார்கள் மடாலயத்திலும், யாகசாலையிலும், உண்டான விபூதி, க்ஷத்திரியர் முதல் மூன்று குலத்தாருக்கும் ஆகும். எடுத்தவுடன் பிராமணர்களும் தரிக்கலாம். விறகினாலுண்டான விபூதியும் சிவாலய மடப்பள்ளியில் உண்டான விபூதியும், பெரியோர்கள் வீட்டில் உண்டான விபூதியும் ஸ்திரீகளும், அன்ய ஜாதிகளும் தரிக்கலாம். திருநீற்றை வடித்து ஜலத்தில் குழைத்து நான்கு குலத்தாரும், தவசிகளும், நித்தியம் மூன்று காலமும் தரிக்கலாம். ஸ்திரீகள், சன்யாசி, பிராமணன் ஆசார்ய உபதேசமில்லாதவன் வான பிரஸ்தன், பிரும்மச்சாரி, இவர்கள் ஜலத்தில் குழைத்து இடக்கூடாது. விபூதியை சரீரம் முழுவதும் தூலனம் செய்து மூன்று விரல் தோன்ற தரிசித்தால் சகல புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணி யாகம் செய்து பிராமணர்களுக்கு மூன்று லோகமும் தானம் கொடுத்த பலனாகும். உச்சி, நெற்றி, கழுத்து, உடம்பில் பாதி, இடுப்பு, கை, கால், இதுமுதல் மற்றை ஸ்தானங்களில் விபூதியை அன்பாய் மூன்று விரல் தோன்ற தரித்தால் அவனே சிவனாவான். விபூதியை நெற்றியில் பொட்டாயும், சதுரமாயும், சூலமாயும் தரிக்கலாகாது. விபூதியில் சந்தனமும், திருமண்ணையும் தரிக்கலாகாது. விபூதி தரித்தவனை தூஷிக்க எண்ணினவன் சிவாக்ஞைப் படிக்கு எல்லா நரகத்திலும் விழுவான். சங்கு, சக்கரம், சூலம் இந்த முத்திரையை தோளில் போட்ட ஆசார்யனும், அதைப் பெற்றுக் கொண்ட சிஷ்யனும் எரிவாய் நரகத்தில் விழுவார்கள். முன் காலத்தில் கௌதம

ரிஷியை தூஷித்த பிராமணர்களை அவர் மண்ணை தரித்தும், சிவனடியார்களை தூஷித்தும் நரகமடைய கடவது என்று சாபமிட்டார். அதுமுதல் வைஷ்ணவர்கள் தூஷித்தார்கள். விபூதியை திரிமூர்த்திகளும், தேவர்களும் தரிப்பார்கள். திருநீரே மோக்ஷத்தைக் கொடுக்கும். மற்றதெல்லாம் மாயையாம். விபூதியை எட்டு திக்கிலும் உள்ள சகலரும் தரிப்பார்கள். திரிபுண்ட்ரமாயும் ருத்ராட்சமும் தரிக்கின்றவர்களை விட்டு நீங்காமல் பரமசிவன் உமையுடன் இருப்பார். விபூதி, ருத்ராட்சம், பஞ்சாட்சரம் இவைகளால் மோட்சம் வசப்படும். விபூதி ருத்ராட்சம் தரிக்கின்றவர்கள் எடுத்த ஜன்மம், அவர்களை பூஜிப்பதே பூஜை. அவர்களுக்கு கொடுப்பதே தானம். விபூதியாவது விபூதியை ஒழிப்பதால் அதற்கு திருநீறென்று வேதம் சொல்லும். முன்காலத்தில் ஆத்மாக்கள் நரகத்தில் விழாதபடிக்கு விபூதியை ஔஷதமாக சிவன் உமையவள் கையில் கொடுத்தார். விபூதியைத் தரித்தால் சகலவியாதியும் முன் வினை, பின் வினைகளும் சகல பேய்களும் நீங்கும். பிறப்பும் இறப்பும் அற்று ஞானமுண்டாகும். விபூதியைவிட, புண்ணிய தீர்த்தங்கள் இல்லை. ஔஷதங்களும் இல்லை. வைத்தியர்களும் இல்லை. வேகாத விபூதி, கரிந்த விபூதி, சிவந்த விபூதி இவைகளை தரிக்கலாகாது. தவள நிறமான விபூதியை தரிக்க வேணும். அதை தரித்தவர்களுக்கு சர்வ ஐஸ்வர்யமும் மோட்சமும் உண்டாவதால், அதற்கு பூதி என்றும் திருவருள் உண்டாகிறதால் ருத்ராட்சை என்றும் பேர் வைத்தார்கள்.

**விபூதிச் சருக்கம் முற்றும்**

# 13. ருத்ராக்ஷச் சருக்கம்

நாதசன்மாவாக்யம் திரிபுரனென்கிற ராட்சதனால் பிரும்மா, விஷ்ணு தேவர்கள் முதலான சகலரும் துன்பமடைந்து, பரமசிவனை நோக்கி, நூறு வருஷம் தவம் செய்ய அதை பரமசிவன் அறிந்து உமையவளுடன் ரிஷபவாகனத்தின் மேல் எழுந்தருளிப் போய் அவர்களைப் பார்த்தார். அப்போது சுவாமியின் மூன்று கண்களில் இருந்து மூன்று நீர்த்துளிகள் விழுந்தன. அதுவே ருத்ராட்சமணிதான். இதன் விபரம் சூரியன், நேத்திரத்தில் உண்டான ருத்ராட்சமணிதான். இதன் விபரம் பன்னிரண்டு விதம். அது சுவர்ண நிறம். சந்திர நேத்திரத்தில் இருந்து உண்டான ருத்ராட்சம் பதினாறு விதம் அது வெள்ளை நிறம். அக்னி நேத்திரத்தில் இருந்து உண்டான ருத்ராட்சம் பத்து விதம். அது கறுப்பு நிறம். பிராமணர்களுக்கு வெள்ளை ருத்ராட்சமும் க்ஷத்திரியர்களுக்கு பொன்னிற ருத்ராட்சமும் மற்றவர்களுக்கு கருப்புநிற ருத்ராட்சமும் ஆக இப்படியாகும்.

ருத்ராட்சம் காய்க்கிற மரங்கள்* முப்பத்தி எட்டு விதம். ஒருமுக இருமுக ருத்ராட்சம் உள்ளது சுவரூபம். அதை தரித்தால் பிராமணரையும் பசுக்களையும் கொன்ற பாவம் நீங்கும். மூன்று முகமணிகள் அக்னி சுவரூபம். அவற்றைத் தரித்தால் ஸ்திரீகளை கொன்ற பாபம் நீங்கும். நான்குமுக

---

*வெண்மை மறை யோருரிமை வேந்துரிமை செம்மை
வண்மைவணி கர்க்குமுன் வகுத்ததொரு பொன்மை
உண்மையுள சூத்திரருக் குள்கறப்பே
முண்மணிகள் காய்க்குமர முப்பது னெட்டே.

மிக்கபதின் மூன்றினுக்கு மேலுமுகமில்லை
தக்கசிகை யொன்றுதலை மாலயையும்நாலொன்பா
னக்கலை யிரட்டிக்கன மாற்குற நூற்றெட்டாங்
கைக்கணிகள் பன்னிரண்டு காதினிலவ் வாறே.

மணிகள் பிரும்ம சுவரூபம். அதைத் தரித்தால் மனுஷ்யரை வதைத்த பாவம் நீங்கும். ஐந்து முகமணிகள் காலாக்னி சுவரூபம். அதை தரித்தால் சரீர வியாதி நீங்கும். ஆறு முகமணிகள் சுப்பிரமணிய சுவரூபம். அதை தரித்தால் பிரம்மஹத்தி பாவம் நீங்கும். ஏழு முகமணிகள் ஆதிசேஷம் சுவரூபம். அதைத் தரித்தால் பொன்னைத் திருடின பாவம் நீங்கும். எட்டு முகமுள்ளது கணபதி சுவரூபம். அதை தரித்தால் குருவின் மனைவியைத் தொட்ட பழி நீங்கும். ஒன்பது முகமுள்ளது பைரவ சுவரூபம். அதைத் தரித்தால் ஒரு சிவசாயுச்சியமும் விவேகமும் உண்டாகும். அவைகளை இடது கையில் மாலையாகக் கோர்த்து தரித்தால் ஒரு கோடி பிராமணனைக் கொன்ற பாபம் நீங்கும். பத்து முகமணிகள் விஷ்ணு சுவரூபம். அதைத் தரித்தால் பிசாசுபாதையும் மிருகப்பாதையும் நீங்கும். பதினொரு முகமணிகள் சுவரூபம் அதைத் தரித்தால் யாகம் செய்த பலமும், மோட்சமும் உண்டாகும். பன்னிரண்டு முகமணிகள் சூர்யசுவரூபம் . அதைத் தரித்தால் அநேக யாகம் செய்த பலன் உண்டாகி அவயவபங்கம் செய்த பாபம் போகும். பதிமூன்று முகம் உள்ளது சுப்பிரமண்ய சுவரூபம். அதைத் தரித்தால் ஐஸ்வரியமும் அஷ்டமாசித்தியும் உண்டாகும். மேலும் மாதா, பிதா, பந்துக்கள், குழந்தை, தமையன், கர்ப்பஸ்திரீகள் இவர்களை வதைத்த பாபம் நீங்கும். பதின்மூன்றுக்கு மேற்பட்ட முகம் இல்லை.

சிகையில் ஒரு மணியும், சிர மாலையில் முப்பத்தாறு மணியும், கழுத்தில் முப்பத்தி இரண்டு மணியும் மார்பில் நூற்று எட்டு மணியும், கைகளில் பன்னிரண்டு மணியும், பாஹுக மாலையில் ஐம்பது மணியும் ஆக இந்தப்படி தரிக்கலாம். அப்படி தரித்தவர்களுக்கு நூறுயாகம் செய்த

பலன் உண்டாகும். முன்னாளில் ருத்ராட்சப் பொதியை சுமந்த ஒரு கழுதையானது விந்தியகிரி பக்கத்தில் போய் இறந்து கைலாசத்தில் போய் ஒரு பகல் காலம் வசித்து இருந்தது. பொன், வெள்ளி, முத்து, பவழம் இவைகளை மணிகளின் மத்தியில் கோர்த்து தரிக்க நல்லது. எந்தக் குலத்தில் பிறந்தவர்களும் பஞ்சாட்சரத்தை தியானித்து தரிப்பது நன்மையாகும். புண்ணியம் செய்கிற காலம் சிவபூஜை, தவம் ஆகிய இந்தக் காலங்களில் ருத்ராட்சம் தரித்தால் நன்மையாகும். அநேக பாபங்களைச் செய்தவர்கள் ருத்ராட்சம் தரித்தால் ஞானம் பெறுவார்கள். தவசை உடைய பெரியோர்கள், ஸ்நானம், மலவிசர்க்கம், ஸ்திரீபோகம், போஜனம், வருத்தம், நித்திரை, சூதகம் இந்தக் காலங்களில்ருத்ராட்சம் தரிக்கக்கூடாது.

இறப்பதற்கு முன் நூறு மணிகள் தரித்தவர்கள் பெருமையைச் சொல்ல அரிதாகும். ருத்ராட்ச மாலைகளை, சிரசு, காது, கழுத்து, மார், கை, தோள், இரண்டு மணிக்கட்டு இவைகளில் தரித்தால் அவன் சிவசுவரூபமாவான். ருத்ராட்ச மாலையை பஞ்சாட்சர தியானம் செய்து தரித்தவர் கூடவே பரமசிவன் இருப்பார். அவர்கள் போன ஸ்தலமெல்லாம் மோக்ஷ ஸ்தலமாகும். அவர்களை தரிசித்தவர்கள் எல்லாம் தேவர்கள் ஆவார்கள். அதை நாய் தரித்தாலும், அதற்கு ஜனனம் ஒழிந்து நல்ல ஞானம் உண்டாகும். இந்த ருத்ராட்ச சரித்திரத்தை நாதசன்மாவானவர். அனவர்த்தி அம்மையார்க்குச் சொல்ல, அதை அவர்கள் கேட்டு, கால், கை, கண், காது, முதலான அவயவ பேதமே அல்லாமல் அறிவால் பேதமில்லை. ஆகையால் இப்பேர்ப்பட்ட சரித்திரத்தை அறிந்து மோட்சமடையாமல் அக்ஞானத்தில் அழுந்திப் போகின்றதே யென்று கவலை அடைந்து பின்பு

தெளிந்து நின்று நாதசன்மாவை வணங்கி இந்த மான்மியத்தை அறியாத ஜீவர்கள் எந்த விதத்தில் கதியை அடைவார்கள் என்று விண்ணப்பம் செய்ய அவர் சொல்லுகிறார்.

**ருத்ராக்கச் சருக்கம் முற்றும்**

## 14. சிவகீர்த்திச் சருக்கம்

அனவர்த்திக்கு நாதசன்மா சொல்லுகிறார். கேளும் அனவர்த்தியே இந்தக் கலியுக பலத்தால் சகல ஜீவ ராசிகளும் இம்மைக்கு வேண்டிய வரங்களும், மறுமைக்கு வேண்டிய முக்தியும் பெறுவது அருமையாகும். அதுவிசேஷமான ஸ்தலங்களில் அல்லாமல் வேறொரு ஸ்தலத்தில் சித்திக்காது மரணம் வருவதற்கு முன் அந்த ஸ்தலத்தில் ஒரு வருஷம் வசித்தாலும் அந்த ஸ்தல புராணத்தைப் படித்தாலும் படிக்கும்போது கேட்டாலும், ஸ்துதித்தாலும், ஸ்துதிக்கக் கேட்டாலும், தேகாந்தத்தில் ஸ்துதித்தாலும் மோக்ஷ மடைவார்கள் - யாராவது அரகராசம்போ என்று இதைப்போன்ற சிவநாமங்களைக் கூறி சிவனை ஸ்துதித்தால் அவர்களை பரமசிவன் சீக்கிரத்தில் வந்து ரக்ஷிப்பார். அவர்கள் செய்த பாவம் நீங்கி முடிவில் மோட்சம் அடைவார்கள். சிவசிவா என்று மனமார ஸ்துதிப்பவர் முன்னே பரமசிவன் வந்து திருநடனம் செய்து அவர்களை விட்டு நீங்காமல் இருப்பார். அப்படி ஸ்துதித்தவர்களை எமனும் வணங்குவான். அவர்கள் செய்த பாபம் நீங்கும். பிறவிக் கடலில் மூழ்க மாட்டார்கள். நீசரும் அப்படி ஸ்துதித்தால் சாரூப்ய பதவியை அடைவார்கள். ஒருவன் காதில் சிவசிவா என்று திரிகரண சுத்தியுடன் சொன்னால் அவனுடைய பாவமும் இறப்பும் பிறப்பும் நீங்கும். நல்ல மனதுடன் சிவசிவா என்று மூன்று தரம் சொன்னால் அதில் ஒரு சொல்லுக்கு அவனைப் பரமசிவனானவர் சிவலோக பதத்தில்

வைப்பார். மற்ற இரண்டு சொல்லும் அவர் மேல் கடனாய் இருக்கும். பூஜைகளும், தர்மமும் செய்யாதவனானாலும் பரமசிவனை ஸ்துதித்தால் அவனிடத்தில் ஸ்ரீ தேவியும், பூதேவியும் ஸரஸ்வதியும் குடியிருப்பார்கள். நல்ல கதியும் உண்டு. சுவாச ஓசையில் சிவன் திருநாமத்தை உச்சரித்தால் அவர்களுடைய வினை ஒழிந்து மோக்ஷாநந்தத்தைப் பெறுவார்கள். பிரதோஷ காலத்தில் தன்னால் கூடின வரையில் பஞ்சாட்சரஜபம் செய்து நந்திகேஸ்வரரின் இடது புஜத்தை ஸ்பரிசித்து இரண்டு கொம்புக்கும் மத்தியாக பரமசிவனை, தரிசித்தால் சகலமான தர்மங்களையும், தவங்களையும் செய்த பலன் உண்டாகும். சிவத் தியானத்துடன் பாதத்தில் பாதம் படும்படியாக மெள்ள நடந்து போய் சிவாலயத்தை பிரதட்சணம் செய்தால் அநேக கோடி பிரதட்சணம் செய்த பலன் உண்டாகும். ஒரு தரம் பிரதட்சணம் செய்தால் அபம்ருத்யு நீங்கும். மூன்று தரம் பிரதட்சணம் செய்தால் கோடி வியாதி நீங்கும். ஐந்து தரம் பிரதட்சணம் செய்தால் சந்தானம் முதலான சம்பத்து உண்டாகும். நூறு தரம் பிரதட்சணம் செய்தால் பிரும்மஹத்தி பாவம் நீங்கும். ஆயிரம் தரம் பிரதட்சணம் செய்தால் தேவேந்திரனாவான். நந்திகேஸ்வரரை பிரதட்சணம் செய்தால் பிறவித்துன்பம் நீங்கும். வலமும் இடமுமாக பிரதட்சணம் செய்தால் ஒரு பிரதட்சணக்ஷணத்திற்கு ஒரு கோடி பிரதட்சணம் செய்த பலன் உண்டாகும். கர்ப்பகிரஹத்தைச் சூழ்ந்த பிராகாரத்தில் ஒரு தரம் பிரதட்சணம் செய்தால் அதைக் கேட்டு பிரதட்சணம் செய்ததற்கு சமானமாகும். மூன்றாம் பிராகாரத்தில் ஒரு தரம் பிரதட்சணம் செய்தால் அதை கோடி பிரதட்சணம் செய்ததற்கு சமானமாகும். மூன்றாம் பிராகாரத்தில் ஒரு தரம் பிரதட்சணம் செய்தால் கர்ப்பகிரஹத்தை பத்து கோடி பிரதட்சணம் செய்ததற்கு சமானமாகும். சரீரத்தில் மண்பட விழுந்து அடிக்கடி வணங்கி

வணங்கி தண்ட பிரதட்சணம் செய்தால் அதனிலும் பத்து கோடிக்கு அதிகமான பலன் உண்டாகும். நல்ல மனதுடன் ஒரு தரம் அங்கே பிரதட்சணம் செய்தால் அதிலும் அளவில்லாத நூறாயிரம் மடங்கு அதிக பலன் உண்டாகும். அப்படி செய்தவன் மூடனாய் இருந்தாலும் சிவபுரத்தை அடைவான். சன்யாசிகள் இடமாகவும் பிரும்மசாரிகள் வலமாகவும் வானபிரஸ்தனும் கிரஹஸ்தனும் வலமுமிடமுமாகவும் பிரதட்சணம் செய்தால் அதிலொன்றே பத்து கோடி பிரதட்சணம் செய்ததாகும். கருவை கொலை செய்த பாவிகளும் இந்த விதிப்படி பிரதட்சணம் செய்தால் அவர்கள் சூரியனைப் போல் பிரகாசிப்பார்கள். ஆகையால் அறிஞர்கள் பிரதட்சணம் செய்வதை எப்போதும் விடார்கள். ருத்ராட்ச மாலையும், விபூதியும் தரித்து பஞ்சாட்சரம் ஜபித்து சிவபூஜை செய்து பரமசிவனை பிரதட்சணம் செய்து வணங்கி சிதம்பரத்தில் ஆகிலும், விருத்தாசலத்தில் ஆகிலும், போய் அடியார்களை பூஜித்து தன்னாலான வரையில் திருப்பணி வேலை செய்து தேக அந்தியத்தில் நன்றாய் சிவத்தியானம் செய்கிற புண்ணியவான்களை அல்லாமல் வேறொரு சிவனையும் நாம் அறிவோம் என்று நாதசன்மாவானவர் அனவர்த்திக்குச் சொன்னார்.

**சிவகீர்த்திச் சருக்கம் முற்றும்**

## 15. கோபர்வதச் சருக்கம்

அனவர்த்தி அம்மையாரானவர் நாதசன்மாவை வணங்கி கோபர்வதத்தின் சரித்திரத்தை சொல்ல வேண்டுமென்று கேட்க அவர் சொல்லுகிறார், கேளாய் அனவர்த்தியே கைலாசகிரியில் இருந்து பரமசிவனானவர் உமாதேவியுடன்

ரிஷப வாஹனத்தில் மேலெழுந்தருளி சிவகணங்கள் புடைசூழ விருத்தகிரியில் போய் ஈசுவரியைப் பார்த்து நான் போய் தாருகாவனத்து ரிஷிகள் செய்கிற தவசின் பலத்தையும் அவர்கள் மனைவிகளின் பதிவிரதா தருமத்தையும் சோதித்து பார்த்து வருகிறேன். நீ இந்த நந்தவனத்தில் இரு என்று சொன்னார். அதற்கு ஈசுவரியானவள் நான் மாத்திரம் தனியாய் இருக்க மாட்டேன் என்று கூற சுவாமியானவர் நந்திகேசுவரரை அவளுக்கு துணையாக விட்டு விட்டு மஹா விஷ்ணுவை மோகினி ரூபமாய் வரச் செய்து அழைத்துக்கொண்டு தாருகாவனத்துக்குப் போனார். அந்த நந்தவனத்திலல் இருந்த ஈசுவரியானவள் அங்கே ஒரு சிவலிங்கத்தையும் ஒரு தீர்த்தத்தையும் கண்டு சந்தோஷித்து நந்திகேசுவரர் பணி செய்ய அந்தச் சிவலிங்கத்துக்கு பூஜை செய்ய தாருகாவனத்திற்கு போய் இருந்த சுவாமியானவர் அதை விட்டு கோடி சூரிய பிரகாசம் போல ஈசுவரி பூஜை செய்த லிங்கத்தில் வந்து பிரகாசித்து தரிசனம் கொடுத்து ஈசுவரியைப் பார்த்து உனக்கு வேண்டிய வரங்களைக் கேள் என்றார். அதற்கு ஈசுவரியானவள் இந்த கோபர்வதத்தில் வந்து தரிசனம் செய்கிறவர்களெல்லாம் சகல ஐஸ்வர்யங்களை அடைய வேணும். இந்த ஈசான கங்கையில் ஸ்நானம் பண்ணினவர்களெல்லாம் ஆத்ம ஞானத்தை அடைய வேணும். உம்முடைய திருவடியை வணங்குகிறவர்களெல்லாம் நன்றாய் சாயுச்சிய பதவியை அடைய வேணும். ஆகிய இந்த வரங்களை தேவரீர் எனக்கு கொடுக்க வேணுமென்று கேட்க சுவாமியானவர் அப்படியே வரம் கொடுத்து தான் சக்தீஸ்வரனாகவும், உமையவள் சக்தீசுவரியுமாக வீற்றிருந்தருளினார். அந்த ஈசான கங்கையில் போய் ஸ்நானம் செய்து அந்த பரமசிவனை நமஸ்கரித்து

பஞ்சாட்சரத்தை பன்னிரண்டு லட்சம் முறை ஜெபம் செய்தவர்கள் சிவாக்ஞைப்படி சிவபதவியை அடைவார்கள். அந்த கோபர்வதத்தை விட்டு நீங்காமலிருந்து வரம் பெற்றவரானாலும் அங்கே கணநாதரானவர்களும் மோட்சம் அடைவார்கள். அந்த ஸ்தலத்துக்குப் பெயர், அந்த லிங்கத்தை ஈஸ்வரியாகிய சக்தி பூஜித்ததால் சத்தீச்சரம் என்றும் நந்திகேஸ்வரர் உபசரித்ததால் கோபர்வதம் என்றும் பேராயிற்று.

மேலும் அந்த ஸ்தலத்தில் மகாதவசைச் செய்த கருணாபரிபூர்ணரென்று ஒரு மஹாத்மா இருக்கிறார். அவரை தரிசித்து சேவித்தவர்களுக்கு விரும்பின வரங்களை கொடுக்கிறார். அவரை மகா பாவம் செய்த ஒரு பிராமணன் பார்க்க அவனை அவர் ஆட்கொள்ள நினைத்து அவன் செய்த பாவங்களை எல்லாம் ஞான திருஷ்டியால் அறிந்து அவனை தன் முன்னே தூரத்தில் வரவழைத்து நிறுத்தி அவன் மேல் கிருபா நோக்கம் வைக்க - அவன் தான் செய்த பாபங்களெல்லாம் நீங்கி நல்ல புத்தியுண்டாகி நித்தியம் திரிகாலமும் அந்த ஈசான கங்கையில் அந்த கருணபரிபூர்ணரையும் சக்தீசுவரரையும் பிரததட்சணம் செய்து வணங்க, அவர் அவனை தன் அருகில் அழைத்து அவனுடைய விருத்தாந்தங்களை விசாரிக்க அவன் சொல்லுகிறான். கேளுமையா சுவாமி நானிருப்பது சுந்தரதேசம், என் பெயர் துருவிருத்தன். நான் திருடுவதற்காக இவ்விடத்திற்கு வந்தேன். நான் செய்யாத பாவங்கள் ஒன்றும் இல்லை. என்று விபரமாய் சொல்லி நான் நல்வழியைசச் சேர எனக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்று அவர் பாதத்தில் விழ அவர் அவனை நீ நம்மைவிட்டு நீங்காதிரு என்று

சொல்லி அவனுக்கு பஞ்சாட்சர உபதேசம் செய்ய அவன் மகாஞானியாகி சக்தீசுவரர் திருவடியில் வீழ்ந்தான். ஆகையால் அந்த கோபர்வதத்தில் மூன்றுநாள் வரையில் நல்ல மனதுடன் இருந்தவர்கள் சக்தீசுரர் திருவடியை அடைவார்கள். அங்கே குடும்பத்துடன் வசித்தவர்கள் சாரூப பதவியை அடைவார்கள்.

**கோபர்வதச் சருக்கம் முற்றும்**

## 16. பிருடிச் சருக்கம்

நாதசன்மாவானவர் அனவர்த்திக்குச் சொல்லுகிறார். கேளாய் பெண்ணே! மகத தேசத்தில் பிருடிதனென்று ஒரு பிராமணன் இருந்தான். அவன் மனைவி பேர் ருசி. அவன் மனைவி சகிதமாய் பூமி பிரதட்சணம் செய்யப் புறப்பட்டு சிதம்பரம் துவாரகை முதலான அநேக ஸ்தலங்களில் போய் தரிசனம் செய்து துவாரகாபுரிக்குப் போனார்கள்.அங்கே ஒரு சிவயோகியரானவர் இவர்களைக் கண்டு நீங்கள் எங்கே போய் வருகிறிர்களென்று கேட்க அதற்கு அவர்கள் நாங்கள் போய் சிவாலய முழுவதும் தரிசனம் செய்துவிட்டு வந்து இங்கே உம்முடைய பாத தரிசனமும் கண்டோமென்றார்கள். அதை அவர் கேட்டு சிரித்து நீங்கள் வீணாகக் கால் நோக வெகு தூரம் திரிந்தீர்களேயல்லாமல் பெருமையான ஸ்தலங்களுக் காகிலும் போகவில்லை. போகும்போதே எதிரே தேவவிமானம் வருகிற ஸ்தலம் அநேகம் உண்டு என்று சொல்ல அதை அவர்கள் கேட்டு அவரை வணங்கி ஸ்துதித்து அந்த ஸ்தலங்களின் பேரைக் கேட்க அந்த யோகீஸ்வரர் சொல்லுகிறார், மேம்பட்ட கீர்த்தியைத் தரத்தக்க அத்தலங்களிற்கு போகாவிட்டால் மோட்சம் கிடைக்கா

தென்றார். அதற்கு பிராமணரானவர் நாங்கள் அதிக வழி நடந்த பிரயாணத்தினால் இளைப்புற்றிருக்கின்றோம். ஆகையால் உம்முடைய திருவருட்பார்வை கொடுத்து ரட்சிக்க வேண்டும் என்று சொல்ல அவர் அவர்களுக்கு விபூதி கொடுத்து இதை நீங்கள் தரித்துக் கொண்டால் உங்களை கோபர்வதத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும். அங்கே நீங்கள் மூன்று நாள் வரைக்கும் உபவாசம் இருந்து அந்த மூன்று நாளும் அங்கேயிருக்கிற சக்தீசுவரரை பூஜை செய்தால் உங்களுக்கு சகலமும் சித்தியாகுமென்று விபூதி கொடுத்தார். அதை அவர்கள் தரித்துக்கொண்டு கோபர்வதம் போய் ஈசான கங்கையில் மூழ்கி முன் சொன்னபடி மூன்றுநாள் சத்தீசுவரரைப் பூஜை செய்து பஞ்சாட்சரத்தை ஜெபிக்க அந்த சக்தீசுவரரானவர் உமாதேவியுடன் ரிஷப வாஹனத்தின் மேல் வந்து நின்று அவர்களைப் பார்த்து உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்களென்றார். அவர்கள் அவரைப் பணிந்து, ஸ்துதித்து, எங்களுக்கு பிறவியை நீக்கி மோட்சத்தைக் கொடுக்க வேணுமென்று சொல்ல பரமசிவனானவர் அவர்களுக்கு அப்படியே வரம் கொடுத்து ஒரு தெய்வ விமானமும் கொடுத்து இதில் நீங்கள் ஏறி ஸ்தலவாசம் செய்யுங்களென்று சொல்ல அதில் அவர்கள் ஏறி சிவசக்தி ரூபம்தரித்து சகல ஸ்தலங்களிலும் போய் வாசம் செய்து முடிவில் அந்த சக்தீஸ்வரர் திருவடியிலடைந்தார்கள்.

(விருத்தாசல புராணம்:- பாபநாசம், விசாலை, சந்திர பாகை, அற்புதை பரிதிபுரி, திருவாலவாய், திருச்சிராப்பள்ளி, சிந்து, கோமதி, இரணி, காவிரி, பெருமைப்பெற்ற கற்குளம், பிரவாளம், திருவிறையூர், திருவானைக்கா, திருமயிலாடுதுறை, திருவண்ணாமலை, திருவாரூர், சிதம்பரம்.

திருத்துருத்தி, சந்திரரேகை, பழமையாகிய திருமழபாடி, சுந்தரகிரி, திருத்தலமாகிய திருநெய்த்தானம், திருமங்கலம், திருவாஞ்சியம், திருவிடைமருதூர், பரமசிவன் எழுந்தருளிய திருவெண்ணி, திருமாயூரம், குளிர்ச்சிபொருந்திய திருவாவடுதுறை, மணங்கமழ்கின்ற திருக்கோடிக்கா, விருத்தாசலம், கோபரூப்பதம் இவைகளெல்லாம் முக்கிய ஸ்தலம்.)

**பிருடிச் சருக்கம் முற்றும்**

## 17. சசிவண்ணச் சருக்கம்

பரமசிவனானவர் மஹாவிஷ்ணுவுக்குச் சொல்லுகிறார். கேளும் மஹா விஷ்ணுவே தபசு செய்கிற பெரியோர்களின் பெருமையைச் சொல்லுகிறேன். எப்படியென்றால், பிராமண வம்சத்திலே பாவவெச்சனென்று ஒரு பிராமணன் இருந்தான். அவனுக்குச் சசிவவண்ணன் என்று ஒரு குமாரன் இருந்தான். அந்தச் சிறுவனானவன் அடியார்களையும், உம்மையும், எம்மையும், தூஷித்தும், அடுத்தவர்களைக் கெடுத்தும், மாம்சம், கள்ளுகளை சாப்பிட்டும், புலைச்சிகளைப் புணர்ந்தும் ஆகிய இதைப்போல் ஒத்த அநேக துன்மார்க்கங்களைச் செய்து அதனால் குமரகண்டவலி முதலான அநேக வியாதிகள் கண்டு பிசாசு வடிவமாகி அதிக வருத்தப்பட்டுக்கொண்டு இருந்தான். அதை அவன் தகப்பன் பார்த்து கவலைப்பட்டு தேவதா பக்தியுள்ள ஒரு பெரியவர் பாதத்தில் விழுந்து நமஸ்காரம் செய்து தன் குமாரன் செய்த துன்மார்க்கங்களையும், அதனால் அவன் வியாதி அடைந்து சங்கடப்படுகிறதையும் சொல்ல அவர் அதைக் கேட்டு அவனுக்கு கோபர்வதத்தில் உள்ள சத்தீசுவரரை பூஜை செய்து

சுகப்பட்டவர்களுடைய சரித்திரங்களைச் சொல்லி, நீயும் உன் குமாரனும் அந்தப்படிக்கு கோபர்வதத்தில் போய் தானதருமம் செய்து சக்தீசுவரரைப் பணிந்து அங்கே இருக்கிற மானந்திபாராயணர் என்கிற பெரியவரை தரிசனம் செய்து அவருக்கு உபசாரம் செய்திருந்தால் உன் குமாரன் பிணி நீங்குமென்றார். அதை அந்த பிராமணன் கேட்டு தன் குமாரனை அழைத்துக்கொண்டு கோபர்வதத்தில் ஈசான கங்கையில் மூழ்கி சக்தீசுவரரை வணங்கி மாநந்தி பாராயணர் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து தன் குமாரன் செய்த விருத்தாந்தத்தைச் சொல்ல, அவர் அந்த குமாரன் மேல் தயவு வைத்துக் கிருபாகடாக்ஷத்தினால் பார்த்த மாத்திரத்தில் அவன் செய்த பாபங்களும், வியாதியும் நீங்கிற்று. பின்பு, அவன் அவருக்கு உபசாரம் செய்ய, அவர் அவனுக்கு விபூதி தீட்சையும், பஞ்சாட்சர உபதேசமும் செய்ய அவன் திவ்ய ஞானம் பெற்று மோட்சம் அடைந்தான். அவனால் அவனுடைய தகப்பனும், பித்ருவர்கத்தாரும், இனத்தாரும், நரகத்தை விட்டு சிவலோகம் அடைந்தார்கள். அந்த சசிவர்னன் மனைவியும் சிவலோகம் அடைந்தாள். கேளாய் விஷ்ணுவே பெரியோர்களுடைய பெருமையைச் சொல்வதரிதாகும். ஆயினும் இன்னொரு கதை சொல்லுகிறோம்.

அது எப்படி என்றால் சுவகை என்று ஒரு தாசியிருந்தாள். அவள் சிரிக்கிற சிரிப்பால் ஞானவான் களையும் காமமுண்டாக்கி சிரிக்கச் செய்வாள். இந்தப் பிரகாரம் அந்தத் தாசியானவள் மனிதர்களை பல விதத்தில் மோகிக்கச் செய்து அவர்களிடத்தில் உள்ள பொருள்களை அபஹரித்து அவர்களை சம்போகம் செய்து அதனால் அதிக

ரோகம் அடைந்து சரீரம் மெலிந்து ரொம்பவும் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தாள். அப்படி அவள் சில நாள் இருந்த பின்பு ஒரு யோகீசுவரர் வந்தார். அவரை அவள் பணிந்து பாதபூஜை செய்து அந்த பாதோதகத்தை சாப்பிட வியாதி நீங்கிற்று. பின்பு அவள் அவரை வணங்கி தன்னை அடிமை கொண்டு ரட்சிக்கவேண்டுமென்று ரொம்பவும் வேண்ட - அவர் அவளுக்கு ஞானோபதேசம் செய்ய அவள் தன்னுடைய பிறவி நீங்கி நம்முடைய திருவடியைச் சேர்ந்தாள். அந்தப் பலத்தால் அவள் சுற்றத்தாரும் சுவர்கம் போய்ச் சேர்ந்தார்கள். ஆகையால் நாம் உமாதேவி மேல் வைத்திருக்கிற அன்பைப் பார்க்கிலும் அதிகமாக நம்முடைய பக்தர்கள் மேல் அன்பு வைத்திருப்போம் என்று பரமசிவன் சொல்ல விஷ்ணுவானவர் அதைக் கேட்டு சிவனைப் பூஜை செய்து அவர் திருவடிகளை தன் சிரசின் மேல் வைத்துக் கொண்டு ஞான உபதேசம் பெற்று சிதம்பரத்தில் போய் நடன தரிசனம் கண்டார். அப்பால் பரமசிவனானவர் விஷ்ணுவைப் பார்த்து விஷ்ணுவே நாம் உமக்கு இந்த விருத்தாசலத்தில் ஞானோபதேசம் செய்தோம். சிதம்பரத்தில் நடனதரிசனம் கொடுத்தோம். ஆகையால் இந்த விருத்தாசலமும், சிதம்பரமும் ஒன்றுக்கொன்று பேதமில்லை. எமலோகம் போகவேண்டுமானால் நம்முடைய அடியார்களை நிந்தியுங்கள். மோட்சம் வேண்டுமானால் நம்முடைய அடியார்களை வந்தியுங்கள். என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினார்.

அப்பால் விஷ்ணுவானவர் பரமசிவனை தியானம் செய்துகொண்டு வைகுண்டம் போய் நித்திரையில் இருந்தார். இரசகுளிகை நன்மையுள்ளதாய் இருந்தால் இரும்பும்

பொன்னாகும்.மிருத சஞ்ஜீவி மருந்தினால் இரும்பும் பொன்னாகும். மிருத சஞ்சீவி மருந்திருந்தால் இறந்தவர்கள் பிழைப்பார்கள். அதுபோல சத்குரு கிடைத்தால் சிவகடாக்ஷம் பெற்று சாலோக சாமீப, சாரூப, சாயுச்சிய்ய மென்னும் நான்கு பதத்தையும் பெறுவார்கள். நான்காம் பதமாகிய சத்திநி பாதம் பெறுவார்கள். அப்பேர்ப் பட்டவர்கள் பெருமையை நம்மால் அளவிட்டு சொல்ல முடியாது. இந்த விருத்தாசல புராணத்தை வணங்கி பூஜை செய்தவர்களும் அதை அன்புடன் எழுதினவர்களும், படித்தவர்களும், அதற்குப் பொருளுரைத்தவர்களும், அதை அன்புடன் காதால் கேட்டவர்களும் ஆகிய இவர்களெல்லாம் எவ்வளவு பாவம் செய்திருந்தாலும் அவை நீங்கி சுகத்தையே அடைவார்கள்.

**சசிவன்னச் சருக்கம் முற்றும்**

இந்த விருத்தாசல புராண ஸஸ்கிரஹம் கள்ளப்புலியூர் பருவத சஞ்ஜீவி சுவாமிகள் செய்தது. இதில் கடைசியில் உள்ள சசிவன்னச் சருக்கக் கதை பொன்னூர் முதலியார் பொக்கு புத்தகத்தைப் பார்த்து செய்தது. இது ஜய வருஷம் தை மாதம் 13ந்தேதி துவாபர அமாவாசை, உத்திராட நட்சத்திரம் இந்த சுபதினத்தில் சூர்யோதயமாய் ஐந்து நாழிகைக்கு எழுதி நிறைவேறிற்று.

## திருவோத்தூர் புராணச் சருக்கச் சுருக்கம்:

### 1. திருநகரச் சருக்கம்:

ஸ்காந்தத்தில் சொன்ன வேதபுரீஸ்வரரின் மகத்துவத்தை நைமிசாரண்ய முனிவர்கள் சூதமகாரிஷியினிடத்தில் விரிவாக சொல்ல வேண்டும் என்று கேட்க சூத முனிவர் சொல்கிறார்.

### 2. வயிரவர் உத்பவச் சருக்கம்:

வயிரவர் பிரம்மாவின் சிரசைக் கிள்ளினதாகவும், விஷ்ணுவின் நெற்றியில் அவர் சங்கால் மோதினதாகவும் சொல்லப்பட்டுள்ளது.

### 3. ஆறுமுகன் சக்திப்பெற்றச் சருக்கம்:

நைமிசாரண்ய முனிவர்கள் சூத முனிவரை வணங்கி முருகக் கடவுள் தவம் செய்த விதத்தைக் கூற வேண்டுதல்.

### 4. வீர நடனச் சருக்கம்:

பரமசிவன் வீரநடனம் செய்த சரித்திரத்தை சூத முனிவர் நைமிசாரணிய முனிவர்களுக்கு சொல்கிறார்.

### 5. திருமால் நெறிபெற்ற சருக்கம்:

விஷ்ணுவானவர் சோமுகாசுரனுக்கு சிவன்மேல் கிருபை உண்டாகாதிருப்பதற்காக புத்த மதமும் அதற்கு தகுந்த சாஸ்திரமும் உண்டாக்கினதாகவும் சோமுகாசுரனை கொல்வதற்காக சிவனானவர் தன் கையில் வைத்திருந்த சக்கரத்தை விஷ்ணுவினிடத்தில் கொடுத்ததாகவும் சொல்கிறது.

**6. வேதமோதி வைத்தச் சருக்கம்:**

பரமசிவன் தேவர்களுக்கு வேதமோதி வைத்தது

**7. அம்மை தவம் புரிந்த சருக்கம்:**

ஈஸ்வரி தவம் செய்து பாபத்தைப் போக்கிக் கொண்டது.

**8. திருமணச் சருக்கம்**

சிவனானவர் ஈஸ்வரியை ஆடி மாதம், பூர நட்சத்திரத்தில் திருவோத்தூரில் கல்யாணம் செய்ததாய் சொல்கிறது.

**9. சூரியன் பேறுபெற்ற சருக்கம்:**

சூரியன் வேதபுரீஸ்வரரை பூஜை செய்து பேறு பெற்றது.

**10. விநாயகர் அங்குச பாசம் பெற்றச் சருக்கம்:**

வந்தவாசி மலையானது விநாயகர் குதிரை முகம் உள்ள கோடாசுரனை எடுத்து உதறின எலும்பு மலையென்றும் அதனால் அதற்குபெயர் வெண்குன்றம் என்றும், விநாயகர் ஆகு என்னும் ராட்சசனை வாகனமாய் ஏறினார் என்றும், ஈஸ்வரனும், ஈஸ்வரியும் யானை உருவாகி புணர்ந்து விநாயகரை பெற்றார் என்றும் சொல்கிறது.

**11. அரிசாபம் தீர்த்த சருக்கம்:**

வள்ளியம்மை பிறப்பை மாத்தியும் சொல்லிற்று. அவளுக்கு கல்யாணம் நடந்த கதையை சொல்லவில்லை. ஷி சருக்கத்தில் கதை சரியாக வருவதற்காக விஷ்ணு ஊமையாகப்

பிறந்து தபசு செய்த கதையை முன்பாகவும் லக்ஷ்மி பெண்மானாகப் பிறந்து தேடினதை பின்பாகவும் ஆக இந்தப்படிக்கு நாம் வசனத்தில் எழுதியிருக்கிறோம்.

**12. பிரமன் பாபம் தீர்த்தச் சருக்கம்:**

நரநாராயண முனிவர் ஊர்வசியை உற்பத்தி செய்தானென்று சொல்கிறது.

**13. சந்திரன் பேறுபெற்ற சருக்கம்:**

சந்திரன் பாபம் தீர்த்துக்கொண்ட சரித்திரம்

**14. மன்மத தகனச் சருக்கம்:**

தேவர் முதலானவர்கள் மன்மதனை அழைத்து சிவன் மேல் பாணம் போடச் சொன்னதாய் சொல்லவில்லை. சூரியன் தேர்பாகனான அருணன் ஊர் ஏற்படுத்தி அதில் தன் பாபம் தீர சிவனை வைத்து பூஜித்ததாயும் திருக்கோவிலூரில் சிவனானவர் மன்மதனை தகித்ததாகவும் சொல்கிறது.

**15. அருணன் பாவம் தீர்த்தச் சருக்கம்:**

சூரியனின் தேர்ப்பாகனான அருணன் பெண்ணுருவ மெடுத்து இந்திரனுக்கு வாலியையும், சூரியனுக்கு சுக்ரீவனையும் பெற்றதாக சொல்கிறது.

**16. இந்திரன் பாபம் தீர்த்தச் சருக்கம்:**

விருத்திராசுரன் கதையும், அகஸ்தியர் சமுத்திர ஜலத்தை சாப்பிட்டதையும் சொல்கிறது.

**17. இராகவன் பாவந் தீர்த்த சருக்கம்:**

ஸ்ரீ ராமர் வாலியை கொன்ற பாவம் தீர்ந்தது.

**18. பராசரர் வேள்விச் சருக்கம்:**

தேவேந்திரனுடைய சேவகரை கருவேலமரமாகவும் பனைமரமாகவும் ஆகும்படி பராசரர் சாபம் கொடுத்ததாகச் சொல்கிறது.

**19. ஆலமுண்டச் சருக்கம்:**

தேவர்கள் அமுதம் பெற பாற்கடல் கடைந்ததும் வேதபுரீசர் ஆலகால விஷத்தைச் சாப்பிட்டதும்

**20. கந்தருவன் சாபந்தீர்த்த சருக்கம்**

கந்தருவன் சாபம் தீர்த்த சரித்திரமும் வேதபுரீசர் சரித்திரமும்

**21. பற்குணன் பூஜை செய்தச் சருக்கம்:**

அர்ச்சுணன், சுபத்திரையை விவாஹம் செய்துகொண்டது.

**22. பிறர்க்கட மகாமுனி முக்திபெற்ற சருக்கம்**

சிவன் சரிதமும், பிறர்கடரிஷி மோக்ஷம் அடைந்த விதமும்

**23. தாருகாவனச் சருக்கம்**

தாருகாவனத்தில் உள்ள ரிஷிகளின் கருவத்தைப் போக்கி அவர்கள் வேதபுரீஸ்வரரை பூஜித்து பாவத்தைப் போக்கிக்கொண்டது.

**24. வல்லவன் சந்தானம் பெற்றச் சருக்கம்**

வேதபுரீசர் மகிமையைக் கூறல்

**25. தொண்டைமானுக்கு படைத்துணைப்போனச் சருக்கம்**

தொண்டைமான் விஸ்வாசு என்கிற ராஜனிடத்திலே தோற்று காட்டில் இருக்கும்போது வேதபுரீஸ்வரர் தொண்டமானுக்கு காட்சி கொடுத்து வேண்டும் ராஜ்யத்தை ஆளச் செய்த விதம் கூறல்

**26. தாலமகிமைச் சருக்கம்:**

ஒரு பனை மரமானது சாரூப பதவியை அடைந்த சரித்திரத்தை கூறல்

**27. சமணர் கழுவேறியச் சருக்கம்**

சேயாற்று ஜலத்தில் சம்மந்தர் எழுதிப் போட்ட ஏடு மேற்காய்த் திரும்பிப்போன இடம் சம்பந்தர் சமணரை வென்ற இடம் ஆகையால் அந்த ஊருக்கு செய்யாற்றில் வென்றானென்று பேர் அதை இப்போது செய்யாற்றை வென்றான் என்றும் கொச்சையாய் (சொல்வதில் செய்யாத்துவண்ணாறென்றும் சொல்கிறார்கள்)

திருச்செங்கோடு சூரியன் தேர் சாரதியான அருணணானவன் அந்தவூரை ஏற்படுத்தி அதில் சிவனை வைத்து பூசை செய்த ஊர்.

# திருவோத்தூர் புராண சங்கிரக வசனம்

## 1. திருநகரச் சருக்கம்:

ஸ்ரீமகாவளப்பமுள்ள நைமிசாரண்யத்திலே, ப்ருங்கி மகரிஷி அகஸ்தியர், பராசரர், சூதர், கலைக்கோட்டு மகரிஷி இவர்கள் முதலான ரிஷிகளெல்லாரும் போய் சேர்ந்து அங்கேயிருக்கிற பரமசிவனை பூஜை செய்து துதித்து உத்தரவு பெற்றுக்கொண்டு பிறகு ஒரு ஆசிரமத்தில் வந்திருந்தார்கள். அப்போது ரிஷிகளெல்லாரும் எழுந்திருந்து சூதமுனிவரைப் பணிந்து ஸ்காந்தத்தில் சொன்ன வேதபுரீசுவர மகத்துவத்தை முன்னதாக எங்களுக்குச் சுருக்கி சொன்னீரே! அதை இப்போது விரிவாகச் சொல்ல வேண்டும் என்று தோத்திரம் செய்ய சூத மஹாரிஷியானவர் சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே ஸ்காந்த புராணத்தில் சங்கர சம்ஹிதையில் சிவவாக்கிய கண்டத்தில் சொன்ன வேதபுரீசுவரர் சரித்திரத்தை ஆதிகாலத்தில் கைலாசத்தில் உள்ள பரமசிவனானவர் உமாதேவிக்கு சொல்ல அதை சுப்பிரமணியர் கேட்டிருந்து அகஸ்தியருக்குச் சொல்ல அகஸ்தியர் வியாசருக்குச் சொல்ல வியாசர் எனக்குச் சொன்னார். அதை உங்களுக்குச் சொல்கிறேன் நன்றாய்க் கேளுங்கள்.

---

குறிப்பு: இந்த திருவோத்தூர் புராண வசனத்தின் கடைசியில் உள்ள சமணர் கழுவேறின சருக்கத்தில் உள்ள கதை - நான்குக்கு விபரம் சமணர் யாகஞ் செய்து அதில் பிறந்த பாம்பை சம்பந்தர் மேலனுப்பினதும் சம்பந்தர் ஆற்று ஜலத்திலும், நெருப்பிலும் ஏட்டில்தேவாரம் எழுதிப்போட்டதும், சம்பந்தர் ஆண்பனையைக் காய்க்க வைத்ததும், சமணர் கழுவேறினதும் ஆக கதை (நான்கு)

அது எப்படி என்றால் இந்த பூமியில் சிவ ஸ்தலங்களில் மேன்மையுள்ளது திருவோத்தூர், திருக்காஞ்சிபுரம், காளஹஸ்தி, சிதம்பரம், காசி என்று ஐந்தாம். இதில் சுருதிபுரியிலே திருவோத்தூருக்கு சமானமான ஸ்தலம் இந்த பூமியில் இல்லை. அந்த திருவோத்தூரில் சேய்நதி என்று ஒரு ஆறு உண்டு. அதன் பெருமையை சிவபிரானே சொல்லவேண்டுமே தவிர நம்மால் சொல்ல எளிதல்ல. அந்த நதியில் இருக்கப்பட்ட ஜலமானது தேவங்கையைவிட துல்யமாய் இருக்கும் திருவோத்தூரில் யாகம் செய்தாலும், தவம் செய்தாலும் - சேய் நதியின் ஜலத்தில் முழுகினாலும், அந்த ஜலத்தை கையால் தொட்டாலும், அவர்கள் நல்ல சித்தியை அடைவார்கள். இந்த பூமியில் அநேக ஸ்தலங்களில் போய் பூசித்தாலும் திருவோத்தூரில் உள்ள வேதபுரீஸ்வரரை பூஜை செய்யாவிட்டால் முக்தியில்லை.

தேவர்களாய் இருந்த போதிலும் பெருத்த ராஜாக்களாய் வாழ்ந்த போதிலும், இவர்கள் அநேக நாள் தவம் செய்தாலும் வேதபுரியில் புழுவாகவாவது பிறக்காதவருக்கு மோட்சமில்லை. அந்த வேதபுரியில் முருகக் கடவுள் வேல்படை பெற்றார். சிவபிரான் வீரநடனஞ் செய்தார். திருமால் சக்கரம் தரித்தார். சிவபிரானானவர் தேவர்களுக்கு வேதமோதி வைத்தார். உமாதேவி சிவனை பூஜித்தாள். பரமசிவனானவர் இளமுலை நாயகியை திருமணஞ் செய்தார். சூரியன் பேறுபெற்றான். திருமாலுக்கு வந்த சாபத்தை அங்கே நீக்கிக்கொண்டார். பிரும்மா தனக்கு வந்த பாவத்தை தீர்த்துக்கொண்டார். சந்திரனானவன் தாரையைச் சேர்ந்த பாவத்தை தீர்த்துக்கொண்டான். ரதிதேவியானவள் வேதபுரீஸ்வரரைப் பூஜித்து மன்மதனைச் சேர்ந்தாள். சூரியனானவன் தனக்கு வந்த பாவத்தை தீர்த்துக்கொண்டான். தேவேந்திரனானவன் கௌதமர் தனக்கு கொடுத்த சாபத்தைத் தீர்த்துக்கொண்டார். ஸ்ரீராமனானவர் தனக்கு வந்த பாவத்தைத்

தீர்த்துக்கொண்டார். பராசர முனிவர் யாகம் செய்து மேன்மையை அடைந்தார். தேவர்களுக்காக சிவபிரானானவர் ஆலகால விஷமுண்டார். துந்துபி என்பவன் பிராமணர் கொடுத்த சாபத்தை நீக்கிக்கொண்டான். அர்ஜுனன் சுபத்திரையை திருமணம் செய்தான். பிறர்கடமகாரிஷி முக்தி பெற்றார். தாருகாவன ரிஷிகள் சிவபிரானுக்கு அடிமையாகி தவப்பயன் அடைந்தார்கள். வல்லபனென்கிற பிராமணன் சந்தான சம்பத்தை அடைந்தான். சிவபிரான் தொண்டமானுக்கு படைத்துணை போனார். ஆகையால் அந்த ஸ்தலத்தின் பெருமையை சொல்லுதற்கரியதாகும். இப்பேர்ப்பட்ட மகிமை பெற்ற ஸ்தலம் இருக்கிற இடத்தைச் சொல்கிறேன் கேளுங்கள்.

பாலாறு சேயாறால் க்ஷேமமடைந்த மிகுந்த வளமுள்ள தொண்டை நாட்டிலே திருவோத்தூர் என்று ஒரு சிவஸ்தலம் இருக்கின்றது. அது சுப்பிரமணியர் கட்டளைப்படி தேவதச்சனால் நிர்மானம்செய்யப்பட்டது. அந்த ஸ்தலத்தில் வயிரவமூர்த்தியொருவர் இருக்கின்றார். அந்த ஸ்தலத்துக்குச் சமமான ஸ்தலம் மற்றொரு ஸ்தலம் இருக்கிதென்று சொன்னவர்கள் நரகமடைவார்கள். அந்த ஸ்தலத்துக்கிணை அதுவே யல்லாமல் வேறொரு ஸ்தலமில்லை. ஆக இந்தப்படி சூதமுனிவர் சொல்ல நைமிசாரணிய முனிவர்கள் சந்தோஷமடைந்து அவரைப் பார்த்து அந்தச் சுருதிபுரியில் இருக்கின்ற புண்ணிய தீர்த்தங்களை எல்லாம் எங்களுக்குச் சொல்ல வேண்டும் என்று சொல்ல சூதர் சொல்லுகிறார்.

கேளுங்கள் முனிவர்களே. அந்த ஸ்தலத்தில் உள்ள சிவபிரான் திருவாலயத்துள் கல்யாண கோடியென்று ஒரு தீர்த்தம் உண்டு. இதில் சோமவாரம், சுக்கிரவாரம் இவைகளில் தப்பாமல் முழுகி அந்த வேதபுரீஸ்வரரைப் பணிந்து ஸ்தோத்திரம் செய்தால் அவர்கள் இந்த பூலோகத்தையாண்டு

புத்திரசம்பத்து முதலான சகல சம்பத்தும் பெற்று முடிவில் சிவன் திருவடிகளை அடைந்து வாழ்வார்கள். அந்த ஆலயத்திற்கு வடக்கில் ஒரு அம்பு போகும் தூரத்தில் தேவர்கள் உண்டாக்கின தடாகத்தில் சனிவாரந்தோறும் முழுகி சிவபிரானைத் துதித்தவர்கள் எந்நாளும் கீர்த்தியுடன் வாழ்ந்து முடிவில் திருக்கைலையில் போய் வாழ்வார்கள். அந்த தீர்த்தத்துக்கு ஒரு தடாகமுண்டு. அதில் மங்கள வாரத்தில் ஸ்நானம் செய்தவர்கள் சகல விரோதமும் நோயும் தீர்ந்து முடிவில் திருக்கைலையில் சாரூப பதவியான சிவபிரானைப் போல் உருவமமைந்து விளங்குவார்கள். அந்த தீர்த்தத்துக்கு ஈசான்ய மூலையில் ஒரு அம்பு போகுந்தூரத்தில் ஒரு தடாகம் உண்டு. அதில் ஆதிவாரத்தில் முழுகி அந்தக்கரைமேல் கருடன் பூஜித்த பக்ஷீஸ்வரரைத் தொழுதவர்கள் ராஜாக்களாய் பிறந்து செல்வத்துடன் வாழ்ந்து முடிவில் திருக்கைலயையில் போய் வாழ்ந்திருப்பார்கள். அந்த தீர்த்தத்துக்கு கிழக்கில் இரண்டு அம்பு செல்லும் தூரத்தில் சந்திர தீர்த்தம் என்று ஒன்று உண்டு. அதன் அருகே தெற்கில் புததீர்த்தம் இருக்கின்றது.

இவற்றில் அவற்றிற்குரிய வாரங்களில் முழுகினால் முக்தி அடைவார்கள். வேதபுரீஸ்வரர் கோவிலுக்கு எதிரில் அரை நாழிகை வழி தூரத்தில் பிரும்ம தீர்த்தம் என்று ஒன்றிருக்கிறது. அதை நினைத்தால் செய்த பாவம் நீங்கும். அதில் ஸ்நானம் செய்தால் கயிலாசத்தை காணிக்கையாகக் கொள்வார். அந்தக் கோவிலின் வாயு மூலையில் மதில் புறத்தில் கற்பூரச்சிரசு என்று ஒரு தீர்த்தம் உண்டு. அதை நினைத்தாலும், சொன்னாலும், தரிசித்தாலும், ஸ்பரிசித்தாலும், மோட்சத்தைக் கொடுக்கும். அந்த ஸ்தலத்தில் இப்போது சொன்ன தீர்த்தங்கள் தவிர இன்னும் அநேக தீர்த்தங்கள் இருக்கின்றன. அவற்றின் பெயரும், அவற்றின் மகிமையும் சொன்னால் காலதாமதமாகும். கல்பகாலம் மட்டும் சொன்னாலும் முடியாது.

ஆகையால் அந்த வேதபுரியின் பெருமையை இரண்டாயிரம் நாவுள்ள ஆதிசேஷனும் சொல்லி முடிக்க அரிதாகும் அந்த வேதபுரியில் ஒரு நாளாகிலும் இருந்து அந்த வேதபுரீசுவரரை ஆகமவிதிப்படி வணங்கினவர்கள் குற்றமெல்லாம் நீங்கி ராஜாவாய்ப் பிறந்து வாழ்ந்து முடிவில் மோட்சம் அடைவார்கள் என்று சொன்னார் சூதபுராணிகர்.

**திருநகரச் சருக்கம் முற்றும்**

## 2. வயிரவருற்பவச் சருக்கம்

அப்பால் நைமிசாரணிய முனிவர்கள் சூதமகரிஷியை ஸ்தோத்திரம் செய்து அந்த வேதபுரியில் வயிரவ மூர்த்தியொருவர்வீற்றிருப்பதாய் சொன்னீர்களே. அவர் அந்த ஸ்தலத்தில் வந்த விதத்தைச் சொல்லவேண்டும் என்று கேட்க சூதமகரிஷி சொல்லுகிறார். கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே- ஆதிகாலத்தில் பரமசிவத்தில் பராசக்தி யுதித்தாள். பராசக்தியால் பஞ்சசக்திகள் உண்டாயிற்று. பஞ்ச சக்திகளால் ஐந்து சாதாக்கியங்களுதித்தன. இந்த ஐந்து சாதாக்கியங்களே சதாசிவமாகத் தோன்றி அதில் இருபத்தைந்து திருவுருவோடு விளங்கி மகேசுவரமாயிற்று. அந்த மகேசுவரத்தில் ருத்ரமூர்த்தி யுதித்தார். ருத்ர மூர்த்தியினிடத்தில் விஷ்ணு பிறந்தார். விஷ்ணுவின் நாபி கமலத்தில் பிரும்மா உற்பத்தியாகி லோகமும் புவன கோடிகளும் அதில் வசிக்க எல்லாப் பொருள்களையும் சிவபிரான் திருவருளால் சிருஷ்டித்து, நாம் சிருஷ்டித்து வைத்ததை விஷ்ணுவானவர் காக்கும் தொழிலைச் செய்து

தேவர்களில் உயர்ந்தவனாய் வாழ்ந்திருக்கிறான் அல்லவா என்ற கருவங்கொண்டான். அதை விஷ்ணு அறிந்து பிரும்மாவைப் பார்த்து, நீ என்னிடத்தில் உத்பவித்ததினால் அல்லவா உனக்கு சிருஷ்டிக்கப்பட்ட வல்லமை உண்டாயிற்று என்று சொல்ல, இருவரும் ஒருவர் மேல் ஒருவர் கோபம் கொண்டு தேவேந்திரன் முதல் சகலரும் நடுங்கும்படி பெரும் சண்டை செய்தபடி வேதபுரியைச் சேர்ந்தார்கள். அப்போது சிவபிரான் ஜோதியுருவாய் அக்னி ஸ்வரூபமாய் உயர்ச்சியாய் நின்றார். அதை அவர்கள் இருவரும் பார்த்து, அதிசயித்து பயந்து நமஸ்கரித்து இது பரமசிவன் உருவமோ - வடவாமுகாக்கினியோ அல்லது இன்னம் எதுவோ அறியோ மென்று துக்கித்து இதன் அடிமுடியை அறிபவரே உண்மையான பரப்ரும்மப் பொருளென்று சொல்லி, விஷ்ணுவராக ரூபம் எடுத்து அதன் அடியைப் பார்க்கப் போனார். பிரும்மா அன்னப்பட்சியாய் ரூபம் எடுத்துப் பறந்து அதன் முடியைக் காணப் போனார். இப்படி அந்த இருவரும் அநேக நாட்கள் அடியையும், முடியயையும் காணச் சக்தி இல்லாமல் அகங்காரம் அடங்காமல் திரும்பி அந்த வேதபுரியில் வந்து முன்போல் சண்டை செய்ய எத்தனித்தார்கள். அந்த சமயத்தில் முன் சொன்ன அக்கினி சுவரூபத்தின் உச்சியில், நடுவில் வயிரவக் கடவுள் உண்டானார்.

அவர் எப்படி இருந்தார் என்றால் இளம்பிறை அணிந்த சிவந்த சடையும், மூன்று கண்களும், செம்மானம் போன்ற திருமேனியும், விஷத்தை தரித்த கண்டமும்-பாசம்-அங்குசம்-சூலம்-உடுக்கை இவை தரித்த கரமும் ஆக இப்படித்

தோன்றினார். அண்டகடாசமும் ஆதிசேஷன் தேவர்கள் முதலானவர்களும் பயப்படும்படி கோபித்துக்கொண்டு நின்றார். அவரை பிரும்மா பார்த்து மதிக்காமல் அலட்சியமாய் நினைத்து முன்னே என் நெற்றியில் வந்த ருத்ரரூபம் பொருந்தி கோபித்து வந்த சிறுவனே வா வென்று சொல்ல, அதை அந்த வயிரவர் கேட்டு முன்னிலும் அதிக கோபம் கொண்டு அந்த பிரம்மாவின் சிரசு ஐந்தில் நடுசிரசை தன் கைவிரல் நகத்தால் கிள்ள பிரும்மாவானவர் மூர்ச்சையாகி பூமியில் விழுந்து கர்வம் நீங்கினான். விஷ்ணுவானவர் பயந்து பெருமூச்சு விட்டு ஓடோடி வைகுண்டம் போய்ச்சேர்ந்தார். மற்ற தேவர்கள் எல்லாம் மிகுந்த பயத்துடன் அந்த வயிரவக் கடவுளை உருக்கத்துடன் பூஜித்து துதிசெய்து பிரும்மாவை எழுப்பிவிடவேண்டும் என்று கேட்டார்கள்.

அப்போது வயிரவக் கடவுள் பிரும்மாவை எழுப்பிவிட்டு முன்னே கிள்ளின பிரும்ம சிரசை தன்கையில் எடுத்து வைத்துக் கொண்டு அவன் தலையில் இருந்து ஒழுகுகிற ரத்தம் பூமியில் பரவினால் பிரும்மஹத்தி தோஷம் பூமி முழுவதும் அடையுமென்று நினைத்து அந்த பிரும்ம சிரசில் ரத்தங்களை எல்லாம் பிடித்து பின்பு விஷ்ணுவின் கர்வத்தையும் கெடுக்கிறேன் என்று சொல்லி வைகுண்டத்திற்குப் போக அங்கே வாசற்படி காவலில் இருக்கிற பஞ்சாயுததாரியானவன் வயிரவக்கடவுளை உள்ளே நீர் போகக்கூடாதென்று தடுக்க அவனை மார்பில் வயிரவமூர்த்தியானவர் முத்தலை வேலால் குத்தி அவனை நடுங்கச்செய்து உள்ளேபோக அதை மற்ற காவலாளர்கள் போய் விஷ்ணுவினிடம் சொல்ல, இதை விஷ்ணுகேட்டு

பயந்து லக்ஷ்மியிருக்கிற இடத்தில் ஓடிப்போய் பேசாதிருக்க அப்போது வயிரவக்கடவுள், லக்ஷ்மி இருக்கிற கோவிலின் வாசற்படியில்போய் நின்று ரத்த பிச்சை கேட்டார். அதை லக்ஷ்மியானவள் கேட்டு பயந்துமனம் கலங்கிப்போய் அந்த வயிரவமூர்த்தியை நமஸ்கரித்து அவரைப் பலவாறாக ஸ்தோத்தரித்து நிற்கையில், அவர் நான் பிச்சைக்கு வந்த இடத்தில் நீ இப்படி இருப்பது நன்றாக இருக்கிறதா? நாம் பிரும்மாவின் சிரசைக் கிள்ளினதால் நம்மை பிரும்மஹத்தி கொண்டது. அது செய்கிற துன்பத்தை தீர்த்துக்கொள்ள வந்தோம் என்று சொல்ல, அப்போது லக்ஷ்மியானவள் விஷ்ணுவினிடத்தில் போய் வயிரவமூர்த்தி நம் வாசற்படியில் வந்து கோபித்து நிற்கிறார், நீர் போய் அவர் கோபத்தை தணியச் செய்யும் என்று சொல்ல விஷ்ணுவானவர் திருவோத்தூரில் வந்து பரமசிவனை மிகுந்த பக்தியால் பூஜை செய்து ஸ்தோத்தரித்தார். அப்போது பரமசிவனானவர் அந்த வயிரவமூர்த்தி முன் வந்து, பிரும்மா, விஷ்ணுக்களின் அகங்காரத்தை அழித்தாயே என்று சொல்லி, சந்தோஷப்பட்டு இந்த கிராமத்தில் ஈசான மூலையில் நீ இருந்துகொண்டு இந்த ஊரை காத்துக்கொண்டிரு என்று சொல்ல அப்படியே அந்த இடத்தில் வயிரவமூர்தியானவர் இருந்து அந்த ஊரை காத்துக்கொண்டு இருக்கிறார்.

**வயிரவருற்பவச் சருக்கம் முற்றும்.**

## 3. ஆறுமுகன் சக்தி பெற்ற சருக்கம்

நைமிசாரண்ய முனிவரானவர்கள் வயிரவ மூர்த்தியின் சரித்திரத்தைக் கேட்டு சந்தோஷமாகி சூதரிஷியை வணங்கி

முன்னாளிலே முருகக் கடவுள் தவம் செய்தாரென்று சொன்னீரே அதை நன்றாய் எங்களுக்கு சொல்ல வேண்டும் என்று கேட்க சூதமகரிஷி சொல்லுகிறார் கேளுங்கள். நைமிசாரண்ய முனிவர்களே முன்னொரு காலத்தில் கைலாசத்தில் உள்ள சிவபிரானானவர் முருகக் கடவுளைப் பார்த்து ஹரிபிரும்மேந்திராதி தேவர்கள் எல்லாம் நடுங்கும்படியாய் ராட்சஸர் சண்டை செய்கிறார்கள். அதை நீம்பாய் ஜெயித்து வா. அதற்கு ஒரு தந்திரம் சொல்லுகிறேன் என்று சொல்லி திருவோந்தூர் ஸ்தலத்தின் மகிமையும் அதில் சிவனைப் பூஜித்ததால் வரப்பட்ட சுகத்தையும் நன்றாகச் சொல்லி அதில் போய் நீ பரமசிவனை பூஜை செய்து முன்னே நாம் சொன்ன ராட்சசர்களை ஜெயித்து வாவென்று சொல்ல முருகக் கடவுளானவர், திருவோந்தூரில் வந்து, பரமசிவனை, மகா அன்புடன் பலவாறாக ஸ்தோத்திரம் செய்து, பரமசிவனை ஆகமவிதிப்படிக்கு நன்றாக பூஜை செய்தார்.

அப்போது இவ்விடத்தில் இருந்த தேவதச்சனானவன் அங்கே பட்டணம் அலங்காரமாய் நிர்மிக்க முருகக் கடவுளானவர் பரமசிவனுக்கு, நித்தியோத்சவம், பிரும்மோத்சவம் முதலான சகல உத்சவங்களும் செய்விக்க அப்போது மழையில்லாமல், ஜலமில்லாமல் போயிற்று. முருகர், சிவனை மிகவும் ஸ்துதிக்க சுவாமியானவர் உன் குமாரன் நம்மை துதிக்கின்றதைப் பார் என்று ஈசுவரியிடம் சொல்ல அதற்கு உமாதேவி முருகன் நினைத்த வரத்தைக் கொடுக்க வேண்டும் என்று சொல்ல பரமசிவனானவர் முருகக் கடவுளின் முன்னே வந்து காட்சி கொடுத்தார். அப்போது முருகக் கடவுளானவர் ஜலமில்லாமையைக் குறித்து மிக ஸ்தோத்திரம் செய்ய, பரமசிவனானவர் ஈசுவரியைப் பார்த்து உன் கையில் இருக்கின்ற சத்தி வேலாயுதத்தை முருகக் கடவுளுக்கு கொடுவென்று சொல்ல

ஈசுவரியானவள் பரமசிவன் கையில் வேலாயுதத்தைக் கொடுத்தாள். அதை அவர் வாங்கி முருகக் கடவுளின் முகத்தைப் பார்த்து அந்த வேலின் மகத்துவத்தையும், அதன் வீர சௌரிய பராக்கிரமத்தையும் சொல்லி, பின் இந்த வேலால் பூமியைக் குத்தினால் ஜலமுண்டாகி வரும். அதை இந்த வேதபுரியில் கொண்டு வாவென்று சொல்லி அந்த வேலை முருகக் கடவுளின் கையில் கொடுத்து அதை அவர் வாங்கிக் கொண்டு மேற்கு பக்கமாய் நடந்து ஒரு குரோச தூரத்தில் போய் அங்கே ஒரு சிவலிங்கம் வைத்து பூஜித்து-நந்திமலை பக்கத்தில் போய் அந்த வேலாயுதத்தால் பூமியில் குத்தினார்.

அப்போது அந்த வழியால் ஜலமானது எழும்பி சமுத்திரம்போல் உண்டாகிவர அதை சுப்ரமணியர் பார்த்து பலவாறாகச் சொல்லி ஸ்தோத்தரித்து நீ கிழக்கு பக்கமாய் சமுத்திரம் வரையில் வர வேண்டும் என்று சொல்லி துதிக்க-அந்த கங்காதேவி சொல்கிறாள், கேளாய் புத்திரனே, உன் தகப்பனார் சிவபிரான் சடையில் வசித்திருக்கிறேன். அந்த சிவபிரான் உத்தரவில்லாமல் நான் வருவது சரியல்ல என்று சொல்ல அப்போது முருகக் கடவுளானவர், பரமசிவனை நினைத்து ஸ்தோத்தரிக்க உடனே அங்கே பரமசிவன் வர அவரை முருகக் கடவுள் வணங்கி, கங்காதேவி சொன்ன வசனத்தை சொல்ல அப்போது பரமசிவன் சிரித்து தன் சடையில் உள்ள கங்கை நீரில் ஒரு துளி பூமியில் விட- அது முருகக் கடவுள் குத்தின விடத்தில் எழும்பி சமுத்திரம்போல் ஆகாசமளவும் உயர்ந்து அதிவேகமாய் பரவி திருவோத்தூர் பரமசிவன் கோவிலின் சமீபமாக தென்பக்கமாய் வந்து சமுத்திரத்தில் போய் சேர்ந்தது. அப்போது முருகக்

கடவுளானவர் அந்த ஜலத்தைக் கொண்டு திருவோத்தூரில் பரமசிவனை பூஜை செய்ய பரமசிவன் முருகக்கடவுளை நீ இந்தப் பட்டணத்தில் வசித்துக்கொண்டு இருவென்று சொல்ல முருகக் கடவுளானவர் அதற்குச் சம்மதப்பட்டு அந்த கோவிலுக்கு அக்கினி மூலையில் ஒரு அம்பு போகும் தூரத்தில் தேவதச்சனைக் கொண்டு திருக்கோவில் செய்வித்து அதில் வீற்றிருந்தார்.

**ஆறுமுகன் சக்தி பெற்றச் சருக்கம் முற்றும்**

## 4. வீர நடனச் சருக்கம்

அப்பால் நைமிசாரணிய முனிவரானவர்கள் சூதமுனிவரைப் பார்த்து-பரமசிவன் வீரநடனம் செய்த சரித்திரத்தைச் சொல்ல வேண்டும் என்று கேட்க - சூதமுனிவர் சொல்லுகிறார் கேளுங்கள் முனிவர்களே, வேதங்களானது பிரும்மாவைப் பார்த்து பரமசிவன் செய்த வீரநடனத்தை தரிசிக்க எங்களுக்கு மிகவும் ஆசையாக இருக்கிறது. அதை நீர் சொல்லுமென்று சொல்ல, அதற்கு பிரும்மாவானவர் எனக்கும் அதைப் பார்க்க ஆசையாக இருக்கிறது என்று சொல்லவே தங்களை அழைத்துக்கொண்டு வைகுண்டத்தில் விஷ்ணுவிடத்திலே போய் வேதங்களானது சிவனுடைய வீர நடனத்தை தெரிசிக்க வேண்டுமென்று சொல்ல இதற்கு என்ன உபாயம் சொல்லு என்று சொல்ல விஷ்ணு சொல்லுகிறார். கேளாய் பிரும்மாவே, சிவபிரானுடைய உத்திரவில்லாமல் அவருடைய வீர நடனத்தை தரிசிக்க கூடாது. அந்த வீர நடனத்தை தரிசனம் செய்ய வல்லவர் ஒருவருமில்லையே என்று சொல்லி திருவோத்தூரின் மகிமையை ரொம்பவும் விரித்து நன்றாய் சொல்லி வேதங்களை திருவோத்தூரில் போய் அங்கே பரமசிவனை பூஜை செய்யும்படி சொல்லியனுப்பு என்று பிரும்மா

வானவர் வேதங்களைப் பார்த்து விஷ்ணு சொன்னதைச் சொல்ல. வேதங்களானது ஒரு திருவுருவுக்கொண்டு திருவோத்தூரில் போய் அநேக காலம் பரமசிவனை பூஜை செய்தது. அப்போது பரமசிவன் அந்த வேதங்களிடத்து போய் நின்று என்னுடைய வீரநடனத்தால் பூமி முதலானதும் கிடுகிடுவென்று நடுங்குமேல் நீங்கள் எந்த இடத்தில் இருந்து பார்ப்பீர்கள் என்று சொல்ல, அதற்கு வேதங்கள் நாங்கள் இருக்க இடங்காட்டி உம்முடைய வீரநடனத்தைக் காட்ட வேண்டுமென்று சொல்ல அதற்கு பரமசிவனானவர் அந்த வேதங்களை தன் கையில் இருக்கிற உடுக்கையில் போகச் செய்து மகாசிங்காரத்துடன் பூமி அதிரும்படியாகவும் ஹரிபிருமேந்திராதி தேவர்களெல்லாம் நடுங்கும் படியாகவும் வெகுகாலம் திருநடனம் செய்து அந்த வேதங்களை பூமியில் போகும்படி அனுப்பினார். பின்பு ஹரிபிரும்மேந்திராதி தேவர்களும் சூரிய சந்திரன் முதலான சமஸ்தரும் பரமசிவனை மிகவும் பலவாறாக ஸ்துதித்துத் தொழுது சில நாட்கள் திருவோத்தூரில் இருந்து அப்பால் அவர் அவர்களுடைய இடம்போய்ச் சேர்ந்தார்கள்.

**வீர நடனச் சருக்கம் முற்றும்**

## 5. திருமால் நேமிபெற்ற சருக்கம்

அப்பால் நைமிசாரண்ய முனிவர்கள் சூத மகாரிஷியை ஸ்தோத்திரம் செய்து முன்னே விஷ்ணுவானவர் சக்கிராயுதம் பெற்றதாய்ச் சொன்னீரே, அந்த சரித்திரத்தை நன்றாய் விரிவாய், சொல்ல வேண்டுமென்று கேட்க, சூதமகரிஷி சொல்லுகிறார். கேளுங்கள் முனிவர்களே சமுத்திரத்தின் மத்தியிலே ஒரு மலையின் மேலே ஒரு பட்டணம் இருந்தது. அதிலே ஐம்பது சிரசும் நூறு கைகளுமுள்ள

சோமுகாசுரனென்று ஒரு ராட்சசன் சிவனுக்கு அடிமையாகி சிவபூஜாதுரந்தவனாய் இருந்தான். அவன் தன் தூதரை அனுப்பி வேதங்கள் இருக்கிற இடத்தை விசாரிக்க, தூதர்கள் பூமி எங்கும் திரிந்து, திருவோத்தூரில் வேதம் இருப்பதை தெரிந்து போய் அதை அந்த சோமுகாசுரனுக்குச் சொல்ல - திருவோத்தூரில் வந்து வேதங்களை எடுத்துக்கொண்டு தன் பட்டணத்தில் போய் அதை ஒளித்து பத்திரப்படுத்தி வைத்திருந்தான். அப்படி அவன் வைத்திருக்கவே -லோகங்களில் நன்மைகளும் சந்தியாவந்தனம் ஜெப, தப, அனுஷ்டானம், சிவஆலயம், விஷ்ணு ஆலயம் முதலான சகல ஆலய பூஜைகளும் செய்ய ஹேதுவில்லாமல் போனது. அப்போது தேவர்களும் ரிஷிக்கூட்டங்களும், சத்திய லோகத்தில் போய் பிரும்மாவை நமஸ்கரித்து, வேதங்களை சோமுகாசுரன் வந்து திருடிக்கொண்டு போனதையும், அது போனதால் சகல காரியங்களும் கெட்டு போனதையும் சொல்ல அவர் வேதம் போனால் மற்றென்ன இருக்கிறது எல்லாம் வேதத்தினால் தான் என்று சொல்லி அவர்களை அழைத்துக்கொண்டு வைகுண்டத்திற்குப் போய் மஹா விஷ்ணுவைக் கண்டு ஸ்தோத்திரம் செய்து, வேதங்களை சோமுகாசுரன் கொண்டு போனதையும் வேதம் போனதால் வந்த கெடுதலையும் சொன்னார்.

அதற்கு விஷ்ணுவானவர் சோமுகாசுரனைக் கொல்லவும், அவன் வைத்திருக்கின்ற வேதங்களை வாங்கவும் நம்மால் ஆகமாட்டாது. இந்த சங்கதியை நாம் போய் பரமசிவனிடம் சொன்னால் அவர் சொன்னபடிக்கு நாம் செய்வோம் என்று சொல்லி அவர்களை அழைத்துக்கொண்டு திருவோத்தூரில் வந்து பரமசிவனை ஸ்தோத்திரம் செய்து சோமுகாசுரன் வந்து வேதங்களை திருடிக்கொண்டு போன சங்கதியைச் சொல்ல,

பரமசிவனானவர், சோமுகாசுரனானவன் பொல்லாதவனாய் இருந்த போதிலும், அவன் என்னை பூஜை செய்து சிவபக்தியில் மிகுந்து நமக்கடிமையாய் இருப்பதால் அவனை நாம் கொல்வது சரியல்ல. நீ வராஹரூபம் எடுத்துப் போய் அவனைக் கொன்று வேதங்களைக் கொண்டு வாவென்று சொல்லி தன் கையில் வைத்திருந்த சக்கிராயுதத்தைக் கொடுத்து தேவர்களை பயப்படாதிருக்கும் படிக்கு தீரம் சொல்லி அனுப்பினார்.

அப்பால் விஷ்ணுவானவர் தேவர்கள் புடைசூழ பிரும்மாவுடன் அதை விட்டு அப்பால் ஒரு இடத்தில் வந்து சோமுகாசுரனுக்கு பரமசிவன் மேல் புத்தி உண்டாகாத விதமாய் இருக்கும்படி புத்தமதமும், அதற்குத் தகுந்த சாஸ்திரமும் ஏற்படுத்தி, அந்த சாஸ்திரத்தை சோமுகாசுரனுக்கு போதிக்கும்படிக்கு குரு பகவானுக்கு சொல்லி விட்டு வைகுண்டம் போக, பிரும்மா சத்தியலோகத்துக்கும், தேவர்கள் தேவலோகத்துக்கும் போய்ச் சேர்ந்தார்கள். அப்பால் குருபகவானானவர் ரிஷியைப் போல ரூபங்கொண்டு சோமுகாசுரனிடத்தில் போய் அவன் செய்த வந்தனம், ஸ்தோத்திரங்களை வகித்து, மூன்று வருஷம் வரைக்கும் அங்கிருந்து அவனுக்கு புத்தமத சாஸ்திரத்தை நன்றாய் போதித்து புத்ததேவனை பூஜை செய்யும்படி செய்து கிஞ்சித் மாத்திரம் சிவன் என்று நினைப்பதை யொழித்து விட்டு வைகுண்டம் போய் விஷ்ணுவை நமஸ்கரிதது சோமுகாசுரன் மனசை பேதப்படுத்தின விதத்தைச் சொன்னார். அதை விஷ்ணுவானவர் கேட்டு, பிரும்மாதி, இந்திரன், தேவர்கள் இவர்களை அழைத்துக்கொண்டு சோமுகாசுரன் பட்டணத்தில் போய் சோமுகாசுரனுடன் பெரும் சண்டை செய்து முடிவில் பரமசிவனை தியானித்து சக்ராயுதத்தால் சோமுகாசுரன் தலையையும் நாடுவரை சேனைகளையும் அறுத்துத் தள்ளிவிட்டு வேதங்களை

எடுத்துக்கொண்டு முன் தன்னுடன் கூட வந்த தேவ சமூகத்துடன் அதை விட்டு திருவோத்தூரில் வந்து வேதபுரீசர் சன்னதி முன்னே வேதங்களை வைத்து பரமசிவனை நமஸ்கரித்து ஸ்தோத்தரித்து நின்றார். அப்போது சிவனானவர் அவர் மேல் அன்பு மிகுந்து புகழ்ந்து, சந்தோஷித்து நீ இது முதல் எந்நாளும் என்னுடைய இடது பக்கத்தில் இருந்து கொண்டு எவர்களுக்கும் வரங்கள் கொடுத்துக் கொண்டு இவ்விடத்திலேயே இரு என்று சொல்ல அப்படியே அவர் அவ்விடத்தில் இருந்தார். அது முதல் அவர் சக்கரத்தைக் கையில் தரித்ததால் அவருக்கு ஆதி சேவகப்பெருமாளென்று திருநாமம் உண்டாயிற்று.

**திருமால் நேமிபெற்றச் சருக்கம் முற்றும்**

## 6. வேதமோதி வைத்த சருக்கம்

அப்பால் நைமிசாரணிய முனிவர்கள் சூதமுனிவரை தோத்திரம் செய்து பரமசிவன் தேவர்களுக்கு வேதமோதி வைத்த சரித்திரத்தை எங்களுக்கு நன்றாய் சொல்ல வேணுமென்று கேட்க சூதமுனிவர் சொல்லுகிறார். கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே அந்த சோமுகாசுரனை சம்ஹரித்து வேதங்களைக் கொண்டு வந்தபின்பு தேவர்களும் ரிஷிகளும், ஒன்றாய் சேர்ந்து பரமசிவனை நமஸ்கரித்து ஸ்தோத்தரித்து - நாங்கள் வேதங்களை வாசிக்காமல் விட்டு அநேக காலம் ஆயிற்று. வேதம் போனதால் நாங்கள் வேதபாராயணத்தையும் விட்டோம். ஆகையால் நீங்கள் வேதத்தை எங்களுக்கு சொல்லி வைக்கவேண்டும் என்று கூற அப்போது அந்த பரமசிவன் விருத்த பிராமண ரூபம் கொண்டு அங்கே

பொன்மயமான ஒரு மண்டபத்தில் போய் ருத்திராட்சம் முதலான சிவமுத்திரைகளை தரித்து தேவர் கந்தர்வர், வித்யாதரர் - யக்ஷர் - அஷ்டதிக்பாலகர் அஷ்டவசுக்கள், பன்னிரண்டு சூர்யசந்திரர், நவக்கிரகங்கள், ரிஷிகள் இன்னம் மற்றுமுள்ள பெரியவர், ஞானிகள் ஆகிய இவர்களை அவர் அவர்களுக்கு தகுந்த இடத்தில் உட்காரவைத்து அவர்கள்மேல் கடாட்சம் வைத்து - ரிக்முதலான - நான்கு வேதங்களையும், அதற்கு வேண்டிய மந்திரங்களும், சாஸ்திரங்களும் - ஆகமங்களும், விதிகளும், ஞானமும் ஆகியவைகளை நன்றாய்ச் சோதித்து சிவலிங்கத்தில் கலந்தார். அது முதல் அந்த ஊருக்கு சுருதிபுரமென்று பெயர் வழங்குகின்றது.

**வேதமோதிவைத்த சருக்கம் முற்றும்**

## 7. அம்மை தவம் புரிந்த சருக்கம்

இந்தப் பிரகாரம் சூத ரிஷியானவர் பரமசிவன் வேதம் ஓதிவைத்த சரித்திரத்தை சொல்ல, அதை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டு சந்தோஷமடைந்து சூதமுனிவரைப் புகழ்ந்து, பணிந்து தோத்திரம் செய்து, பரமேசுவரியானவள் தவஞ்செய்து பாபத்தை நிவாரணம் செய்த கதையைச் சொல்லவேண்டும் என்று கேட்க சூதர் சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரணி முனிவர்களே, முன்னே ஒரு கற்பகால முடிவில் - பிரும்மா, விஷ்ணு முதலான தேவர்களும், பூமியில் உள்ள சகல ஆத்மாக்களும், ஸ்தாவர ஜங்கமம் முதலானதும் ஆகிய இவைகள் எல்லாம் பரமசிவத்தில் ஒடுங்கிற்று. அதைப் பரமசிவன் பார்த்து அதிசயப்பட்டு முன்போல சகலத்தையும் உண்டாக்க நினைத்து திருவோத்தூருக்கு கிழக்கு பக்கத்தில் ஒரு குரோச

தூரத்தில் போய் வீரட்டகாசம் செய்திருந்து முன்போல பிரும்மா, விஷ்ணு, முதலானவர்களையும், தேவர், நாகர், மனுஷ்யர்களையும், ஸ்தாவர ஜங்கமம் முதலானதையும் சிருஷ்டித்துக் கொண்டிருந்தார். அப்போது ஈசுவரியானவள் சப்தகன்னிகைகளுடன் புறப்பட்டு பரமேசுவரனைத் தேடி அவ்விடத்தில் அவரைக் கண்டுபிடித்து அவரைத் தழுவிக்கொண்டாள். அவள் கூடவந்த சப்த மாதர் காளி முதலானவரும் பரமசிவனை பூஜைசெய்து கொண்டிருந் தார்கள். இவர்களைப் பரமசிவன் அந்த இடத்திலே இருக்கும்படியாக வைக்க, அந்த ஊருக்கு காளியூரென்று பேராயிற்று. அந்தச் சிவலிங்கத்துக்கு வீரட்டேச்வரரென்று பேராயிற்று. இந்தப் பிரகாரம் அங்கே பரமசிவனும் ஈசுவரியும் கல்பகோடிகாலம் வரையில் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்கிற மூன்று தொழிலையும் நடத்திக் கொண்டிருந்தார்கள். இவை இப்படி இருக்க முன்காலத்திலே தக்ஷனானவன் செய்த யாகத்துக்கு ஈசுவரி போய் பங்கப்பட்டு திரும்பிவந்து இமகிரி ராஜனிடத்தில் புத்திரியாகி அவன் தேவியான மேனாதேவியால் வளர்க்கப்பட்டு பரமசிவனை பூசித்துக்கொண்டு பஞ்சாக்னி மத்தியில் இருந்து சிவனை நினைத்து தவம் செய்திருந்தாள்.

அதைப் பரமசிவன் அறிந்து தேவர்களும், தவசிகளும், தன்னை புடைசூழ்ந்து வர அந்த இடத்தில் போய் ஈசுவரியைப் பார்த்து நீ நம்மை நினைத்து தவம் செய்கிற விதத்தை அறிந்தோம். உன் தாய் வீட்டார் அறியாமல் நாம் உன்னை வரிக்கக்கூடாது. நீ தட்சன் யாகத்துக்கு போன பாவத்தை தீர்த்துக்கொண்டால் அப்பால் உன்னை விவாகம் செய்வோம் என்றார்.

அதற்கு ஈசுவரியானவள் அந்த பாவம் நீங்குகிற விதம் எப்படி என்று கேட்க, அதற்கு ஈசுவரர் தேவர்களுக்கு வேதங்களை போதித்த ஸ்தலமான திருவோத்தூர் என்று ஒரு ஸ்தலம் இருக்கிறது. அதில் போய் நீ நம்மை பூஜை செய்தால் இந்த பாவம் தவிர நீ முன்ஜென்மத்தில் செய்த பாவமும் நீங்கும் என்று சொல்ல அதற்கு ஈசுவரியானவள், நான் இந்த இடத்திலேயே உம்மை பூஜை செய்கிறேன். அந்த பாபத்தை நீக்கியருளும் என்று கேட்க, அதற்கு ஈசுவரரானவர் திருவோத்தூரின் பெருமையும், மகிமையும் நன்றாய்ச் சொல்லி அந்த ஸ்தலத்தில் நீ போய் நம்மை பதினைந்து நாள் பூஜித்தால் இந்த பாவம் போகும் என்று சொல்லி சப்தகன்னி, காளி, இந்திரன், முதலானவர்களையும் ஈசுவரியுடன் திருவோத்தூருக்கு வருகவென்று சொல்லிவிட்டு அதைவிட்டு புறப்பட்டு இமையபர்வதராஜன் முன்னேபோய் உம்முடைய புத்திரியை திருவோத்தூரென்கிற சிவஸ்தலத்தில் திருமணம் செய்ய நினைத்திருக்கின்றோம். ஆகையால் உம்முடைய புத்திரியை அந்த ஸ்தலத்துக்கு அழைத்து வாருமென்று சொல்லிவிட்டு கைலாசகிரிபோய் சேர்ந்தான்.

பின்பு அந்தப்படிக்கு ஈசுவரி ரத்னப் பல்லக்கின் மேல் ஏறி தேவமாதர்கள் புடைசூழ மங்கள வாத்தியத்துடன் புறப்பட்டு திருவோத்தூரில் திருக் கோவிலில் போய் அங்குள்ள கல்பகோடி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து விபூதி தரித்து பஞ்சாட்சரம் ஜெபித்து கோவிலில் போய் சுவாமியை தரிசித்து பலவாறாக தோத்தரித்து தன் விரலால் பூமியில் ஊன்றி அந்த வழியால் வந்த ஜலத்தை எடுத்து பரமசிவனை பேரன்போடு ஆகம விதிப்படி பூஜை செய்தாள். அவளுடன் போன சப்தமாதர் முதலான சமஸ்தரும் அங்கே பரமசிவனை பூஜித்துக் கொண்டு ஈசுவரியின் முன்னே இருந்தார்கள். அப்போது பரமசிவன் மனம் மகிழ்ந்து ரிஷப வாகனத்தின் மேல் ஏறி தேவர்கள், முனிவர்கள் புடைசூழ ஈசுவரியின்

முன்னே வந்துநின்று, நீ முன்னே நம் வார்த்தையைத் தட்டி தக்ஷன் யாகத்துக்குப் போன பாவம் தீர்ந்தது. இனி உன்னைத் திருமணம் செய்கிறோமென்றார்.

**அம்மை தவம் புரிந்த சருக்கம் முற்றும்**

## 8. திருமணச் சருக்கம்

இந்த சரித்திரங்களை நைமிசாரணிய முனிவர்கள் கேட்டு சந்தோஷப்பட்டு சூத முனிவரை நமஸ்கரித்து ஈசுவரியை பரமசிவன் திருமணம் செய்த கதையை சொல்ல வேண்டும் என்று கேட்க சூத மகாரிஷியானவர் சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே பரமேச்வரரானவர் விஷ்ணுவின் முகத்தைப்பார்த்து உமாதேவியை இந்த இடத்தில் திருமணம் செய்கிறோம். அதற்கு வேண்டிய வஸ்துக்களை சேர்ப்பித்து சமஸ்தரையும் அழைப்பிக்க வேண்டும் என்று சொல்ல அந்தப்படியே அவர் செய்தபின்பு பரமசிவனானவர் தேவமயனானவன் நவரத்தினங்களால் நிருமித்த கல்யாணப்பந்தலில் ரத்த மேடையின் மேல் அநேக கடங்கள், வாத்தியத்துடன் ஆடி மாசத்தில் பூர நட்சத்திரத்தில், எவர்களாலும் சொல்லுதற்கரிய மஹா விபவத்துடன் ஈசுவரியை விவாஹம் செய்து அந்த கிராமத்தில் திருக்கோலம் கொண்டு சுகமாய் இருந்தார்கள். அப்போது ஈசுவரியானவள்-தன்னை அடுத்தவர்களுக்கு வந்த துன்பங்களை எல்லாம் நிவர்த்தி செய்து வேறொரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்தாள். அந்த சரித்திரம் என்னவென்றால் இந்த பூமியில் முன்னே ஒரு காலத்தில் தவத்தில் பலம் பெற்ற ராட்சசர்களான மயிடன், கம்பன்,

அந்தகன், ரக்தபீசன், நிசும்பன், ஜலம்தரன் ஆகிய இவர்களெல்லாம் தேவர்களுக்கும், மனுஷ்யர்களுக்கும் துன்பம் செய்துகொண்டு திரிந்தார்கள். அவர்களை எல்லாம் ஈசுவரியானவள் வாளாயுதத்தால் கொன்று விட்டு அந்தப்பாவம் தீர திருவோத்தூருக்கு அக்கினி மூலையில் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்திருந்தாள்.

**திருமணச் சருக்கம் முற்றும்**

## 9. சூரியன் பேறு பெற்ற சருக்கம்

இந்த சரித்திரங்களை எல்லாம் நைமிசாரணிய ரிஷிகள் கேட்டு சந்தோஷம் அடைந்து சூதமகாரிஷியைப் பார்த்து - சூரியனானவன் வேதபுரீசுவரரை பூஜை செய்து பேறுபெற்ற சரித்திரத்தைச் சொல்ல வேண்டுமென்று கேட்க சூத முனிவர் சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே. முன் ஒரு காலத்தில் மரீசி முனிவர் பெற்ற காசிப முனிவரை அவர் பத்தினியான அதிதியானவள் பார்த்து எனக்கு ஒரு புத்திரன் கொடுக்க வேண்டுமென்று சொல்லி நமஸ்கரிக்க அந்த காசியபரானவர்அவளை சம்போகிக்க அவள் வயிற்றில் சூரியன் பிறந்தான். அவனை காசிபமுனிவர் பார்த்து நீ வேதாகமம் முதலான சகல சாஸ்திரங்களிலும் சம்பூர்ணமாய் தெரிந்தவனாக ஆகவேணுமென்றார். சுருதிபுரி என்கிற திருவோத்தூரில் போய் அங்கே திருக்கோவிலில் இருக்கின்ற வேதபுரீஸ்வரரை அன்புடன் நீ பூஜை செய்தால் அவர் நீ கேட்ட வரங்களை எல்லாம் கொடுப்பார். அதனால் நீ மேன்மையானவனாகுவாய் என்று சொன்னார்.

அதை சூரியன் கேட்டு திருவோத்தூரில் உள்ள திருக்கோவிலில் போய் அங்கேயிருக்கிற கல்யாண கோடி என்கிற தீர்த்தத்தில் முழுகி நித்யகர்ம ஜெபதப அனுஷ்டானங்களை முடித்து அந்த கோவிலில் நுழைந்து வேதபுரீசுவரரை தோத்தரித்து நமஸ்கரித்து அதை விட்டு அந்த கோவிலுக்கு வடக்கில் ஒரு நாழிகை வழி தூரத்தில் போய் அங்கே குதிரை கூட்டங்களுடன் இருக்கின்ற - கோடம் என்கிற சண்டாளனை அதைவிட்டு போகும்படி கோபங்கொண்டு துரத்திவிட்டு - அங்கே ஒரு சிவலிங்கம் வைத்து சிவாகம விதிப்படி பூஜை செய்து எனக்கு அழியாத சம்பத்து கொடுக்க வேணுமென்று சொல்லி வணங்கி தோத்திரம் செய்தான்.

அப்போது பரமசிவன் அந்த லிங்கத்தில் இருந்து வெளியில் வந்து அவனுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்துவிட்டு அந்த சிவலிங்கத்தில் மறைந்தருளினார். அந்த இடத்தில் கோடமென்கிற குதிரைக் கூட்டங்கள் இருந்ததால் அந்த ஊருக்கு கோடநகரென்றும் - சூரியன் குழந்தைப் பருவத்தில் பூஜித்ததால் - அந்த சிவலிங்கத்துக்கு கொழுந்தீஸ்வரர் என்றும் பேராயிற்று. இவை இப்படி இருக்க பின்பு அந்த சூரியன் அந்த கொழுந்தீஸ்வரரைப் பணிந்து உத்திரவு பெற்றுக்கொண்டு - அதை விட்டு - திருவோத்தூரில் போய் அந்த கோவிலில் சிவபக்தன் செய்கிற சிலவிஷயங்களை எல்லாம் பார்த்து கோவிலுக்குள்ளே போய் வேதபுரீசுவரரை அன்புடன் பூஜை செய்து அவர்முன் நின்று பலவிதமாக தோத்திரம் செய்தான். அப்போது பரமசிவனானவன் அவன்மேல் மனசு வைத்து உமாதேவியுடன் ரிஷப வாகனத்தின்மேல் வந்து தன் கையால் அவன் சரீரத்தை தடவிக்கொடுத்து வேண்டிய வரங்களும் கொடுக்க - அவன் நான் எப்போதும் உங்களை விட்டு

பிரியாதிருக்கும்படி வரம் கொடுக்க வேண்டுமென்று கேட்க அப்படியே அவர் கொடுக்க - அங்கே ஒரு இடத்தில் இருந்துகொண்டு மிகுந்த அன்புடன் நித்தியம் பரமசிவனை பூஜை செய்து கொண்டிருந்தான்.

இவன் இப்ப்டி இருக்கும்போது பிரும்மாவானவன் சில முனிக் கூட்டங்களுடன் புறப்பட்டு திருவோத்தூரில் வந்து சுவாமி முன் நின்று பணிந்து - உலகத்தில் முத்தொழிலும் நடத்துகின்றீரே - லோகத்தில் மூடிக்கொண்டிருக்கிற இருளைப் போக்கும்படியான விதத்தை நீங்கள் செய்யவில்லையே. நீங்களே இப்படி இருந்தால் அதை இன்னும் யார் செய்வார்கள். ஆகையால் இந்த சூரியனை மகமேரு - கிரியை நித்தியம் ஒருதரம் பிரதட்சணம் வரும்படிக்கு வரம் கொடுத்தனுப்பவேணும். அப்படி அனுப்பினால் நித்தியம் - காலை, மாலை, மத்தியானம் என்கிற மூன்று காலமும் தெரியும். அது தெரிவதால் அந்த காலத்தில் நடந்த பூஜை, சந்தியாவந்தனம் முதலானதுகளெல்லாம் செய்கிற காலம் தெரியும். ஆகையால் இந்த சூரியனை மகமேருகிரியை நித்தியம் ஒருதரம் பிரதட்சணம் செய்யும்படி நீங்கள் செய்துவைக்க வேணுமென்று சொல்ல பரமசிவனானவர் ஒரு சக்கரம் பூட்டிய தேர் ஒன்றை ஏற்படுத்தி ஏழு பச்சைக் குதிரைகளை அதில் கட்டி அதை சூரியனிடத்தில் கொடுத்து - நீ இதன்மேல் ஏறிக்கொண்டு நித்தியம் ஒருதரம் மகமேருகிரியை வலம் வந்து கொண்டு இரு என்றார். அப்போது சூரியனானவன் சுவாமியைப் பார்த்து இந்த தேரின்மேல் முன்னே நீங்கள் ஏறிக்கொண்டு இந்த வேதபுரியை பிரதட்சணம் வாருங்கள் என்று சொல்ல - சுவாமி அந்த ரதத்தின் மேல் ஏறி திருவோத்தூரை பிரதட்சணம் செய்து சூரியனைப் பார்த்து பிரதி வருஷம்தோறும் தை மாதத்தில் பூர்வ பட்சத்து தசமியில்

ரதத்தின் மேல் ஏறி வருகிற உத்சவத்தில் நம்மை தரிசித்தவர்களுக்கு மறுபடியும் ஜெனனம் எடுக்காதிருக்கும்படிக்கு மோட்சம் கொடுப்போம். மேலும் அந்த சப்தமி திதியில் நம்முடைய, குகநதியில் வந்து ஸ்நானம் செய்து, தர்ப்பணம் செய்கிற சமயத்தில் நம்மை நினைத்தவர்களுடைய பித்ருக்கள் அழியாத முக்தியை அடைவார்கள். ஆக இந்தப் பிரகாரம் பரமசிவன் சொல்ல சூரியனானவன் அவைகளை கேட்டுக்கொண்டு சுவாமியைப் பணிந்து உத்திரவு பெற்றுக்கொண்டு அந்த ரதத்தின் மேல் ஏறி மகமேருகிரியை நித்தியம் ஒரு தரம் பிரதட்சணம் செய்து கொண்டிருக்கிறான்.

**சூரியன் பேறுபெற் சருக்கம் முற்றும்**

## 10. விநாயகர் அங்குசபாசம் பெற்ற சருக்கம்

இந்தப் பிரகாரம் சூரியன் சரித்திரத்தையும் நைமிசாரணிய முனிவர்கள் கேட்டு சந்தோஷப்பட்டு சூதமகரிஷியை வந்தித்து தோத்தரித்து முன்னே வேதபுரியிலே கோடனென்கிற ராட்சசன் இருந்ததாய்ச் சொன்னீரே அந்தச் சரித்திரத்தை சாங்கோபாங்கமாய் சொல்லவேணுமென்று கேட்க சூத முனிவர் சொல்லுகிறார், கேளுங்கள். நைமிசாரணிய முனிவர்களே - ஸ்ரீ கைலாசகிரியின் உச்சியிலே ரத்னமண்டபத்திலே, சிம்மாசனத்திலே ஸ்ரீ பரமேஸ்வரனும் பார்வதியும் வீற்றிருந்து சந்தோஷத்துடன் அந்த மண்டபத்தில் எழுதி இருக்கப்பட்ட சித்திரங்களைப் பார்த்து கொண்டிருந்தார்கள். அப்போது ஈசுவரி அந்த மண்டபத்தில் ஓங்கார ரூபம் எழுதி இருந்ததைப் பார்த்து அதிசயப்பட்டு எழுந்து பரமசிவனைத் தொழுது இந்த ஓங்காரத்தின் பெருமையை எனக்கு தெரிவிக்க வேண்டுமென்று கேட்க

அதற்கு பரமசிவன் வேதங்களின் அர்த்தமாகிய மந்திரங்களின் நிறைவே ஓங்காரம் என்று தெரிவித்தார் என்றார். அதை ஈசுவரி கேட்டு மகிழ்ந்து நீர் இந்த ஓங்காரத்தைப் போல யானை உருவம் கொண்டு என்னை சம்போகிக்க வேணுமென்று அபேக்ஷைப்பட்டேன் என்று சொல்ல ஸ்வாமியும் அதற்கு சம்மதப்பட அவாள் இருவரும் கூடி மானஸ தடாகத்தில் போய் யானை யுருவம் கொண்டு போகிக்க விநாயகர் யானைமுகத்துடன் பிறந்தார்.

பின்பு சுவாமியும், அம்மனும், அவர் அவர்களுடைய ரூபத்தை எடுத்துக்கொண்டு வினாயகக் கடவுளை அழைத்துக்கொண்டு கயிலையங்கிரியில் வந்து சேர்ந்து விநாயகருக்கு ஆடையாபரணம் முதலானவைகள் தரிப்பித்து விநாயகர் முகத்தைப்பார்த்து ஹரிபிரம்மேந்திராதி தேவர்களெல்லாம் பிரார்த்திக்கப்பட்ட கடவுளாய் கயிலையிங்கிரியில் இருக்கப்பட்ட சிவகணங்களுக்குத் தலைவனாயிரு. திரிலோகத்திலும் நடத்துகின்ற செயலுக்கும் முதலில் பூஜிக்கப்பட்ட கடவுளாய் இருப்பாய். உன்னைப் பணிபவருடைய இடையூறுகளை நீக்கியருள்வாய். ஆகிய இந்த வரங்களை யுனக்குக் கொடுத்தோம். இனி நீ வேதபுரியென்கிற திருவோத்தூரில் போய் நம்மை பூஜை செய்து நினைத்தவைகளை அடைவாய் என்று சொல்ல விநாயகரானவர் வேதபுரியில் போய் பரமசிவனைப் பூஜைசெய்து முன்சொன்ன வரங்களைப் பெற்று அதற்கு அக்கினி மூலையில் ஒரு நாழிகை வழி தூரத்தில் போய் அங்கே ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து அதற்கு வாயு திக்கில் முன்னாளில் வால்மீகி முனிவர் பூஜை செய்த சிவலிங்கத்தைப் பணிந்து தோத்திரம் செய்து வேதபுரியில் திருக்கோவிலில் இருந்தார். அதே காலத்தில் வேதபுரியைச் சுற்றி ஒரு யோசனைதூரம் வரையில் பெருத்த காடாக இருந்தது. அந்தக்

காட்டில் குதிரை முகமுள்ள கோடாசுரனென்கிற ராட்சசன் இருந்துகொண்டு சகல உயிர்களையும் மனுஷ்யர்களையும் எடுத்து சாப்பிட்டுக்கொண்டு தேவர்களுக்கு அநேக துன்பங்களைச் செய்து கொண்டிருந்தான். அதை தேவர்கள் சகிக்காமல்போய் தேவேந்திரனிடம் சொல்ல தேவேந்திரன் சேனைகளைக் கூட்டிக்கொண்டு அவனுடன் சண்டைசெய்து தோல்வியடைந்து திருவோத்தூரில் போய் பரமசிவன் முன்னே நின்று வணங்கி, தான்போய் கோடாசுரனுடன் சண்டை செய்து தோற்று வந்ததைச் சொன்னான்.

அப்போது அவர் இந்திரனுக்கு அபயஹஸ்தம் கொடுத்து விநாயகக் கடவுளைப் பார்த்து நீ போய் கோடாசுரனை உன் தும்பிக்கையால் எடுத்து பூமிமேல்மோதி, அவனைக் காலைப் பிடித்து கிழித்துப் போட்டு வாவென்று சொல்லி தன் நெற்றிக் கண்ணைக் கொடுத்து கோடாசுரனிடத்தில் போவென்று சொல்லி அனுப்ப அவர் போய் தன் தாயாரன இளமுலை நாயகியாரான ஈசுவரியின் பாதத்தில் விழுந்து நமஸ்கரிக்க அந்த ஈசுவரியானவள் விநாயகர் கையில் அங்குசமும் பாசமும் கொடுத்து நீ போய் கோடாசுரனைக் கொன்று விட்டு ஒகு குற்றமும் இல்லாமல் சுகமாய் வாவென்று சொல்லி அனுப்ப, வினாயகக் கடவுள், சிவகணங்களுடனும்,இந்திரனுடனும், பூதசேனை களுடனும் அதை விட்டு புறப்பட்டு, திருவோத்தூரைச் சுற்றியிருந்த பெரும் காட்டை சிவகணங்களால் வெட்டி வெளியாக்கி விட்டார். அப்போது விநாயகருடன், வந்த சிவகணங்களும் பூதவேதாளங்களும், பூஜங்களைத்தட்டி பெரியகூச்சலிட அதை அந்த கோடாசுரன் கேட்டு எழுந்திருந்தான். அப்போது அவனுடைய தூதர்கள் வந்து விநாயகக் கடவுளின் சேனா சமூகத்தைப்பார்த்து, திரும்பி, துரிதமாய்ப்போய் அந்த கோடாசுரனைப் பணிந்து முன்னே

உம்முடன் சண்டை செய்து, பயந்து ஓடிப்போன இந்திரன் யானை முகத்தையுடைய ஒரு பிள்ளையையும், அளவற்ற சேனைகளையும் அழைத்துக்கொண்டு வந்திருக்கிறோம் என்று சொல்ல அப்போதவன் எனக்கு சாப்பிட யானையை கொண்டு வந்தானோ என்று சொல்லி கோபித்து இடிஇடித்தது போல் பற்களைக் கடித்து புஜங்களைத் தட்டி தன் சேனைகளால் மலைகலை எடுத்து பூதகணங்கள் மேல் விட்டெறிந்து சண்டை செய்ய தேவர் சேனைகளும், பூதசேனைகளும் பயந்து திரும்பி ஓடிப்போக எத்தனித்ததது.

அப்போது விநாயகரானவர் அந்த கோடாசுரன் குடுமியை தும்பிக்கையால் பிடித்து இழுத்துக்கொண்டு கல்லை ஆகாசத்தில் விடுவது போல் அவனை சந்திரமண்டலம் போகும்படி அனேகதரம் விட்டெறிந்தார். அப்போது அவன் தன் சமர்த்தால் ஒரு மந்திரத்தை ஜெபித்து மேருமலை மேல் குதித்து அந்த மலையை அடியோடு இழுத்து தேவர்சேனைகள் மேல் விட்டெறிய அப்போது தேவர்களும், பூதர்களும் பயந்து விநாயகரை வந்து பிரதட்சணம் செய்ய விநாயகக் கடவுள் இவர்களுக்கு அபயஹஸ்தங் கொடுத்து அந்த ராட்சசன் விட்டெறிந்த மலையை எடுத்து அவன்மேல் விட்டெறிய அவன் தன் கையில் உள்ள தண்டாயுதத்தால் அடித்து ஓடச்செய்தான். பின்பு விநாயகரானவர் பாசத்தை விட்டு அதனால் அவனைக் கட்டி இழுத்து அவனை தும்பிக்கையால் எடுத்து அவன் சரீரத்திலுள்ள தோல், நரம்பு, ரத்தம், பிராணன் இவைகளை நன்றாக உதறிவிட்டு மீதி இருந்த எலும்புகளை எல்லாம் அதற்கு தெற்குத் திசையில் எறிந்து விட்டார். அதை உலகத்தார் இப்போது அதை வெண்குன்றமென்று சொல்லுகிறார்கள். அதுவே வந்தவாசிமலைதான் பின்பு விநாயகமூர்த்தி தன்னுடன் கூடவந்த சேனைகளுடன் புறப்பட்டு திருவோத்தூரில் வந்து சுவாமியை தரிசிக்க அவர்

விநாயகரைப் பார்த்து சந்தோஷப்பட்டு அவரை கையால் தடவிக் கொடுத்து மெச்சி மகிழ்ந்து அந்தவூருக்கு அக்கினி முலையில் ஒரு அம்பு போடும் தூரத்தில் உள்ள தொந்திபுர நாட்டில் நீ இருந்துகொண்டு அங்கிருக்கப்பட்டவர் செய்கிற பூஜைகளை அங்கீகாரம் செய்து அவர்களுக்கு வரப்பட்ட துன்பங்களை ஒழித்து இருப்பாயென்று சொல்ல அவர் அப்படியே போய் இருந்தார்.

இவர் இப்படி இருக்க திருவோத்துருக்கு கிழக்கு பக்கத்தில் இரண்டு குரோச தூரத்திலுள்ள பெருத்த காட்டில் பெருச்சாளி முகத்துடன் ஆகுவென்று பேரையுடைய ஒரு ராட்சசன் இருந்து கொண்டு மனுஷ்யர் - தேவர்கள் - ரிஷிகள் இவர்களுக்கெல்லாம் மிகுந்த உபத்திரவம் செய்து கொண்டு இருந்தான். அதை அவர்கள் சகிக்க முடியாமல் வருத்தப்பட்டு திருவோத்தூரில் போய் வேதபுரீஸ்வரரைப் பணிந்துஅந்த ராட்சசன் செய்கிற உபத்திரவத்தைச் சொல்ல அவர் அவனை சம்ஹரிக்கும்படி விநாயகருக்கு உத்தரவு கொடுத்தனுப்ப விநாயகரானவர் பூதசேனைகளுடன் புறப்பட்டு அங்கே போய் அந்த காட்டை அழித்து அவனுடன் சண்டை செய்து முடிவில் அவனை பாசத்தினால் கட்டி இழுத்தார்.

அப்போது அவனுக்கு பூர்வ ஞானத்தால் நல்ல புத்தியும் உண்டாயிற்று. விநாயகர் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து சொல்லுகிறான். கேளும் சுவாமி முன் காலத்தில் நான் கயிலாசத்தில் பரமசிவனுக்கு பணிவிடை செய்து கொண்டிருந்தேன். ஏதோ ஒரு பாபத்தால் பெருச்சாளி முகத்துடன் பூலோகத்தில் வந்து பிறந்து சமஸ்தருக்கும் உபத்திரவம் செய்தேன். உம்முடைய பாசம் என் சரீரத்தில் பட்டதால் என் பாபம் நீங்கிற்று. இனி நீர் எனக்கொரு வரம் கொடுக்க வேண்டும். அது என்னவென்றால் என்னை நீர்

வாகனமாய் ஏறிக் கொண்டிருக்க வேணுமென்று சொல்ல அதற்கு விநாயகர் நீ பரமசிவனை வைத்து பூஜித்து உன் பாபத்தை நீக்கிக் கொள் என்றார். அவன் அப்படியே அங்கே ஒரு சிவலிங்கம் வைத்து பூஜித்த பின்பு விநாயகரானவர் அவனை வாகனமாய் ஏறிக்கொண்டு திருவோத்தூரில் போய் சுவாமியை வணங்கி இருந்தார். அது முதல் எப்போதும் அந்தக் காளிநகரத்தில் வலம்புரிப் பிள்ளையாரென்று பேர் கொண்டு இருந்து கொண்டிருக்கிறார்.

முற்றும்

## 11. அரிசாபம் தீர்த்த சருக்கம்

இந்தப் பிரகாரம் விநாயகமூர்த்தி அங்குச பாசம் பெற்ற சரித்திரத்தை சூதமுனிவர் சொல்லக் கேட்டு சந்தோஷமாகி அந்த சூதரிஷியைப் பார்த்து நமஸ்கரித்து அந்த வேதபுரியிலேப் போய் விஷ்ணுவானவர் தான் அடைந்த சாபத்தைத் தீர்த்துக்கொண்டார் என்று சொன்னீரே. அதை விஸ்தாரமாக சொல்ல வேண்டும் என்று கேட்க சூத மகரிஷி சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே அது எப்படி என்றால் முன்னே ஒரு திரேதயுகத்திலே அந்தர கல்பத்திலே மஹாவிஷ்ணுவும் தேவேந்திரனும் ஒரு மண்டபத்தில் பேசிக்கொண்டு இருந்தார்கள். அப்போது அங்கே கண்வரிஷியானவர் போனார். இவர் வந்திருப்பது தெரிந்து அவர்கள் அந்த ரிஷியினிடத்தில் போய் அவரை விசாரிக்கவில்லை. அப்போது அவர் அவர்கள்மேல் ரொம்பவும் கோபம்கொண்டு, வாய், கண், கை, கால் இவைகள் துடிக்க வடவா முகாக்கினியைப் போலே

ஆக்கிரமித்து பல்லைக் கடித்து கோபித்து எழுந்திருக்க அப்போது அவர்கள் நடுக்கமடைந்து பயந்து மெள்ள அந்த கண்வரிடத்தில் போய் அநேகவிதமாய் அவரை தோத்திரம் செய்தார்கள். அதை அவர் கேட்டு கொஞ்சம் தயவுண்டாகி விஷ்ணுவை ஊமையனாகவும் லக்ஷ்மியை பெண்மானாகவும் இந்திரனை வேடனாகவும், இந்திராணியை குறப் பெண்ணாகவும் ஆக இந்தப் பிரகாரமாக ஆகும்படிக்கு சாபம் கொடுத்தார். அப்போது அவர்கள் பயந்து அவர் முகத்தைப் பார்த்து கேளும் கண்வ முனிவரே தேவரீர் கொடுத்த சாபமானது நாங்கள் என்ன வழி செய்தால் தீருமென்று கேட்க, அதற்கு அவர் விஷ்ணுவைப் பார்த்து நீ கையிலையங்கிரிக்கும் மேன்மையான வேதபுரி என்கிற திருவோத்தூரில் போய் பரமசிவனையும், பார்வதியையும், பூஜை செய்தால் இந்த சாபம், நிவாரணமாகும் என்று சொல்லி இந்திரனைப் பார்த்து, நீ இந்திராணியுடன் வேடுவர் வம்சத்தில் பிறந்து லக்ஷ்மி இடத்தில் பிறந்த பெண்ணை எடுத்துக்கொண்டுபோய் வளர்த்து முருகக் கடவுளுக்குக் கொடுத்தபின்பு, இந்த சாபம் நிவாரணமாகும் என்று சொல்லிவிட்டு கைலாசத்தில் சுவாமியை தரிசிக்கப் போனார்.

பின்பு விஷ்ணுவானவர் தவவேஷம் தரித்து திருவோத்தூரில் போய் சிலகாலம் வேதபுரீஸ்வரரைப் பூஜை செய்ய அப்போது ஈசுவரருக்கு கிருபை உண்டாகி, உமாதேவியுடன் ரிஷப வாகனத்தின் மேல் எழுந்தருளி வந்து விஷ்ணுவைப் பார்த்து கணவர் கொடுத்த சாபத்தை நீக்கினோம். நீ இங்கே ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து பூஜித்து உன்னிடத்திற்கு போவென்று சொல்லி சிவலிங்கத்தில் கலந்தருளினார். அந்தப்படியே அங்கே விஷ்ணுவானவர் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்தார். அந்த சிவலிங்கத்தை தவத்தீச்வரரென்று உலகத்தார்

சொல்லுகிறார்கள். இன்னும் விஷ்ணுவானவர் சிவனை பூஜை செய்த சரிதங்களை கேளுங்கள். முன்னே ஒரு காலத்தில் மகா விஷ்ணுவானவர் கோபம் கொண்டு பிருகுரிஷியின் பெண் சாதியையும், தாயையும் கொன்றார். அப்போது பிருகுரிஷியானவர் விஷ்ணுவின் மேல் அதிக கோபமாகி விஷ்ணுவைப் பார்த்து நீ பூமியில் ஆயிரம் ஜனனம் எடுத்து அலையக் கடவதென்று பெருத்த சாபமிட அப்போது விஷ்ணுவானவர் மனத்தில் துயரமாகி சீக்கிரமாய் திருவோத்தூரில் போய் பரமசிவன் முன்னின்று பணிந்து பிருகுமுனிவர் கொடுத்த சாப சங்கதியைச் சொல்லி அந்த சிவனை அன்புடன் பூஜித்து தோத்திரம் செய்து கொண்டு இருந்தார். இவர் இப்படி செய்ததால் பரமசிவனுக்கு கிருபையுண்டாகி, உமாதேவியுடன் ரிஷபத்தின் மேல் வந்து காட்சி கொடுத்து விஷ்ணுவைப் பார்த்து உமக்கு பிருகுமுனிவர் இட்ட சாபம் போயிற்று. நீ பத்து ஸ்திரீகள் வயிற்றில் பிறந்து ராட்சசர் செய்கிர உபத்திரவங்களை நீக்கக்கடவாய் என்று சொல்லி விட்டு மறைந்தருள விஷ்ணுவானவர் அந்த வேதபுரிக்கு வாயு மூலையில் ஒரு குரோசதூரத்தில் போய் அங்கே ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து பூஜித்து வைகுண்டம் போனார். அந்த லிங்கம் விஷ்ணுவால், ஸ்தாபித்ததால் அதை அரிலிங்கம் என்று மனுஷ்யர்கள் சொல்லுகிறார்கள்.

இன்னொரு கதை கேளுங்கள். முன்னொரு காலத்தில், விஷ்ணுவானவர் கருடன் மேல் ஏறிக்கொண்டு கைலாசகிரிக்குப் போகும் போது மத்தியில் அந்த கருடனானது விஷ்ணுவிடம் சொல்கின்றது. கேளும் சுவாமி இந்த சமுத்திரம் சூழ்ந்த பூமியில் உள்ள சகல வஸ்துக்களை உம்முடைய திருவயிற்றில் வைத்துக் கொண்டிருக்கிற

சாமர்த்தியமானது என்னுடைய இரண்டு தோள்களினாலல்லவா என்று சொல்ல அதற்கு அவர் நம்ம கருடனானது அகங்காரம் கொண்டதென்று எண்ணிக் கொண்டு அதை வெளி விடாமல் என்னை பார்க்கிலும் நீ பலமுள்ளவனென்று கருடனும் சொன்னார். இப்படியாக இவர்கள் பேசிக்கொண்டு கைலாசத்தில் போய் விஷ்ணுவானவர் நந்திகேஸ்வரனின் முன்னே கருடனை விட்டு விட்டு அதைப்பார்த்து நீ இங்கே இருவென்று சொல்லிவிட்டு ஈசுவரனிடத்தில் போனார். அப்போது முன் சொன்ன நந்திகேசுவரருடைய மூக்கின் காற்றால் சுழற்காற்றில் அகப்பட்ட அந்துப்பூச்சி போல அந்த கருடனானது நந்திகேசுவரன் மூக்கினுள் போயும் அதன் மூக்கின் காற்று வெளியில் வரும்போது ஆகாசம் வரையில் போயும் இந்தப் பிரகாரமாக கருடனானது பலதரம் சங்கடப்பட்டு முன்னே வழியில் விஷ்ணுவினிடம் சொன்ன சாமர்த்தியம் கெட்டு மனமும் தேகமும் தளர்ந்து சோர்ந்தார்.

அந்தச்சமயத்தில் ஒரு சிவகணநாதர் இதைப் பார்த்துப் போய் இந்த சங்கதியை விஷ்ணுவிடம் சொல்ல அவர் பரமசிவனுடன் கருடன் சொன்ன சங்கதியைச் சொன்னார். அப்போது பரமசிவனானவர் கருடனை அழைத்துப் பார்த்து நீ இந்த விஷ்ணுவை மதிக்காமல் அகங்கரித்துப் பேசியதால் அந்த பாவம் தீர பரமசிவனை பூஜை செய் என்று சொல்லி அனுப்பி விட்டு நந்திகேசுவரரை அழைத்து நம் உத்தரவில்லாமல் கருடனை நீ வருத்தப்படுத்தினதால் அந்த பாபம் தீரும்படி வேதபுரீஸ்வரரை பூஜை செய் என்று சொல்லி பின்பு விஷ்ணுவைப் பார்த்து நீ மனதில் கபடத்தை வைத்துக்கொண்டு கருடனை நம்முடைய நந்திகேசுவரர் முன்னே நிறுத்திவிட்டு வந்ததால் அந்த பாபம் தீர வேதபுரீசுவரரை பூஜை செய் என்றார்.

பின்பு விஷ்ணுவானவர் பரமசிவன் சொன்னபடிக்கு வேதபுரீசுவரரை பூஜை செய்து அதை விட்டு அந்த ஸ்தலத்துக்கு ஈசான்ய மூலையில் ஒரு அம்பு ஓடுகிற தூரத்தில் போய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்தார். அதை உலகத்தார் சுந்தரேஸ்வரர் என்று சொல்லுகிறார்கள். பின்பு நந்திகேஸ்வரரானவர் வேதபுரிக்கு வடக்கு பக்கத்தில் மூன்று அம்புவோடுகிற தூரத்தில் போய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்தார். அதை உலகத்தார் நந்தியீச்வரரென்று சொல்லுகிறார்கள். கருடனானது அந்த ஸதலத்தில் போய் சிவலிங்கம் வைத்து பூசை செய்தது. அதை பக்ஷீச்வரர் என்று சொல்லுகிறார்கள். அந்த பக்ஷீஸ்வரரை வணங்குகிறார்கள். அற்புத செல்வத்தை அடைந்து நோயும், பாவமும் நீங்கி, விவாகமும், புத்திரப்பேறும், ஆயுசும், ஸரஸ்வதி, லக்ஷ்மி இவர்கள் கடாக்ஷமும் இவைகள் உண்டாகி வெகுநாள் பூமியில் வாழ்ந்து பின்பு தேவலோகத்தில் போய் பிறந்து அங்குள்ள சுகத்தை அனுபவித்து, முடிவில் கைலையங்கிரியில் திருக்கூட்டத்தின் மத்தியில் சிவன் திருவடியை அடைந்தார்கள்.

இனி, இந்திரனும், இந்திராணியும் அடைந்த சாபம் நீங்கின விதத்தைச் சொல்லுகிறேன். அதாவது முன் சொன்ன திரேதாயுகத்திலே கணவர் கொடுத்த சாபப்படி விஷ்ணுவானவர் ஊமையாகி ஒரு மலையின் அடிவாரத்தில் சென்று தவம் செய்திருந்தார். முன்னே கணவர் கொடுத்த சாபப்படி லக்ஷ்மியானவள் பெண் மானாகி விஷ்ணுவைத் தேடிக்கொண்டு பூமி எல்லாம் திரியும்போது, அவள்அந்தமலை அடிவாரத்தில் தவம் செய்கிற விஷ்ணுவை மூக்கால் முகர்ந்து கர்ப்பமாகி ஒரு பெண்ணைப் பெற்று அதைச் சந்தோஷத்துடன் பார்த்துக்கொண்டு இருக்கும்போது

வேடர்கள்காடுகளில் திரிந்து கொண்டு அங்கே வர அவர்களை அந்தப் பெண்மான் பார்த்து, பயந்து அந்தக் குழந்தையை விட்டுவிட்டு அப்பால் ஓடிப் போயிற்று. அந்தக் குழந்தையை அங்கே வந்த வேடர்கள் எடுத்துப் போய் வளர்க்க முருகக் கடவுள் வந்து அந்தப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு போனார். பரமசிவன் லக்ஷ்மியை மானுருவம் நீக்கிவிட்டு அவர் முன்னே சிவலிங்க ரூபமாய் இருக்க அவன்அந்த பூஜை செய்தான். அந்த லிங்கத்துக்கு ஸ்ரீலிங்கம் என்று பேராயிற்று.

**அரிசாபந் தீர்த்தச் சருக்கம் முற்றும்**

## 12. பிரமன் சாபம் தீர்த்தச் சருக்கம்

இந்தப் படியாகச் சூதமஹரிஷியானவர் விஷ்ணுவின் சாபம் தீர்த்த சரித்திரத்தைச் சொல்ல அவற்றை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டு சந்தோஷப் பட்டு சூதரைப் பணிந்து தோத்தரித்து, பிரும்மானவர் தனக்குவந்த சாபத்தை நீக்கிக்கொண்ட கதையைச் சொல்ல வேண்டுமென்று கேட்க சூதமகரிஷி சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே முன்காலத்திலே முருகக் கடவுள் இளமையாய் இருக்கிற நாளிலே கைலாசத்திலே பரமசிவன் பிரும்மாவை அழைப்பித்து முருகக் கடவுளுக்கு வேதங்களைச் சொல்லிவை என்று கட்டளைஇட பிரும்மா முருகக் கடவளை முதலில் பிரணவத்தை சொல் என்று சொல்ல அதற்கு முருகக்கடவுள் அந்த பிரணவாக்ஷரத்திற்கு அர்த்தமென்ன சொல் என்றார். அதற்கு பிரும்மாவானவர்

அந்த பிரணவத்துக்கு அர்த்தம் நான்தான் என்று அறிந்து கொண்டு வேதங்களை வாசித்தளி என்று சொல்ல அதை முருகக் கடவுள் கேட்டுச் சிரித்து பிரும்மாவைப் பழித்து சிவகணங்களை அழைத்து அவர்களால் பிரம்மாவை விலங்கு மாட்டி சிறையில் போட்டு அவன் செய்து வந்த சிருஷ்டித் தொழிலைத் தானே செய்துகொண்டிருந்தார். இந்தச் செய்தியை நாரதர் வைகுண்டத்தில் போய் விஷ்ணுவுடன் சொல்ல அவர் கைலாசத்துக்குப் போய் இந்தச் செய்தியை பரமசிவனுக்குச் சொல்ல பரமசிவன் அதைக் கேட்டு முருகக் கடவுளைத் தன்னிடம் அழைத்து பிரும்மாவை விலங்கில், போட்ட காரணத்தை விசாரித்து அறிந்து முருகக் கடவுளின் முகத்தைப் பார்த்து அந்த பிரணவத்தின் அர்த்தம் உனக்குத் தெரியுமாவென்று கேட்க அதற்கு முருகக் கடவுள் அந்த பிரணவத்துக்கு அர்த்தம் எனக்கு தெரியுமென்று சொன்னார். அதற்கு பரமசிவன் அதைச் சொல்லென்று கேட்க அதற்கு முருகக் கடவுள் பரமசிவன் திருச்செவியில் பிரணவத்தின் அர்த்தத்தைச் சொல்ல பரமசிவன் அதை அறிந்து கொண்டு பிரும்மாவை அழைப்பித்து நீ பிரணவத்துக்கு அர்த்தம் நீதானென்று சொன்ன தோஷத்தை நீ வேதபுரியில் போய் நம்மை பூஜை செய்து நீக்கிக்கொள் என்று சொல்ல பிரும்மா அதை விட்டு வேதபுரியில் போய் வெகுகாலம் பரமசிவனைப் பூஜை செய்திருந்தார்.

அப்போது பரமசிவன் ரிஷபவாஹனாரூடராகி அவன் முன் வந்து நின்று நீ பிரணவத்துக்கு நீதானென்று சொன்ன பாவத்தைப் போக்கினோம். நீ இந்தஸ்தலத்தில் உன் கையால் புதிதாய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து பின்பு உன்னுடைய சிருஷ்டித் தொழிலைச் செய்து கொண்டு இரு என்று சொல்ல பிரும்மாவானவர் அவர் சொன்னபடி அங்கே

ஒரு சிவலிங்கம் வைத்து பூஜித்தார். அந்தச் சிவலிங்கத்துக்கு பிரும்மேசுவரர் என்று பெயர் உண்டாயிற்று. அந்த லிங்கத்துக்கு ஈசான்ய மூலையில் ஒரு நாழிகை வழி தூரத்தில் சுகமுனிவர் வந்திருந்து அங்கே ஒரு சிவலிங்கம் ஸ்தாபித்து வெகுநாள் பூஜை செய்து தன்னை சர்ப்பங் கடித்த விஷயத்தை தீர்த்துக் கொண்டார். அந்த லிங்கத்தை தொழுதவர்கள் தங்கள் பாவத்தை தீர்த்துக் கொள்ளுகிறார்கள். பின்பு பிரும்மா ஒரு தரம் அந்த வேத புரியில் வந்து வேதபுரீஸ்வரரை பூஜை செய்தார். செய்த பாவத்தை நீக்கிக் கொண்டான். அந்த சரித்திரத்தை நன்றாய் சொல்கிறேன் கேளுங்கள்.

தேவலோகத்தில் இருக்கின்ற ரம்பை முதலான தேவதாசிகள் தாங்களிடம் இருக்கப் பட்ட அழகாலும் பரிசுத்தத்தாலும், தங்களுக்கு பரத நாட்டியம் செய்கின்ற விதம் மேன்மையாய் தெரிந்திருப்பதனாலும், அவர்கள் தங்களுக்கு சமானமானவர் ஒருவரும் இல்லை என்று ரொம்பவும் அகங்காரம் கொண்டார்கள். அதை தேவேவந்திரன் அறிந்து நரநாராயணமுனிவரிடத்தில் போய் இந்த மூன்று லோகத்திலும் இருக்கிற ஸ்திரீகளின் அழகுக்கு மேன்மைப்படட்ட அழகுள்ளதாய் ஒரு பெண்ணை சிருஷ்டித்து கொடுக்க வேண்டுமென்று கேட்க, அவர் தன் தொடையைக் கீற அதில் இருந்து ஒரு பெண் உற்பத்தியாகி வெளியில் வந்தாள். அவளுக்கு அவர் சகலவித்தைகளும் யோக சாஸ்திரம் முதலானதும் கற்றுக் கொடுத்து ஊரு என்கிற தொடையில் இருந்து பிறந்ததால் ஊர்வசி என்று பெயரிட்டு இந்திரனுக்குக் கொடுத்தார். அவன் அவளை தேவலோகத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் பரதநாட்டியம் ஆடச்சொல்லி அவள்மேல் மிகவும் தயவு வைத்திருந்தான். அதை ரம்பை முதலானவர்கள் பார்த்து மனசு குறைந்து

பிரும்மாவினிடத்தில் தேவேந்திரன் செய்த அந்தச் செய்திகளை சொல்லி அந்த ஊர்வசிமேல் தேவேந்திரனானவன் மிகவும் தயவு வைத்திருப்பதால் அவளிலும் அதிக அழகுள்ளவளாய் ஒரு பெண்ணை சிருஷ்டித்து கொடுக்க வேண்டுமென்று கேட்க அந்த பிரும்மாவானவர் மூன்று லோகத்திலும் உள்ள ஸ்திரீகளின் அழகில் ஒவ்வொரு எள்ளளவு எடுத்து ஒரு பெண்ணை சிருஷ்டி செய்து அவளுக்கு திலோத்தமை என்று பேர் வைத்து அந்த சௌந்தர்யத்தைப் பார்த்து அவள் மேல் ஆசைப்பட்டு அவளிடம் போனால், அதை அவள் அறிந்து பயந்து பெண்மான் வடிவம் கொண்டு ஓட பிரும்மாவானவர் ஆண்மான் வடிவம் கொண்டு அவள் பின்னே ஓடி அவளை சம்போகித்தான். பின்பு அவள் தன் ஸ்திரீ ரூபம் கொண்டு ரம்பையிடத்தில் போய்ச்சேர்ந்தாள். அப்பால் பிரும்மாவானவர் தன் சுயரூபத்தை எடுத்துக்கொண்டு தன்னிடம் போய்ச்சேர்ந்து சிருஷ்டித்தொழிலை நடத்த அது நடக்காமல் தடைப்பட்டது. எல்லோரும் தான் பெற்ற குமாரத்தியைச் சேர்ந்த பிரும்மா என்று பழித்தார்கள். அப்போது பிரும்மாவானவர் தனக்கு சிருஷ்டித்தொழில் முட்டுப்பட்டதை அறிந்து சுவாமியைக் குறித்து தவம் செய்ய இமயமலைக்குப் போய் அங்கே நாரதர்வர அவருடன் தனக்கு வந்த கெடுதிகளைச் சொல்லி தவம் செய்கிறதற்காக இங்கே வந்தேன் என்றார். அதற்கு அவர் நீ இங்கே தவம் செய்து பாவத்தை யொழிக்க வெகுநாள் செல்லும், ஆகையால் நீ திருவோத்தூரில் போய் வேதபுரீஸ்வரரைப் பூஜை செய்தால் செய்த பாபமும் இன்னம் நீ வேற விதத்தால் செய்த பாபமும் நிவரணமாகும். உனக்கு வேண்டிய வரங்களையும் பெற்றுக் கொள்ளலாம். நான் சொன்னது உனக்கு சந்தேகமானால் ஒரு திருஷ்டாந்தம் சொல்கிறேன்.

அது என்னவென்றால் சுவர்தனென்கிற ஒரு புத்தி இல்லாத பிராமனனானவன் காமவிஷயத்தில் கையில் இருந்த திரவியம் எல்லாம் செலவு செய்துவிட்டு தாசிகளிடத்தில் போக தனக்குத் திரவியம் இல்லாமையால் தன் தாயைச்சேர எண்ணி மண்வெட்டியால் தன் தகப்பனைக் கொன்றான். உடனே அந்த பிரும்மஹத்தி தோஷமானது கறுத்த மலையைப் போல ரூபமெடுத்து கையில் ஒரு இரும்பு உலக்கையை எடுத்துக்கொண்டு அந்த சுவர்த்தனன் பின்னே தொடர அதை அவன் பார்த்து பயந்து நடுங்கி இந்த பூலோகம் எல்லாம் திரிந்து வேதபுரியில் இருந்தான். இவன் அந்த வேதபுரிக்குள் வந்தபின்பு அந்த பிரும்மஹத்திதோஷம் அவனைத் தொடராமல் விட்டது. அதை அவன் தெரிந்து அங்கே கோவிலில் இருக்கிற கல்யாணகோஷ்டி தீர்த்தத்தில் முழுகி பரமசிவன் முன்னே போய் நின்று பலவிதமாய் தோத்திரம் செய்ய அப்போது பரமசிவனானவர் அவன் முன்போய் நின்று அவனைத் தொடர்ந்த பிரும்மஹத்தி தோஷத்தை நிவர்த்தி செய்து அவனுக்கு மோக்ஷம் கொடுத்தார். அதை நான் பார்த்திருந்தேன். ஆகையால் நீ வேதபுரியில் போய் வேதபுரீஸ்வரரை பூஜைசெய் என்று நாரதர் சொல்ல பிரும்மாவானவர் அதைக் கேட்டு வேதபுரியில் போய் சேய் நதியில் முழுகி வேதபுரீஸ்வரரை வெகுநாள் பூஜை செய்திருந்தான். அப்போது பரமசிவனானவர், உமாதேவி யுடன் ரிஷப வாகனத்தின் மேலெழுந்தருளி அந்த பிரும்மா முன்னே வந்து அவனைப் பார்த்து நீ உன் குமாரத்தியை சம்போகித்த பாபத்தை இங்கே ஒரு சிவ லிங்கம் ஸ்தாபித்து அதை பூஜை செய்து தீர்த்துக்கொள் என்று சொல்ல பிரும்மாவானவர் அந்தப்படிக்கு வேதபுரிக்கு கிழக்கே இரண்டரை குரோச தூரத்தில் போய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜைசெய்து அங்கே தேவதச்சனால் அந்த சுவாமிக்கு

கோவில், குளம், மதில், கிராமம் இவைகள் செய்துவைத்து விதிப்படி அன்புடன் மஹாபக்தியாய் அந்த சிவலிங்கத்தை பூஜை செய்துக்கொண்டிருந்தான்.

அப்போது பரமசிவன் உமாதேவி சகிதமாய் ரிஷப வாகனத்தின் மேல் வந்து அந்த பிரும்மா முகத்தைப் பார்த்து நீ உன் புத்திரியை சேர்ந்த தோஷத்தை நிவர்த்தி செய்தோம். நீ உன் சத்ய லோகத்தில் போய் உன் சிருஷ்டித்தொழிலை செய்து கொண்டிரு என்று சொல்லிவிட்டு அந்த சிவலிங்கத்தில் மறைந்தருள, பின்பு பிரும்மா அந்த பட்டணத்துக்கு பெருநகர் என்றும், அந்த சிவலிங்கத்துக்கு பிரும்மேசுவரர் என்றும் பேர் வைத்து தன் சத்யலோகத்தில் போய் முன்போல் சிருஷ்டித்தொழிலை செய்து கொண்டு இருந்தார். அந்த பிரும்மேசுவரரை மனதால் நினைத்தவர்களும், நமஸ்கரித்தவர்களும் தேவலோகத்தில் போய் வாழ்வார்கள். அந்த பெருநகருக்கு மேற்கு பக்கத்தில் அதைக் குரோசதூரத்தில் சகடவியன் என்கிற ஒரு ரிஷியானவர் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து தடாகம் உண்டாக்கினார். அந்த ஜலமானது இளநீரைப் போலிருப்பதால் அதற்கு வாயு மூலையில் முன்னொரு காலத்தில் தேவேந்திரன் வெள்ளை யானை வந்து ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து இந்திரனுக்கு வாகனமாயிற்று. அந்த வூருக்கு அத்தி நகரமென்று பேராயிற்று.

**பிரமன் சாபம் தீர்த்த சருக்கம் முற்றும்**

## 13. சந்திரன் பேறு பெற்றச் சருக்கம்

இந்த பிரகாரமாக பிரும்மாவின் சாபம் தீர்த்த சரித்திரத்தை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டு சந்தோஷமடைந்து பின்பு சூதபுராணிகரைப் பணிந்து சந்திரன் பாபம் தீர்த்துக்கொண்ட சரித்திரத்தை சொல்லவேணுமென்று

கேட்க சூதமஹரிஷி சொல்லுகிறார். கேளுங்கள் முனிசுவரர்களே-முன்னொரு காலத்தில் சந்திரனானவன் குருபகவான் மனைவியுடன் சேர்ந்து சந்தோஷித்து பின்பு அப்படி தான் செய்ததை பாபம் என்று அறிந்து திருவோத்தூரில் வந்து சேய்நதியான கந்த நதியில் மூழ்கி விபூதித்தரித்து பஞ்சாட்சரம் ஜெபித்து கோவிலில் போய் வேதபுரீசுவரரை தேவாமிருதத்தால் பூஜை செய்ய வேதபுரீசுவரரானவர் அவன்மேல் மனசு வைத்து உமாதேவியோடும் ரிஷபவாகனத்தின் மேல் எழுந்தருளியாகி வந்து காட்சி கொடுக்க, அப்போது சந்திரனானவன் பலவாறு ஸ்தோத்திரம் செய்ய வேதபுரீசுவரரானவர் சந்திரனைப் பார்த்து, நீ குருவின் பத்தினியுடன் சேர்ந்த தோஷத்தைப் போக்கினோம். நீ ஆகாசத்தில் போய் நட்சத்திரங்களுக் கெல்லாம் தலைவனாக இரு என்று கட்டளை இட்டு சிவலிங்கத்தில் மறைந்தார். பின்பு சந்திரனானவன் அந்த வேதபுரிக்கு நிருதிமூலையில் போய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து மோட்சம் அடைந்தான்.

**சந்திரன் பேறுபெற்றச் சருக்கம் முற்றும்.**

## 14. மன்மத தகனச் சருக்கம்

இந்தப்படி சந்திரன் பாபம் தீர்த்த சரித்திரத்தை நைமிசாரணிய முனிவர்கல் கேட்டு சந்தோஷம் கொண்டு சூதமுனிவரைப் பார்த்து நமஸ்கரித்து ரதி தேவியானவள் வேதபுரீசுவரரை பூஜை செய்த சரித்திரத்தை சொல்ல வேண்டுமென்று சொல்ல சூதமஹரிஷி சொல்லுகிறார். கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே பாஸ்கரக்ஷேத்ரம், என்கிற திருவோத்தூருக்கு தெற்கே ஒரு குரோச தூரத்திலே மன்மதனை எரித்த கோவலூர் என்று ஒரு நகரம் இருக்கிறது.

அதில் கைலையங்கிரியில் இருக்கின்ற சிவபிரான் வந்து தவம் செய்திருந்தார். அப்போது மன்மதனானவன் அவர் முன்னே போய் நின்று அவர்தவம் செய்வதைப் பார்த்து மனதில் கிலேசம் கொண்டு பின்பு தீரம் கொண்டு கரும்பு வில்லைவலைத்து நாணேற்றி சிலபாணங்களை விட்டு சரங்கூடங்கட்டி, பரமசிவன்மேல் புஷ்பபாணம் போட்டான். அப்போது பரமசிவனானவர் மன்மதன் வந்து கபடமாய் பாணம் போட்டானென்று ஞானதிருஷ்டியால் அறிந்துதன் நெற்றிக் கண்ணைத் திறந்து அவனைப் பார்க்க அவன் வெந்து கரிந்து சாம்பலானான்.

அப்போது தேவர்கள் போய் பரமசிவனை வேண்ட பரமசிவன் கொஞ்சம் கோபம் தணிந்தார். அப்போது ரதிதேவி மன்மதன் எரிந்துபோனதை அறிந்து மார்பில் அடித்து அழுது கொண்டுபோய் அந்தப் பரமசிவனை நமஸ்கரித்து பலவிதமாக தோத்தரித்து வேதபுரியில் போய் பரமசிவனை பலவாறாக தோத்திரம் செய்து தன் புடவை முந்தானையை அவிழ்த்து கையால் அதைப் பிடித்துக் கொண்டு விரித்து எனக்கு மாங்கல்யபிக்ஷை கொடுக்க வேண்டுமென்று கேட்க பரமசிவன் அவளைப் பார்த்து நீ ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து பூஜித்தால் நீ உன் மன்மதனைச் சேர்ந்து வாழ்வாய் என்று சொல்ல ரதி தேவி அந்தப்படிக்கே பரமசிவனை அநேக நாள் பூஜித்தாள்.

அப்போது பரமசிவன் உமா தேவியுடன் ரிஷப வாகனத்தின் மேல் வந்து நின்று அவளைப் பார்த்து மன்மதன் உலகத்தார் கண்ணுக்கு சரீரமில்லாதவனாயும் உன்கண்ணுக்கு மாத்திரம் சரீரமுள்ளவனாயிருந்து உன்னைச் சேர்ந்து வாழுவான் என்று சொல்ல மன்மதன் சரீரம் பெற்று வந்தான். தேவர்கள் யாவரும் அந்தப் பரமசிவனைப் பணிந்து

கொண்டாடி மகிழ்ந்தார்கள். பின்பு மன்மதன் பரமசிவனிடத்தில் உத்திரவு வாங்கிக் கொண்டுதன்னிடம் போய்ச் சேர்ந்தான். பரமசிவனும் லிங்கத்தில் கலந்தார். ரதிதேவி வைத்து பூஜை செய்த லிங்கத்துக்கு கைலாசநாதர் என்று பேராயிற்று.

## 15. அருணன் பாவம் தீர்த்த சருக்கம்

இந்தப் பிரகாரம் மன்மதனைத் தகித்த சரித்திரத்தை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டுச் சந்தோஷமாகி சூதரை நமஸ்கரித்து சூரியனின் தேர்பாகனானவன் வேதபுரியில் போய் தன் பாவத்தைத் தீர்த்துக்கொண்ட கதையைச் சொல்லவேண்டுமென்று கேட்க சூகமஹரிஷியானவர் சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே முன்னொரு நாளிலே தேவலோகத்திலே தேவேந்திரன் தன் சிம்மாசனத்தின்மேல் வீற்றிருந்து கொண்டு ரம்பை முதலான தேவதாசிகள் பரதநாட்டியம் ஆடியதைச் சந்தோஷத்துடன் பார்த்துக்கொண்டு இருந்தான். அப்போது எப்போதும்போல் சூரியனானவன் அந்த வழியாய்ப் போக சூரியனுடைய தேர்ச்சாரதியான அருணன் அந்த தேவதாசிகள் ஆடுகிற நாட்டியத்தைப் பார்த்து மனது மயங்கி தேரோட்டுவதை மறந்திருக்க அந்தத் தேரானது போகாமல் நின்று விட்டது. அப்போது சூரியன் அருணனைப் பார்த்து உனக்கு இப்படி மனமயக்கம் வந்த காரணம் என்ன என்று கேட்க அதற்கு அவன் இங்கே தேவதாசிகளின் நாட்டியத்தைப் பார்த்து மனது மயங்கிற்று. இப்பவும் நான் போய் அதைப் பார்த்தால் அல்லாமல் என் மன மயக்கம் நீங்காதென்று சொல்ல சூரியன் அதைக் கேட்டு அருணனை அந்த இடத்துக்குப் போகும்படி

அனுப்பினான். அந்த அருணன் அழகுள்ள ஒரு பெண் ரூபம் எடுத்துக்கொண்டு தேவேந்திரன் சபையில் போய் பரதநாட்டியங்களை பார்த்துக்கொண்டு இருக்கும்போது தேவேந்திரன் இந்த அருணன்மேல் மோகித்து அழைத்துக்கொண்டு ஒரு வீட்டில் போய் சம்போகிக்க அப்போது அந்த அருணன் வயிற்றில் வாலி பிறந்தான்.

பின்பு அந்த அருணன் முன்போல் தன் ரூபம் எடுத்துக்கொண்டு சூரியனிடத்தில் போய் தான் பெண்ணுருவமாகினதும் தன்னை தேவேந்திரன் கூடினதும், வாலி பிறந்ததும், சொல்ல சூரியன் அருணனை முன் எடுத்த ஸ்திரீ ரூபத்தை எடுக்கச் சொல்லி அவனைப் பார்த்து மோஹிக்க சுக்கிரன் பிறந்தான். பின்பு அந்த அருணன் முன்போல் தன் புருஷரூபம் எடுத்துதான் இந்திரனையும் சூரியனையும் சேர்ந்ததால் வந்த பாவங்களை அறிந்து சூரியனை நமஸ்கரித்து நான் தேவேந்திரனையும், உன்னையும் சம்போகம் செய்த பாவமானது விமோசனம் செய்யும் விதத்தை சொல்ல வேண்டுமென்று கேட்க அதற்கு சூரியனான நீ திருவோத்தூரில் போய் வேதபுரீச்வரரைப் பூஜித்தால் இந்த பாவம் நிவாரணமாகும் என்று சொல்ல அருணன் அப்படியே திருவோத்தூரில் போய் சேயாற்றில் முழுகி திருக்கோவிலில் போய் வேதபுரீச்வரரை விதிப்படி பக்தியாய் பூஜைசெய்து பலவாறாக தோத்திரம் செய்தான்.

அப்போது அந்த வேதபுரீசுவரர் அன்புண்டாகி அவனைப்பார்த்து நீ செய்த பூஜையை அங்கீகரித்தோம். இந்த ஊருக்கு நிருதிமூலையில் அரை நாழிகை வழிதூரத்தில் ஒரு பெருங்காடு இருக்கிறது. அதில் நீபோய் ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து அதை பக்தியாய் பூஜித்தால் நீ செய்த பாபம் நீங்கி சுகப்படுவாய் என்று சொல்ல அவன் அப்படியே

அந்தக் காட்டிற்குப் போய், அந்த காட்டை வெட்டிப் போட்டு வெளியாக்கி அங்கே ஒரு ஊரும், தடாகமும் உண்டாக்கி, அந்த தடாகத்தில் முழுகி, ஒரு சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்து அதை பூஜை செய்து பலவாறாக தோத்திரம் செய்தான். அப்போது பரமசிவனானவர் உமாதேவியுடன் ரிஷப வாஹனத்தின் மேல் வந்து நின்று நீ செய்த பாவத்தை நிவர்த்தி செய்வோம். இனிமேல் நீ சூரியனிடத்தில் போய் முன்போல் உன் சாரதித் தொழிலை செய்துகொண்டு இரு என்று சொல்லிவிட்டு அந்தச் சிவலிங்கத்தில் கலந்தருள அவன் சூரியனிடத்தில் போய் முன்போல் தன் சாரதித்தொழிலை செய்துகொண்டு இருந்தான். அந்த ஊரை செங்காடென்று சொல்லுகிறார்கள். அந்த லிங்கத்தை அருண நாயகனென்று சொல்லுகிறார்கள்.

முற்றும்

## இந்திரன் சாபம் தீர்த்த சருக்கம்

இந்த விதமாக அருணன் சாபம் தீர்த்த சரித்திரத்தை நைமிசாரணிய முனிவர்கள் கேட்டு சந்தோஷமாகி சூத மஹரிஷியை நமஸ்கரித்து இந்திரன் சாபம் தீர்த்த சரித்திரத்தை சொல்ல வேணுமென்று கேட்க சூத மஹரிஷி செல்லுகிறார்.

கேளுங்கள் முனிக்கூட்டங்களே தேவேந்திரன் ஒரு நாள் ஒரு காட்டில் போய் கௌதமர் மனைவியான அகலிகையைப் பார்த்து மோகித்து அதிக காமவிகாரமாகி அன்றைய ராத்திரி நடுநேரத்தில் அந்த கௌதம ரிஷியின் ஆசிரமத்தின் பக்கத்தில் போய் கோழியைப் போலவே கூப்பிட, அப்போது அந்த கௌதமரானவர் எழுந்து நித்யகர்மம் முடிப்பதற்காக நதிக்குப்போனார். அப்போது இந்திரனானவன் அந்த கௌதம ரிஷியைப் போல ரூபமெடுத்துக்கொண்டு போய்

அகலிகையை சம்போகம் செய்தான். இவன் இப்படி இருக்கும்போது முன்னே நதிக்குப் போன கௌதமரானவர், நதியில்போய் கங்கைநதி எழுந்திருக்கவில்லை என்றும், கோழிபோல கூவினது இந்திரன் என்றும் ஞானதிருஷ்டியால் அறிந்து சீக்கிரமாய் திரும்பி தன் ஆசிரமத்தில் வந்து நடந்த வகையை அறிந்து இந்திரனைப் பார்த்து நீ ஒரு யோனிக்கு ஆசைப்பட்டு வந்ததால் உன் உடம்பிலும் ஆயிரம் யோனியுண்டாகக் கடவது என்று சாபம் கொடுத்தார். அப்படியே அப்போது இந்திரன் சரீரத்தில் ஆயிரம் யோனியுண்டாக இந்திரன் தேவலோகத்துக்குப் போக வெட்கப்பட்டு ஒரு தாமரைக் கொடிக்குள் நுழைந்து வெகுநாள் இருந்தான். அப்போது, குருவும், தேவர்களெல்லாம் தேவேந்திரனை காணாமல், அந்த தாமரைக் கொடியில் இருப்பதை அறிந்து அங்கே போய் அவனைப் பார்த்து இந்த யோனிகள் என்ன செய்தால் போகுமென்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு இருந்தார்கள். அப்போது குருபகவானானவர் திருவோத்தூரில் போய் வேதபுரீசுவரரைப் பூஜை செய்தால் போகும் என்று சொல்ல இந்திரன் அந்தப்படிக்கே திருவோத்தூரில் போய் செய்நதியில் முழுகி கோவிலுக்குப் போய் வேதபுரீசுவரரைப் பூஜை செய்தான்.

அப்போது பரமசிவன் உமாதேவியுடன் ரிஷபத்தின் மேல் வந்து நின்றார். அப்போது அவன் தனக்கு கௌதமர் கொடுத்த சாபத்தை தீர்த்தருள வேண்டும் என்று சொல்லி பலவாறாக தோத்திரம் செய்ய பரமசிவன், அதற்கு உன் சரீரத்தை பார்க்கிறவர்கள் கண்களுக்கு ஆயிரம் கண்களாய் இருக்கும்படியாக வரம் கொடுத்தோம். நீ இந்த ஸ்தலத்தில் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய் என்று சொல்ல அவன் அப்படியே அந்த ஊருக்கு கிழக்கே அரைகுரோச தூரத்தில்

போய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து தேவலோகம் போய்ச் சேர்ந்தான். அந்த லிங்கத்திற்கு இந்திரேச்சுவரரென்று பேராயிற்று. இன்னம் முன் ஒரு காலத்தில் அந்த இந்திரன் வேதபுரியில் வந்து வேதபுரீசுவரரைப் பூஜை செய்து தனக்கு வந்த பிரும்மஹத்தி தோஷத்தை நீக்கிக்கொண்ட கதையைச் சொல்லுகிறேன் கேளுங்கள் அது எப்படி என்றால் முதல் திரேதாயுகத்திலே தேவேந்திரன் ஒருநாள் கொலு வீற்றிருக்கும்போது ரம்பை முதலானவர்களால் ஆடப்பெற்ற பரதநாட்டியத்தைப் பார்த்து மயங்கி இருந்தான். அந்த சமயத்தில் குருபகவான் அங்கே வர அவரை அந்த இந்திரன் பார்க்காமல் நாட்டியத்தின்மேலே கண்ணியிருக்க அப்போது குரு பகவான் அவன்மேல் கோபம் கொண்டு அதைவிட்டு அப்பால் போய் மறைந்திருந்தார். தேவேந்திரன் பரதநாட்டியம் பார்த்தான். பின்பு குருபகவான் அங்கே வந்து போன செய்தி கேட்டு நமக்கு குரு நிந்தனை கிடைத்ததென்று மனதில் எண்ணிக்கொண்டு இருந்தான். அப்படி இருக்கும்போது ராக்ஷஸ கூட்டங்கள் இந்திரன் மேல் சண்டைக்குவர இந்திரனானவன் மனம் கலங்கி சத்ய லோகத்தில் போய் பிரும்மாவை நமஸ்கரித்து ராக்ஷஸர்களை தன்மேல் சண்டைக்கு வந்ததையும் - தான் அவர்களுக்கு பயந்து ஓடி வந்து விட்டதையும் மெதுவாய் அவரிடம் சொன்னான்.

அதற்கு அவர் அவனைப் பார்த்து நீ உன் குருவுக்கு செய்த மனக்குறைவால் உன் மனசு தளர்ந்து பயந்து வந்ததேயல்லாமல் மற்றொன்றால் வந்ததல்ல. ஆகையால் த்வஷ்டா புத்திரரான விஸ்வரூபரை நீ குருவாய் வைத்துக்கொண்டு அவரைப் பணிந்து ஆசிர்வாதம் பெற்றால் ராக்ஷஸர்களை ஜயிக்கும்படியான விதமும் உனக்கு பெருமையும் உண்டாகுமென்று சொல்ல, தேவேந்திரன்

பிரும்மா சொன்ன வசனப் படிக்கு விஸ்வரூபரைப் போய் அழைத்து வந்து தனக்கு குருவாக வைத்துக் கொண்டான். அப்போது அந்த விஸ்வரூபன் இந்திரன் வைத்திருந்த வஜ்ராயுதத்தை வாங்கி அதற்கு மந்திரம் ஏற்றி பலமுண்டாக்கிக் கொடுக்க அதை இந்திரன் வாங்கிக்கொண்டு போய் அந்த ராக்ஷஸர்களை எல்லாம் ஜெயித்து வெற்றி மாலை தரித்தான். இன்னமும் இருக்கிற என் சத்துருக்கள்சூலம் நாசமாகும்படி ஒரு யாகம் செய்ய வேணுமென்று சொல்ல அப்படியே அந்த விஸ்வரூபன் யாகம் செய்து தனக்கு ராக்ஷஸர்கள் அம்மான் வம்சமாகையால் அவர்கள் மேல் பாசம் வைத்து அக்னிக்கு அவிர்ப்பாகம் கொடுக்கும்போது ராக்ஷஸர்களுக்கு பலமுண்டாகக் கடவதென்று அக்னிக்கு அவிர்பாகம் கொடுக்க அதை இந்திரன் அறிந்து கோபித்துஅந்த விஸ்வரூபன் தலையை வஜ்ராயுதத்தால் வெட்டினான். அப்போது அந்த பிரும்மஹத்தி தோஷமானது இந்திரனை சுற்றிக்கொள்ள -அதனால் அவன் ஆகாரம் விட்டு, அறிவும் கெட்டு குருபகவானை நினைத்து ரொம்பவும் பக்தியாய் மனதில் நினைத்து தோத்திரம் செய்தான். அதை அவர் அறிந்து அவன் மேல் கோபத்துடன் வர அப்போது இந்திரன் அவர் பாதத்தில் தீர்க்க தண்டமாய் விழுந்து நமஸ்காரம் செய்து பலவாறாக தோத்தரித்து அவர் கொண்டிருந்த கோபத்தைத் தணித்தான்.

அப்போது அவர் இந்திரன்மேல் தயவு வைத்து அவனிடத்தில் சேர்ந்த பிரும்மஹத்தி தோஷத்தை நாலுபங்காக்கி பூமியில் ஒரு பங்கும் ஜலத்தில் ஒரு பங்கும் மரத்தில் ஒரு பங்கும் ஸ்திரீகளிடத்தில் ஒரு பங்கும் ஆக இந்தப்படி போகவிட்டு தேவேந்திரனை சுகமாய் இருக்கும்படி செய்ய அப்படியே அவன் சுகமாய் இருந்தான். இவன் இருக்கும் போது முன் சொன்ன விஸ்வரூபன்

தகப்பனானவர் இந்திரன்மேல் கோபங்கொண்டு மலைச்சாரலில் போய் ஒரு யாகம் செய்ய அதில் மஹாபராக்ரமத்துடன் விருத்ராசுரன் என்று ஒரு ராக்ஷஸன் பிறந்தான். அவனை விஸ்வரூபன் பார்த்து நீ போய் தேவேந்திரனை ஜெயித்துக்கொண்டு வாவென்று சொல்ல விருத்திராசுரன் அநேக ராக்ஷஸ கூட்டங்களை சேர்த்துக்கொண்டு போய் இந்திரனுடன் பிரபல யுத்தம் செய்ய இந்திரன் பயப்பட்டு தன் சரீரத்தில் பட்ட ஆயுதத்துடன் திரும்பி சத்யலோகத்தில் போய் பிரும்மாவை நமஸ்கரித்து இந்த செய்திகளை எல்லாம் சொன்னான். அவர் அவற்றைக் கேட்டு தேவேந்திரனை அழைத்துக்கொண்டு வைகுண்டம் போய் விஷ்ணுவுடன் இந்த செய்திகளை எல்லாம் சொல்ல அதற்கு அவர் இந்திரனைப் பார்த்து முன்னே நாம் திருப்பாற்கடல் கடைந்தபோது தேவர்கள் கையில் வைத்திருந்த ஆயுதங்களை எல்லாம் ததீசி முனிவர் கையில் கொடுத்தோம். அவற்றை எல்லாம் அவர் சாப்பிட அது அவருடைய முதுகுத்தண்டு எலும்புடன் சேர்ந்திருக்கிறது. நீ அந்த முனிவரிடத்தில் போய் அவருடைய முதுகுத் தண்டெலும்பை வாங்கி அதை வஜ்ராயுதமாக்கி அதனால் விருத்திராசுரனை ஜெயிப்பாய் என்று சொல்ல அதைக் கேட்டு பிரும்மா இந்திரன், இந்த இரண்டுபேரும் முன் சொன்ன ததீசி முனிவரிடத்தில் போய் அவரை நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்து விஷ்ணு சொல்லி அனுப்பிய செய்தியையும், அதற்கு முன் தேவேந்திரனானவன் விருத்திகாசுரனுக்கு பயந்து வந்ததையும் சொல்ல அவர் ஒரு யாகம் செய்து அதில் தன் சரீரத்தை விட்டு கைலாயம் போய்ச் சேர்ந்தார்.

பின்பு இந்திரன் அந்த முனிவருடைய முதுகெலும்பை எடுத்து வஜ்ராயுத மாகச் செய்துகொண்டுபோய் முன் சொன்ன விருத்திகாசுரன் மேல் விட்டான். அந்த பாதையை அவன்

பொறுக்காமல் ஓடிப்போய் சமுத்திர ஜலத்தில் வீழ்ந்து அதற்குள் ஒளிந்துகொண்டான். பின்பு இந்திரன் அந்த விருத்திராசுரனை எங்கும் தேடிக் காணாமல் பின்பு சமுத்திரத்தில் போய் ஒளிந்துகொண்டானென்று தெரிந்து சத்ய லோகத்தில் போய் பிரும்மாவை நமஸ்கரித்து நடந்த விருத்தாந்தங்களைச் சொல்ல அதற்கு பிரும்மா அகஸ்திய முனிவரைக் கொண்டு சமுத்திர ஜலத்தைச் சாப்பிடச் செய்தால் விருத்திராசுரன் அகப்படுவான் என்று சொல்ல இந்திரனானவன் அகஸ்தியரைப்போய் நமஸ்கரித்து இந்த சங்கதிகளை எல்லாம் சொல்லி சமுத்திர ஜலத்தை சாப்பிடும்படியாக வேண்டினான்.

அதை அவர் கேட்டு சமுத்திரத்தில் உள்ள ஜலம் முழுவதையும் கையால் மொண்டு உளுந்து பிரமாணம் திரட்டிக் குடித்தார். அப்போது இந்திரனானவன் திருவோத்தூரில் வந்து வேதபுரீசுவரரைப் பூஜை செய்து தனக்கு வந்த பிரும்மஹத்தி தோஷத்தை தீர்த்துக்கொண்டு தேவலோகம் போய் சுகமாய் இருந்தான். முன்னே சமுத்திர ஜலத்தை அகஸ்தியர் குடித்து பின்பு தன் பீஜத்தால்அந்த ஜலத்தை சமுத்திரத்தில் விட்டார். அதை தேவர்கள் எல்லாம் பார்த்து சமுத்திர ஜலம் அசுத்தமென்று பழிக்க அப்போ அகஸ்தியர் நமக்கு பாவம் வந்ததென்று நினைத்து வியஸனம் அடைந்து திருவோத்தூரில் போய் சேயாற்றில் முழுகி வேதபுரீசுவரரை வெகுநாள் பக்தியுடன் பூஜை செய்து பலவாறாக தோத்திரம் செய்ய அப்போது பரமசிவன் ரிஷபத்தின்மேல் வந்து நின்று தேவர்களைப் பார்த்து அகஸ்தியர் கோசத்தில் விட்ட இந்த சமுத்திர ஜலமானது வருஷம்தோரும் வருகிற புண்ணிய காலங்களிலும், மாசம்தோறும் வருகிற பஞ்சபர்வ தினங்களிலும் இந்த தீர்த்தம் புண்ணிய தீர்த்தமாய் இருக்கக் கடவதென்றும், அந்த

நாளில் அதில் முழுகினவர்களுக்கும் மேலான புண்யபலன் என்றும் இந்தபடியாக வரங்கொடுத்து விட்டு சிவலிங்கத்தில் கலந்தார். பின்பு அந்த அகஸ்தியரானவர் அந்த ஸ்தலத்திலேயே ஒரு சிவலிங்கம் வைத்து பூஜித்தார். அப்பால் அந்த வேதபுரிக்கு மேற்கே ஒரு குரோச தூரத்தில் போய் ஒரு சிவலிங்கம் வைத்து அநேக வருஷகாலம் பூஜை செய்திருந்தார்.

**முற்றும்**

## 16. இராகவன் பாவம் தீர்த்தச் சருக்கம்

இந்தப் பிரகாரம் நைமிசாரண்ய முனிவர்கள் இந்திரன் சாபம் தீர்த்த கதையைக் கேட்டு சந்தோஷமாகி எழுந்திருந்து சூதமஹரிஷியை நமஸ்கரித்து தோத்திரம் செய்து, ஸ்ரீராமமூர்த்தியார் பாவம் தீர்த்தகதையை சொல்ல வேண்டுமென்று கேட்க சூதமகரிஷி செல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரணிய முனிவர்களே, கோசல தேசத்திலே, அயோத்தியாபுரிபட்டணத்திலே ராஜாக்களுக் கெல்லாம் மேன்மையாய் தசரதமஹாராஜன் என்று ஒரு ராஜா இருந்தான். அவனுக்கு வெகுகாலம் புத்திரன் இல்லாமல் இருந்தது. அப்போது அவன் புத்திர காமேஷ்டியாகம் செய்து நான்குப் பிள்ளைகளைப் பெற்றான். அதில் மூத்த குமாரனான ஸ்ரீராமன் தன் சிறிய தாயாரான கைகேயி சொல்படிக்கு தன் தம்பி லக்ஷ்மணனுடனும், தன் மனைவி சீதையுடனும் புறப்பட்டு காட்டிற்குப்போய் பதினான்கு வருஷகாலம் சஞ்சாரம் செய்திருந்தான். அப்போது லங்காபுரியில் இருந்த ராவணன் திருட்டுத்

தனமாய் சன்யாசிவேஷம் தரித்துக்கொண்டு வந்து சீதையைக் கொண்டு போய் தன் பட்டணத்தில், அசோக வனத்தில் வைத்துக் கொண்டான். அப்போது ஸ்ரீராமன் சீதையை எங்கும் தேடிக்காணாமல், சுக்ரீவனை ஸ்நேகங்கொண்டு, அவன் தமையனான வாலியைக் கொன்று சமுத்திரத்தில் அணைகட்டி லங்கையில் போய் ராவணனைக் கொன்று திரும்பி அயோத்தியாபுரிக்குப் போகும் போது முன்னே அவர் வாலியைக் கொன்ற பாவமானது பலதுன்பங்களைச் செய்தது. அதற்கு அவர் நாம் இதற்கு என்ன செய்யலாம் என்று நினைத்திருக்க அதை ஜாம்பவந்தன் அறிந்து ஸ்ரீராமரைப் பார்த்து சொல்லுகிறார், கேளும் ஸ்ரீராமசுவாமியே, உம்மைச் சேர்ந்த பாவம் தீரும் விதத்தைச் சொல்கிறேன், என்னவென்றால், திருவோத்தூர் என்று ஒரு சிவஸ்தலம் இருக்கிறது. அதில் பிரும்மா, விஷ்ணு, இந்தின், சந்திரன், சூரியன் ஆகிய இவர்களெல்லாம் அந்த ஸ்தலத்தில் போய் அங்கே இருக்கிற வேதபுரீசுவரரை பூஜை செய்து, அவர்கள் செய்த பாவத்தைத் தீர்த்துக்கொண்டு அவர்களுக்கு வேண்டிய வரங்களையும் வாங்கிக் கொண்டார்கள்.

அந்த ஸ்தலத்துக்கு சரியான ஸ்தலம் எங்கேயும் இல்லை. ஆகையால் நீர் அந்த ஸ்தலத்திற்குப் போய் வேதபுரீசுவரரைப் பூஜித்தால் இந்த பாபம் போகும் என்று சொல்ல ஸ்ரீராமரானவர் அந்த வேதபுரியில் போய் வேதபுரீசுவரரைப் பூஜை செய்து ஸ்தோத்திரம் செய்தார். அப்போது அந்த வேதபுரீசுவரரானவர் ரிஷப வாகனத்தில் வந்து நின்று, ராமரைப் பார்த்து நீர் வாலியைக் கொன்ற பாவத்தை தீர்த்தோம். நீ இங்கே ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்துவிட்டு அயோத்தியாபுரி போய் சேர். அந்த

லிங்கத்துக்கு ராமலிங்கம் என்று பெயராயிற்று. அந்த லிங்கத்தை பூஜை செய்தவர்களும், பணிந்தவர்களும், ராஜாவாய்ப் பிறந்து ஊழ்வினையைத் துலைத்து சுகம் அனுபவிப்பார்கள். இந்தச் சிவலிங்கத்துககு மேற்குப் பக்கத்தில் அனுமந்தேஸ்வரர் என்று ஒரு சிவலிங்கம் ஒன்று இருக்கிறது. அதை பூஜித்து வணங்கியவர் சம்பத்தை அடைந்து சுகமாய் இருப்பார்கள். இந்த அனுமந்த லிங்கத்திற்கு தெற்கே இரண்டு குரோச தூரத்தில் அகஸ்திய முனிவரானவர் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜித்து பின்பு அதை சுக்ரீவன் பூஜித்து சுகம் அடைந்தான்.

**முற்றும்**

## 17. பராசரர் வேள்விச் சருக்கம்

இந்தப் பிரமாகரமாக ஸ்ரீராமர் பாவம் தீர்த்த சரித்திரத்தை நைமிசாரணிய முனிவர்கள் கேட்டு அதிக சந்தோஷமாகி எழுந்து சூதமஹரிஷியைப் பணிந்து தோத்தரித்து முன்னே நீர் வேதபுரியில் பராசரமுனிவர் செய்த பாவத்தை தீர்த்துக்கொண்டு உயர்ந்த பதவியை அடைந்தாரென்று குறிப்பாய் சொன்னீர்களே. அதை இப்போது எங்களுக்கு நன்றாக விரிவாய் சொல்ல வேண்டுமென்று கேட்க, சூதமுனிவர் சொல்லுகிறார்.

கேளுங்கள் முனிவர்களே முன்காலத்திலே காசி க்ஷேத்திரத்தில் கங்கா நதிக்கரையிலே ரிஷிகளெல்லாம், சேர்ந்து, சிவஸ்தலங்களின் பெருமையை பேசிக்கொண்டு இருந்தார்கள். அப்போது அகஸ்தியரிஷி பராசர ரிஷியைப் பார்த்து பூமியிலே கயிலயங்கிரிக்கும் மிகுந்ததாய் வேதபுரி என்று ஒன்று இருக்கிறது. அதில் இருக்கிற வேதபுரீசுவரரை

முன் காலத்திலே சூரியன் பூஜித்து கிரகங்களுக்கெல்லாம் முதல் கிரஹமானான். அந்த ஸ்தலத்துக்கு பாஸ்கர க்ஷேத்திரம் என்று சொல்லுவார்கள். அந்த ஸ்தலத்தின் மகிமையை இவ்வளவு என்று எவர்களாலும் சொல்ல முடியாது. சீக்கிரத்தில் பலன் கொடுக்கப்பட்டது. அந்த ஸ்தலமல்லாமல் வேறு கிடையாது என்று அகஸ்தியர் சொல்ல அதைப் பராசரர் கேட்டு அதை விட்டுப் புறப்பட்டு திருவோத்தூருக்கு வரும்போது மத்தியில் யமுனாநதியைப் பார்த்து அதில் படகு விட்டுக் கொண்டிருக்கிற மச்சகந்தியைப் பார்த்து மோஹித்து நீ என் மோஹத்தைத் தீர்த்ததால் உன் வயிற்றில் நகுலகுமாரன் பிறப்பான் என்று சொல்லி பின்பு அவளை சம்போகம் செய்ய அவள் வயிற்றில் வியாசர் பிறந்தார். பின்பு அந்த பராசர முனிவரானவர் அந்த வியாசரை அழைத்துக் கொண்டு திருவோத்தூரில் வந்து வேதபுரீசுவரரை பக்தியாய் பூஜை செய்ய அப்போது அந்த பரமசிவனானவர் அவரைப் பார்த்து உனக்கு என்னவரம் வேண்டுமென்று கேட்க அதற்கு பராசரரானவர் நான் மச்சகந்தியுடன் சேர்ந்த பாவத்தை நிவர்த்தி செய்து என்னை ஆட்கொள்ள வேண்டுமென்று கேட்டார். அப்போது பரமசிவன் அவரைப் பார்த்து இந்த வேதபுரியில் ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து அதை பூஜை செய்தால் நீ செய்த பாபம் விமோசனம் ஆகும் என்று சொல்ல- அவர் முன்னே அகஸ்தியர் வைத்து பூஜித்த சிவலிங்கத்துக்கு நிருதி மூலையில் அரை குரோச தூரத்தில் போய் ஒரு திருக்கோவில் கட்டி அதற்கு ஒரு சிவலிங்கத்தை வைத்து பூஜை செய்து கொண்டிருந்தார்.

அப்படி இருக்கும்போது ஒரு நாள் அந்தப் பரமசிவனானவர் அந்த ரிஷியின் மீது அன்பு வைத்து ரிஷபத்தின் மேல் வந்து காட்சி கொடுத்து நீ செய்த பாவம் தீர பழைய வழக்கப்படி ஒரு யாகம் செய் என்று சொல்லி விட்டு

அந்த சிவலிங்கத்துள் கலந்தார். பின்பு அந்தப் பராசர முனிவர் அந்த கட்டளைப்படி அங்கே யாகம் செய்ய அப்போது தேவபோகத்தில் இருக்கின்ற இந்திரன் குருபகவானை நமஸ்கரித்து எனக்கு மனதில் பயம் உண்டாகி இருக்கிறது.அது என்ன காரணத்தால் என்று தெரியவில்லை. குருபகவானானவர் அவனைப் பார்த்து திருவோத்தூரில் பராசரமுனிவர் போய் உன் சம்பத்தை அடைவதற்காக ஒரு யாகம் செய்கிறாரென்று சொல்ல - தன் ராட்சத சேவகர்களை அனுப்பி அந்த பராசரர் செய்த யாகத்தை அழித்து விட்டான்.

அப்போது அந்த ரிஷியானவர் கோபம் கொண்டு யாகத்தை நிறுத்தவே - அப்போது அவர்கள் அவரைப் பணிந்து பயந்து - கேளும் முனிசுவரரே - இது எங்கள் மனப்படி செய்யவில்லை. எங்களுக்கு நாயகனான இந்திரன் சொல்லியதைக் கேட்டு நடந்தோம். எங்கள் மேல் கோபிக்க வேண்டாம் தேவரீர் எங்களுக்கு கொடுத்த சாபம் எப்படிப் போகும் என்று கேட்க அதற்கு பராசர முனிவர் பார்த்து முருகக் கடவுள் பிராம்மண வம்சத்தில் பிறந்து சம்பந்தர் என்று பெயர் பெற்று இவ்விடத்தில் வந்து தரிசனம் கொடுப்பார். அப்போது அந்த சாபம் நீங்குமென்று சொல்லிவிட்டு அந்த யாகத்தை நிறைவேற்றி பின்பு இன்னும் அநேக யாகம் செய்து பின்பு வேதபுரீசுவரரைப் பூஜைசெய்து கைலையங்கிரிக்குப் போய் வாழ்ந்திருக்கிறார்.

அந்த பராசரர் பிரதிஷ்டை செய்த லிங்கத்திற்கு பராசரேசரென்று பெயர் சொல்லுகிறார்கள். அந்த சிவலிங்கத்தை பூஜித்தவர்களும், ஸ்தோத்தரித்தவர்களும், அந்த பராசரரைப்போல நன்மார்க்கம் அடைவார்கள். இந்தப் பராசரர் ஸ்தாபித்த சிவலிங்கத்துக்கு தெற்கே அரைக்குரோச தூரத்தில் ஒரு சிவலிங்கமூர்த்தி இருக்கிறது. அதுவந்த சரித்திரத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

அது எப்படியென்றால் முன் ஒரு காலத்திலே மூன்று ராட்சதர்கள் கூடி புறப்பட்டு ஸ்தலங்களில் எல்லாம் போய் அங்கே இருக்கிற சிவன் மகிமையை சோதித்துக் கொண்டு வரும்போது அவர்கள் வேதபுரியில் வந்து ஸ்வாமியைப் பணிந்து அதன் மகிமையை கேட்டறிந்து அந்த வேதபுரீசுவரரை பூஜிக்க அவர் ரிஷப வாஹனத்தின் மீது வந்து அவர்களுக்கு தரிசனம் கொடுத்து நீங்கள் முன்னே தேவர்களுக்கு துன்பம் செய்தீர்கள். அதனால் உங்களுக்கு பாபம் வந்தது. நீங்கள் இங்கே ஒரு ஆலயம் செய்து அதில் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்யுங்களென்று சொல்ல அவர்களில் ஒருவன் ரத்த கசிதமாக பொன்னினாலும், இன்னொருவன் வெள்ளியாலும், இன்னொருவன் செம்பினாலும் இந்தப்படி மூன்று பட்டணம் ஏற்படுத்தி அவற்றில் முன்சொன்ன வரிசையில் பேராயிற்று. அதை தரிசித்தவர்கள் உயர்ந்த வாழ்வை அடைந்து முக்தி அடைவார்கள்.

**முற்றும்**

## 19. ஆலமுண்ட சருக்கம்

இந்தப் பிரகாரமாக பராசரமுனிவர் செய்த யாக சரித்திரத்தை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டு சந்தோஷமாக எழுந்திருந்து சூதமஹரிஷியைப் பணிந்து வேதபுரீசுவரர் ஆலகால விஷத்தை சாப்பிட்ட சரித்திரத்தை எங்களுக்கு நன்றாகச் சொல்லவேண்டும் என்று கேட்க சூதமஹரிஷி சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே. முன் ஒரு காலத்திலே தேவர்கள் எல்லாம் சேர்ந்து மந்திரகிரியை எடுத்து

திருப்பாற்கடலில் மத்தாக நாட்டி, வாசுகி என்ற பாம்பை அதில் கயிறாகச் சுற்றி தேவர்கள் ஒரு பக்கமும், ராட்சதர்கள் ஒரு பக்கமுமாக அந்தக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு, திருப்பாற்கடலைக் கடைந்தார்கள்.

அப்போது வாலியானவன் அங்கே போய்ப் பார்த்து, தேவர்கள் அந்தக் கயிற்றைப் பிடித்து இழுக்க சக்தி இல்லாதவர்களாய் இருப்பதை அறிந்து அவர்கள் வருத்தப்பட்டுக்கொண்டு இருப்பதைப் பார்த்து அவர்களை அப்பால் போகச் சொல்லி தான் அந்தக் கயிற்றைப் பிடித்து இழுத்தான். அப்போது அதை இழுப்பதற்கு சரியாக ராக்ஷதர்கள் இழுக்கவில்லை. அந்த வாலியானவன், அந்த ராக்ஷதர்களையும் அப்பால் போகச் சொல்லி தான் அந்த பக்கத்துக் கயிற்றையும் பிடித்துக்கொண்டு வேகமாகக் கடைந்தான். இப்படியாக அவன் கடையும்போது அந்த வாசுகி சர்ப்பமானது மிகவும் வருத்தமடைந்து விஷத்தைக் கக்க அந்த விஷமானது அதிகரித்து ஆகாயம் வரைக்கும் வளர்ந்து மலைகளையும் மரங்களையும் எரித்துவிட்டு அதை தேவர்களும், ராக்ஷசர்களும் பார்த்து, பயப்பட்டு நடுங்கி பிரும்மாவிடத்திலே போய் இந்த செய்தியை சொன்னார்கள். அவர் அவர்களைப் பார்த்து நீங்கள் பரமசிவன் உத்திரவில்லாமல் கடைந்ததால் ஆலகால விஷம் உண்டாகி துன்பம்கொடுத்தது என்று சொல்ல அப்போது அவர்கள் பிரும்மாவைப் பணிந்து நாங்கள் செய்ய வேண்டிய காரியம் என்ன என்று கேட்க அதற்கு பிரும்மாவானவர் கைலாசம் காசி இந்த ஸ்தலங்களைக் காட்டிலும் இதற்கு மேலான ஸ்தலம் ஒன்று இருக்கிறது. அது என்னவெனில் திருவோத்தூர் என்னும் திருநாமம் உள்ளது.

அதில் சூரியன் முருகர் இவர் முதலானவர்கள் போய் சுவாமியைப் பூஜை செய்து வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொண்டார்கள். ஆகையால் நீங்கள் அந்த வேதபுரியில் போய் பரமசிவனை பூஜித்தால் ஆலகால விஷத்தைப் போக்கி அமிர்தத்தைப் புஜிப்பீர்கள் என்ற சொல்ல அவர்கள் திருவோத்தூருக்குப் போய் பரமசிவனை மிக அன்புடன் பூஜை செய்து பலவிதமாக தோத்திரம் செய்து இந்த ஆலகால விஷத்தைப் போக்கி எங்களை ரக்ஷிக்க வேண்டுமென்று நமஸ்கரித்தார்கள். அப்போது சுவாமியானவர் அவர்களைப் பார்த்து நீங்கள் சொன்னபடிக்கு செய்கிறோம். நீங்கள் இந்தஸ்தலத்தில் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்யுங்கள் என்று சொல்ல அவர்கள் அந்த ஸ்தலத்துக்கு மேற்கே ஒரு யோசனை தூரத்தில் போய் அங்கே ஒரு திருக்கோயில் கட்டி சூர்யப் பிரகாசம் போன்ற ஒரு சிவலிங்கத்தை வைத்து பூஜித்து தோத்திரம் செய்தார்கள்.

அப்போது பரமசிவனானவர் ரிஷபத்தின் மீது வந்து நின்று அந்த ஆலகால விஷத்தைத் தன் கையால் எடுத்து சாப்பிட்டு திருப்பாற்கடலில் இருந்து அமிர்தத்தை வருவித்து அவர்களுக்கு கொடுத்து அந்த சிவலிங்கத்தில் மறைத்தார். அந்த லிங்கத்திற்கு மணிகண்டேஸ்வரர் என்று பேரிட்டார்கள். அந்த சிவலிங்கத்திற்கு கிழக்கே ஒரு குரோச தூரத்தில் முன்னாளிலே முருகக் கடவுள் பூஜித்த சிவலிங்கம் ஒன்று இருக்கிறது. அதை பூஜித்தவர்கள் மிகுந்த சுகமும், அஷ்டமாசித்தியும் அடைவார்கள். அந்த சிவலிங்கத்தை சக்திபுரீசுவரர் என்று சொல்லுவார்கள். இதற்கு கிழக்கில் மூன்று அம்போடுகிற தூரத்தில் பரமசிவன் ஆலகால விஷத்தை பூஜித்தால் அங்கே தேவர்கள் ஒரு சிவலிங்கம்

வைத்து பூஜித்தார்கள். அதற்கு கைலாச நாதர் என்று பெயர். அந்த ஊருக்கு கருவநல்லூர் என்று பெயர். பராசரர் முதலான ரிஷிகள் வைத்து பூஜித்த லிங்கங்கள் கணக்கில் இல்லை.

முற்றும்

## 20. கந்தர்வன் சாபம் தீர்த்த சருக்கம்

நைமிசாரண்ய முனிவர்கள் சூதரைப் பணிந்து அந்த வேதபுரீசர் சரித்திரத்தை சொல்லுமென்று கேட்க அவர் சொல்லுகிறார் கேளுங்கள் முனிவர்களே. முன்னே பரமசிவன் ஆலகால விஷம் உண்ட இடத்தில் ஸ்தாபித்த சிவலிங்கத்திற்கு ஈசானியத்தில் மூன்று நாழிகை வழி தூரத்தில் ஒரு சிவலிங்கம் இருக்கிறது. அது உண்டான சரித்திரத்தை சொல்லுகிறேன் கேளுங்கள்.

அது எப்படி என்றால் முன் ஒரு காலத்தில் பிரும்மாவானவர் பரமசிவனைபக்தியுடன் பூஜை செய்திருந்தான். அவன் முன்னே துந்துபி என்கிற ஒரு கந்தர்வனானவன் அதை விட்டுப் போகாமல் அங்கேயே எந்நேரமும் இருந்து அந்த பிரும்மா பூஜை செய்வதற்கு கொண்டுவந்து வைத்திருந்த பூஷ்பத்தில் ஒரு புஷ்பத்தை அந்த பிரும்மாவுக்கு தெரியாமல் எடுத்து மூக்கில் வைத்து முகர்ந்தான். அதை பிரும்மா பார்த்து அவன் மீது கோபித்து அவனைப் பார்த்து நான்சுவாமிக்கு வைத்திருந்த பூவை எடுத்து நீ முகர்ந்ததால் நீ கழுதையாய்ப் பிறந்து மலர்களை புசிக்கக் கடவது என்று சாபம் கொடுத்தார். அப்போது அந்த துந்துபி என்கிற கந்தர்வனானவன் மிகவும் பயந்து பிரும்மாவைப் பார்த்து நமஸ்கரித்து தோத்திரம் செய்து நான்செய்த

பாவத்தைத் தீர்த்து ரட்சிக்க வேண்டும் என்று சொல்ல, அவனை பிரும்மா பார்த்து பரமசிவன் பொருளைத் திருடினவர்கள் நரகத்தைவிட்டு எப்போதும் நீங்காதிருப்பார்கள். ஆகையால் நீ செய்த பாவம் போவதற்கு ஒரு உபாயம் சொல்லுகிறேன்.

அது என்னவென்றால் நீ திருவோத்தூர் என்கிற ஸ்தலத்தில் போய் வேதபுரீசுவரரை பக்தியாய் பூஜைசெய்தால் நீ செய்த பாவங்கள் எல்லாம் நீங்கும் என்று சொல்ல,. அவன் அந்த வசனப்படி வேதபுரியில் போய் ஒரு சிவ லிங்கம் வைத்து பூஜை செய்தான். அப்போது பரமசிவன் ரிஷபத்தின் மீது வந்து நின்று அவனைப் பார்த்து நீ செய்த பாவத்தை நிவர்த்தி செய்தோம் என்று சொல்லிவிட்டு அந்த லிங்கத்தில் மறைந்தார்.

பின்பு அவன் பரிசுத்தனாகி தன் இடம் போய்ச் சேர்ந்தான். அந்த சிவலிங்கம் வைத்து பூஜை செய்த ஊருக்கு சோரவூரென்று பேர். அந்த லிங்கத்திற்கு கந்தர்வேசர் என்று பெயர். இந்தச்சரித்திரத்தை கேட்டவர்களும் இந்த லிங்கத்தை பணிந்தவர்களும் பாவம் நீங்கி சொர்க்கலோகம் அடைவார்கள். பிரும்மபுத்திரர் அந்த வேதபுரீசுவரர் மகிமையைக் கேள்விப்பட்டு அந்த ஸ்தலத்தில் போய் வேதபுரீசுவரரைப் பணிந்து முன்னே கந்தர்வன் வைத்த சிவலிங்கத்திற்கு கிழக்கே மூன்று நாழிகை வழிதூரத்தில் போய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜித்தார்.

அதற்கு நாதேசுரரென்று பெயர் சொல்லுவார். அந்த சிவலிங்கத்திற்கு ஈசானிய மூலையில் ஒரு குரோச தூரத்தில் தண்டேசனென்கிற ஒரு ரிஷிபோய் ஒரு சிவலிங்கம் வைத்து

பூஜிக்க, பரமசிவன் ரிஷபத்தின் மீது வந்து நின்று அவரைப் பார்த்து நீ செய்த பூஜைக்கு சரியாய் எவர்களும் நம்மை பூஜை செய்யவில்லை. ஆகையால் உன்மீது மிகவும் சந்தோஷித்தோம். நீ உன் மனதில் நினைத்ததை எல்லாம் நிறைவேற்றிக் கொடுக்கிறோம் என்று சொல்ல, அதற்கு அவர் உம்முடைய திருவடிகளில் நான் இடைவிடாமல் அன்புடன் இருக்கும்படியாய் வரம் கொடுக்க வேண்டும் என்று சொல்ல சுவாமி அவனுக்கு அப்படியே வரம் கொடுத்து விட்டு அந்த சிவலிங்கத்தில் மறைந்தார்.

**முற்றும்**

## 21. பற்குணன் பூஜை செய்த சருக்கம்

சூதரிஷி சொல்லுகிறார், கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே வேதபுரீசுவரர், திருவிளையாடலை இன்னமும் சொல்லுகிறேன். அது எப்படியென்றால், தர்மராஜாவுக்கு சகோதரனான, அர்ஜுனனானவன், சுபத்திரையை விவாஹம் செய்யவேண்டும் என்று மனதில் நினைத்து அது எப்படி முடியுமென்று வியாகுலம் கொண்டு மனந்தளர்ந்திருந்தான். அதை கிருஷ்ணர் தெரிந்து அர்ச்சுணனைப் பார்த்து என் தங்கையான சுபத்திரையை உனக்கு கொடுக்க என் சகோதரன் என் தாய், தகப்பன் இவர்களெல்லாம் சம்மதப் படமாட்டார்கள். நீ சாஸ்திரங்களில் சொன்ன அந்த விவாஹத்திலுள்ள ராக்ஷஸ விவாகம் செய்தாயேயானால் முடியும். அப்படி நீ செய்தால் சத்துருக்கள் வந்து உன்னை உபத்திரவப் படுத்துவார்கள். அவர்களுடன் சண்டை செய்ய உனக்குச் சக்தியில்லை. ஆகையால் அதற்கு நானொரு உபாயம் சொல்லுகிறேன். அது என்னவென்றால் வேதபுரியில் இருக்கின்ற வேதபுரீசுவரர்

நினைத்த வரங்களை சீக்கிரத்தில் கொடுப்பார். ஆகையால் நீ அந்த வேதபுரிக்கு போய் வேதபுரீசுவரரைப் பூஜை செய்து நீ நினைத்ததை முடித்துக் கொள்ளென்று சொல்ல அர்ச்சுணன் அப்படியே திருவோத்தூருக்குப் போய் வேதபுரீசுவரரை பூஜித்து தோத்தரித்தான். அப்போது பரமசிவன் அவனைப் பார்த்து நீ சுபத்திரையை விவாஹம் செய்யும்படிக்கு நாம் உனக்கு வரம் கொடுத்தோம். நீ இந்த ஸ்தலத்தில் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து விட்டு பிறகு போய் சுபத்திரையை விவாஹம் செய்து கொள்ளென்று சொல்ல அவன் அந்த வேதபுரிக்கு கிழக்கே ஒரு நாழிகை வழிதூரத்தில் போய் அங்கே ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து துவாரகாபுரிக்குப் போய் சுபத்திரையை விவாஹம் செய்தான். அந்த சிவலிங்கத்துக்கு விஜயலிங்கமென்று பேரிட்டார்கள். அதை பூஜித்தவன் திருமணம் செய்து கொண்டு சுகமுடன் வாழ்வார்கள்.

**முற்றும்**

## 22. பிறர்க்கட மகாமுனி முக்தி பெற்றச் சருக்கம்

நைமிசாரண்ய முனிவர்கள் சூத முனிவரைப் பணிந்து இன்னமும் சிவன் சரித்திரங்களை சொல்லுமென்று கேட்க அவர் சொல்லுகிறார். கேளுங்கள் முனிவர்களே. பிறர்கடா என்கிற ஒரு ரிஷியானவர் பெருந்தவங்களைச் செய்தும் மோக்ஷம் அடையாமல் இந்த பூமியில் உள்ள சிவஸ்தலங்களில் போய் தவம் செய்தும் மோக்ஷம் அடையாமல் அகஸ்திய முனிவரிடத்தில் போய் அவர் பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரிக்க அவர் அவரைப் பார்த்து நீர் வேதபுரிக்குப் போய் அந்த பரமேஸ்வரரைப் பூஜித்துப் பணிந்தால் அவர் மோக்ஷம் கொடுப்பாரென்றார். அதை அவர்

கேட்டு சந்தோஷமாகி வேதபுரிக்கு போய் வேதபுரீசுவரரைப் பணிந்து அதை விட்டுப் புறப்பட்டு முன்னே அர்ச்சுணன் ஸ்தாபித்த சிவலிங்கத்திற்கு வடக்கே மூன்று நாழிகை வழிதூரத்தில் போய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து தோத்திரம் பண்ணி மோக்ஷம் அடைந்தார். அந்த சிவலிங்கத்தை பிறர்க்கடேசரென்று சொல்லுவார்கள். அந்த சிவனை வணங்குகிறவர் எந்த காரியத்திலும் குறைவில் லாமல் வாழ்வார்கள்.

அந்த சிவலிங்கத்திற்கு மேற்கே ஒரு அம்பு போகும் தூரத்தில் பரசுராமர் தன் தாயை வெட்டின பாவம் தீர ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்தார். இந்த சிவலிங்கத்திற்கு கிழக்கே நோய் கொண்ட அம்பரன் என்கிற ஒரு கந்தர்வனானவன் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்து தனக்கு நோய்நீங்காமை கண்டு பின்பு அவன் வேதபுரிக்குப் போய் வேதபுரீசுவரரை பூஜை செய்ய நோய் நீங்கிற்று. முன்னே இவன் வைத்த லிங்கத்திற்கு சுரமகற்றீசரென்று பேர் விளங்கிற்று. இந்த சிவபெருமானை பூஜித்தவர்களும் ஸ்துதித்தவர்களும் தாங்கள் அடைந்த நோய் நீங்கி என்றைக்கும் சுகமாய் வாழ்வார்கள்.

**முற்றும்**

## 23. தாருவாகவனச் சருக்கம்

இதை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டு சந்தோஷமாகி இன்னமும் சிவசரித்திரங்களை சொல்ல வேணுமென்று கேட்க சூதமுனிவர் சொல்லுகிறார். கேளுங்கள் முனிவர்களே. முன்னாளிலே தாருகாவனத்தில் உள்ள ரிஷிகளெல்லாம் எந்த பொருளும், எந்த உயிர்களும் எப்படி உற்பத்தியாகியதோ அப்படியே அழிவதல்லாமல் ஆக்கல் அழித்தல் இதை சிவன்

செய்கை என்று சொல்லுகிறது. பொய் அவரவர்கள் செய்த வினையே தவிர அந்த சிவனாலே ஆகுவதென்ன, காக்குவதென்ன, அழிப்பதென்ன என்று இந்தப் பிரகாரம் பேசிக்கொண்டு கர்வம் கொண்டு அவர்கள் இஷ்டப்படிக்கு அவர்கள் நினைத்த வஸ்துக்களை சாப்பிட்டு சிவனையும் விஷ்ணுவையும் மதிக்காமல் இருந்தார்கள். அதை தேவர்கள் அறிந்து கயிலாசத்திற்குப் போய் பரமசிவனைப் பணிந்து இந்த செய்திகளைச் சொல்ல கைலாசபதியானவர் விஷ்ணுவை அழைத்து இந்த செய்திகளைச் சொல்லி ஆலோசனை செய்து அந்த தாருகாவனத்து ரிஷிகளை கெடுத்து விடுவோம். நீர் அழகில் மிகுந்த ஒரு ஸ்திரியைப்போல ரூபங்கொண்டு அந்த தாருகாவன ரிஷிகள் தவம் செய்கிற இடத்தில் போம் என்று சொல்லி அவரை அனுப்பி விட்டு தான் ஆயிரம் மன்மதனுடைய அழகெல்லாம் கூடி ஒரு புருஷ ரூபங் கொண்டது போல் ரூபமெடுத்து ஜங்கம வேஷம் தரித்து அதற்கேற்ற ஆபரணங்கள் அணிந்து தாருகாவனத்து ரிஷிகளின் வீடுகள் தோறும் போய் பிச்சைக் கேட்பவர் போல் நின்றுக்கொண்டு அவர்கள் மனைவிகளுடன் பேசினார். அப்போது அவர்கள் கையில் பிச்சை கொண்டு வந்து அவர் வார்த்தையைக் கேட்டும் அவர் அழகைப் பார்த்தும் அவர் மேல் அதிக மோகமாகி நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்கிற நான்கு காவலையும் விட்டு தன்னை மறந்து, நினைவும் அழிந்து தங்களை சம்போகிக்கும் படிக்கு பரமசிவனை வேண்டிக்கொண்டார்கள்.

இவர்கள் இப்படி இருக்க விஷ்ணு அதிக சந்தோஷத்துடன் மோகினி அவதாரம் கொண்டு அந்த தாருகாவனத்து ரிஷிகள் தவம் செய்கிற இடத்தில் போய் அவர்கள் முன்னே கொஞ்சம் சிரித்துக்கொண்டு நின்றார். அவரை அந்த தாருகாவன ரிஷிகள் எல்லாம் பார்த்து அதிக காமம் கொண்டு அவர்கள் செய்கிற தவசையும் மறந்து அந்த

மோகினியுடன் சேர்ந்தால் தாங்கள் செய்கிற தவசின் பலன் என்று எண்ணிக்கொண்டு இருக்க தங்கள் பத்தினிமார்கள் சிவனால் கற்புநிலை அழிந்தார்கள் என்று தெரிந்து சிவன்மேல் கோபமாகி சிவனைக் கொல்வதற்காக ஒரு யாகம் செய்ய அதில் தீச்சுடர், யானை, மான், சர்ப்பம், மழு இவைகள் அதில் உண்டாயிற்று. அவற்றை அவர்கள் ஒவ்வொன்றாய் சிவனிடத்தில் அனுப்ப பரமசிவன் அந்த தீச்சுடரை குளிரும்படி செய்து யானையை உரித்து தோலைப் போர்த்து சர்ப்பத்தை மார்பில் மாலையாய்த் தரித்து மழுவை வலது கையிலும் மானை இடது கையிலுமாக தரித்து அந்தத் தாருகாவனத்து ரிஷிகளின் முன்னே போய் நின்றார். அவரை அவர்கள் பார்த்து முன்னிலும் ரொம்பவும் கோபமாகி யாகத்திலிருந்த அக்கினிகளை அவர்மேல் வாரி இறைக்க அது, அவரைச் சுற்றி பிரபையைப் போல வளைந்து நின்றது. அவைகளை அந்த தாருகாவனத்து ரிஷிகள் பார்த்து பயந்து இவரே கடவுளென்று மனசில் எண்ணிக்கொண்டு அவர்முன் நின்று கொண்டு கர்வம்அழிந்து அவர்களெல்லாம் ஒன்றாய் சேர்ந்து நாங்கள் செய்த குற்றங்களைப் பொறுத்து எங்களை ரக்ஷிக்க வேண்டும் என்று சொல்லி அவர் பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து பலபல விதமாய் தோத்திரம் செய்தார்கள்.

அப்போது பரமசிவனுக்கு அவர்கள் மீது தயவு உண்டாகி விஷ்ணுவைப் பார்த்து நீ இந்த ரிஷிகளுக்கெல்லாம் சிவாகமத்தை உபதேசஞ் செய் என்று சொல்லிவிட்டு கைலாசம் போய்ச் சேர்ந்தார். பின்பு விஷ்ணு பரமசிவன் சொன்னபடிக்கு அந்த ரிஷிகளுக்கு சிவாகமத்தை உபதேசம் செய்ய அவர்கள் தெளிந்து விஷ்ணுவைப் பார்த்து நாங்கள் சிவனைப் பழித்த பாவம் நிவாரணமாகும் விதத்தை சொல்லுங்களென்று கேட்க அதற்கு அவர் நீங்கள் வேதபுரியில் போய் வேதபுரீசுவரரை பூஜித்தால் இந்த பாவம் சீக்கிரத்தில் தீருமென்று சொல்ல அவர்கள் அப்படியே

திருவோத்தூரில் போய் சேய் நதியில் முழுகிக் கோவிலில் போய் வேதபுரீசுவரரைப் பணிந்து தோத்திரம் செய்து அந்த ஸ்தலத்துக்கு நேர் வடக்கே ஒரு குரோச தூரத்தில் திருக்கோவில் கட்டி அதில் சிவலிங்கம் வைத்து பூஜை செய்து வில்வத்தால் அருச்சித்து தாங்கள் சிவனைப் பழித்த பாவத்தைத் தீர்த்துக் கொண்டார்கள். அந்த லிங்கத்துக்கு வில்வவனேஸ்வரர் என்று பேர். அந்த சிவனைத் தொழுதவர்களும் இந்த சரித்திரத்தைக் கேட்டவர்களும் மோக்ஷமடைவார்கள்.

முற்றும்

## 24. வல்லவன் சந்தானம் பெற்றச் சருக்கம்

முன் சொன்ன சரித்திரங்களை நைமிசாரண்ய ரிஷிகள் கேட்டு இன்னமும் வேதபுரீசர் மகிமையைச் சொல்லுங்களென்று கேட்க சூதரிஷி சொல்லுகிறார். கேளுங்கள் முனிவர்களே ஒரு பட்டணத்திலே வல்லபனென்று ஒரு பிராமணன் இருந்தான். அவன் மனைவியின் பெயர் ரேகாவதி. இவர்கள் இருவரும் அழகிலும் தயவுதாக்ஷண்யம் பச்சாதாப பரோபகாரத்திலும், சிவபக்தியிலும், ரொம்பவும் மேன்மையானவர்கள். இவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கிற நாளில் அவர்களுக்கு பிள்ளை இல்லை என்று ரொம்பவும் மனவருத்தமாகி அளவற்ற திரவியங்களை தானதர்மம் செய்து வெறுப்படைந்து, வேதபுரியில் வந்து அங்கே அகஸ்தியர் தவம் செய்கிற இடத்தின் பக்கத்தில் போய் நின்று பலவாறாக துதித்து தோத்திரம் செய்து எனக்கு புத்திரன் உண்டாகும் விதத்தை அருள் செய்ய வேண்டுமென்று சொல்லி வருத்தப் பட்டார்கள்.

அப்போது அகஸ்திய முனிவரானவர் அவர்களைப் பார்த்து வேதபுரீசுவரர் மகிமையும் அவரை பூஜித்து அடைந்தவாள் சுகத்தையும் நன்றாக விவரித்துச் சொல்லி நீங்கள் அந்த ஸ்தலத்தில் போய் கார்த்திகை மாசத்தில் வருகிற சோமவாரத்தில் அந்த வேதபுரீசுவரரை பக்தியாய் பூஜை செய்தால் புத்திரனும் உண்டாகும். முடிவில் உங்களுக்கு கைலாச பதவியும் உண்டாகுமென்று சொன்னார். அவர் அந்த சொல்படிக்கு கார்த்திகை மாதம் பிறந்தபின்பு அந்த வேதபுரியில் போய் முதல் சோமவாரம் முதலாய் சிவபூஜைக்கு வேண்டிய பூஜா வஸ்துக்களைச் சேர்த்துக்கொண்டுக் கோவிலுள் இருக்கிற கல்யாணி கோடி தீர்த்தத்தில் முழுகி வேதபுரீசுவரரை வேதாகமப்படி பக்தியாய் பூஜை செய்து கொண்டு சிலநாள் அங்கேயிருந்தார்கள். அப்போது ஒருநாள் அந்த பரமசிவனானவர், அவர்கள் மேல் கிருபையுண்டாகி ரிஷபவாஹனத்தின் மீது வந்து நின்று அவர்களைப் பார்த்து ஓ பிராமணா நீ என்னை பூஜை செய்திருந்த விதம் என்னவென்று கேட்க அதற்கு பிராமணானவன் எனக்கு ஒரு புத்திரன் அனுகிரகித்து என்னையாளவேண்டுமென்று சொல்ல சுவாமியானவர் அவனுக்கு புத்திரன் உண்டாகும் படியாய் வரங்கொடுத்துப் போக அந்த பிராமணானவன் அவரைப் பணிந்து அந்த வேதபுரிக்கு மேற்கே ஒரு அம்புவோடுகிற தூரத்தில் போய் ஒரு சிவலிங்கத்தை வைத்து பூஜை செய்து அவர் வரம் கொடுக்க அதைப் பெற்றுக்கொண்டு மனைவியுடன் தன் பட்டணம் போய் சேர்ந்து ஒரு நல்ல புத்திரனைப் பெற்று சுகமாய் வாழ்ந்திருந்தான்.

அந்த சிவலிங்கத்தை வல்லபேசனென்று சொல்லுகிறார்கள். இன்னொரு கதை சொல்லுகிறேன் கேளுங்கள் அதாவது செம்புவன் என்கிற ஒரு சித்தனானவன் முன் காலத்திலே தனக்கு புத்திரனில்லாமல்

மனவருத்தப்பட்டு இந்த பூமியில் புத்திரன் உண்டாகும்படி வரம் கொடுக்கிற ஸ்தலம் எது என்று பெரியோர்களைக் கேட்டு அவர்களால் வேதபுரியே புத்திரன் கொடுக்கிற ஸ்தலம் என்று அறிந்து அங்கே போய் வேதபுரீசுவரரை மிகவும் தோத்திரம் செய்தான். அந்த வேதபுரீசுவரர் சொன்னபடி அந்த வேதபுரிக்கு மேற்கே போய் ஒரு சிவலிங்கம் வைத்து பூஜை செய்ய சுவாமியானவர் ரிஷபத்தின் மேல் அவன் முன்னே காட்சி தந்து அவனுக்கு புத்திரன் உண்டாகும்படிக்கு வரம் கொடுத்துஅந்த லிங்கத்தில் மறைந்தார். பின்பு அவன் தன் வீடுபோய் சேர்ந்து நல்ல புத்திரனைப் பெற்று சுகமாக வாழ்ந்திருந்தான். அந்த லிங்கத்துக்கு ஜெம்புகேஸ்வரர் என்று பெயர். அதைப் பணிபவர் புத்திர சம்பத்தை அடைந்து சுகமாக வாழ்வார்கள்.

முற்றும்

## 25. தொண்டைமானுக்கு படைத்துணை போன சருக்கம்

இதை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டு சந்தோஷமாகி எழுந்திருந்து சூதரைப் பணிந்து ஸ்தோத்திரம் செய்து முன்னாளில் வேதபுரீஸ்வரரானவர் தொண்டைமான் சக்கரவர்த்திக்கு படைத்துணைபோன சரித்திரத்தை எங்களுக்கு நன்றாக சொல்ல வேண்டுமென்று கேட்க சூதமகரிஷி சொல்லுகிறார்.

கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே திருக்காளத்தி மலைக்கு தெற்கிலும் பெண்ணையாற்றுக்கு வடக்கிலும், பசுமலை என்கிற பர்வதத்துக்கு கிழக்கிலும் கிழக்கு சமுத்திரத்துக்கு மேற்கிலும் இதன் மத்தியில் உள்ள தேசங்களை ஆண்டு கொண்டு தொண்டைமான் சக்ரவர்த்தி

என்று பெயர் பெற்று ஒரு ராஜனிருந்தான். அவன் கீர்த்தி, புக்தி, ஜீவகாருண்யம், பரோபகாரம், தயவுதாக்ஷிண்யம், சிவபக்தி, சிவபூஜை, பராக்கிரமம், தைரியம், என்னேரமும் சிவத்தியானம், இவைகளையுடையவன். இவன்முன் சொன்ன தேசத்தில் ராஜ்யபாரம் செய்துகொண்டு இருக்கும்போது, விஸ்வாவசு என்கிற ராஜாவானவன், சதுரங்க சேனைகளை சேர்த்துக்கொண்டு அந்த தொண்டமான் சக்ரவர்த்தியுடன் அநேக வருஷம் வரையில் சண்டை செய்து அவனைத் தோற்கச் செய்து அவன் தேசத்தை கைப்பற்றிக்கொண்டான்.

அப்போது அந்த தொண்டைமான் பயந்து ஒருவரும் துணையில்லாமல் தனியாக காட்டில் போய் பழவர்க்கம், கிழங்குவர்க்கம், இவைகளை சாப்பிட்டுக் கொண்டு சிலநாள் காட்டில் இருந்த பின்பு சிவஸ்தலங்களில் போய் பரமசிவனைப் பணிந்து வேதபுரியில் வந்து சுவாமியையும், அம்மனையும் வணங்கி துக்கித்து அந்த சுவாமியையும், அம்மனையும் நித்யம் மூன்று காலமும் தவறாமல் படி பூஜை செய்து கொண்டிருந்தான். அப்படி சுவாமியானவர் அவன் முன் வந்து நின்று தரிசனம் கொடுக்க அப்போதவன் தனக்கு அப்போதே தன் ராஜ்யம் வந்தது போல் சந்தோஷமடைந்து சுவாமியைப் பலவிதமாக தோத்திரம் செய்தான். அப்போது சுவாமியானவர், அவனை அன்புடன் பார்த்து கேளாய் ராஜனே உனக்கு நாம் நால்வகை சேனைகள் அநேகம் கொடுக்கிறோம். நீ அவைகளை சேர்த்துக்கொண்டு போய் அந்த ராஜாவுடன் சண்டை செய்து அவனை அப்பால் விரட்டிவிட்டு நீ முன் போல உன் தேசத்தை அரசு செய்துகொண்டு இருவென்று சொல்ல அதற்கு அவன் என் சத்ருவுடன் என்னால் சண்டை செய்ய முடியாது என்றான்.

அதற்கு சுவாமியானவர் கேளாய் ராஜனே உன்னை எவர்களாலும் வெல்லமுடியாது. அப்படி இருந்தும் உன் மனசில் பயம் உண்டாகி இருக்கிறது. நம்முடைய நந்திகேசுவரரை உனக்கு படைத்துணையாக அனுப்பி வைக்கிறோம். நீ அவரையும் நான் கொடுக்கிற நால்வகை சேனையையும் அழைத்துக்கொண்டு போய் அவனுடன் சண்டை செய். நாம் சொன்னது உனக்கு சந்தேகமாய் இருந்தால் இதற்கொரு சாட்சி காட்டுகிறேன். அது என்னவென்றால் நம்முடைய நந்திகேசுவரர் எப்போதும் நம்மைப் பார்த்தபடி மேற்கே பார்த்துக்கொண்டு இருக்கப்பட்டவர். இப்போது கிழக்கே பார்த்துக்கொண்டு இருக்கிறார் பார் என்று சுவாமி சொல்லி தன் சிவகணங்களை எல்லாம் யானை, குதிரை, தேர், காலாட்படை இவைகள் கணக்கில்லாதிருக்கும்படி செய்து கொடுத்து நந்திகேசுவரரிடம் போய் அவர் கிழக்கே பார்த்துக்கொண்டு இருப்பதைப் பார்த்து சுவாமி சொன்ன சாட்சி சரியாக இருக்கிறது என்று சந்தோஷமாகி தான் ஒரு வெள்ளைக் குதிரைமேல் ஏறிக்கொண்டு சுவாமி கொடுத்த நால்வகைச் சேனைகளை அழைத்துக்கொண்டு யுத்தபேரிகையை அழைத்து மிகுந்த ஆடம்பரத்துடன் புறப்பட்டு தன் தேசத்திற்கு போய் அந்த விஸ்வாசுவினுடன் பெரும் சண்டை செய்து அவன்தலையை வெட்டினான். அப்போது அவன் ஒரு கந்தர்வனைப் போல ரூபம் எடுத்து தொண்டைமான் சக்ரவர்த்தியைப் பார்த்து நமஸ்கரித்து நீ இனிமேல் உன் ராஜ்ஜியத்தை ஆண்டு சுகமாய் இரு என்று சொல்ல தொண்டைமான் அவனை நீ யாரென்று கேட்க அவன் தன் விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன்.கேளும் சக்கரவர்த்தியே இந்திரன் சபையிலே, நான் வீணை வாசித்துக் கொண்டிருந்தேன். அப்படி இருக்கும்போது ஒரு நாள் நான் அவன் அங்கே இல்லாத வேளையில் அவன் சிம்மாசனத்தின்

மேல் நான் போய் உட்கார்ந்து வீண் வார்த்தை பேசிக் கொண்டு இருந்தேன். அப்போது இந்திரன் வந்து நான் அவன் சிம்மாசனத்தில் இருப்பதைப் பார்த்து என்மேல் கோபமாகி என் முகத்தைப் பார்த்து நீ விண்ணுலகை ஆண்டது போதும். இனிமேல் நீ மண்ணுலகாள்வாய் என்று சாபம் கொடுத்தான்.

அப்போது நான் பயப்பட்டு எழுந்திருந்து அவன் காலில் விழுந்து நமஸ்கரித்து இந்த சாபமானது எப்போது என்னை விட்டு போகுமென்று கேட்க இந்திரனானவன் நீ வேதபுரீசுவரருக்கு அடியாரான தொண்டமான் சக்கரவர்த்தியால் இந்த சாபம் உனக்கு நிவாரணமாகு மென்றான். இந்தப்படிக்கே இப்போது உம்முடைய கைவாள் என் சரீரத்தில் பட்ட அளவில் எங்களைச் சேர்ந்த சாபம் போயிற்று என்று சொல்லி விட்டு தேவலோகம் போய்ச் சேர்ந்தான். பின்பு அந்த தொண்டமானானவன் தன் பட்டணத்தில் போய் மகுடந்தரித்துக் கொண்டு சில நாள் ராஜ்யபாரம் செய்து பின்பு அங்கே தன் மந்திரிகளை ராஜ்யபாரம் செய்ய வைத்து விட்டு திருவோத்தூரில் போய் பரமசிவனுக்கு வேண்டிய திருப்பணி வேலைகள் செய்து உத்சவங்களை நன்றாக நடத்தி கோவில் மண்டபம் பட்டணம் இவைகளை நன்றாகச் செய்து வேதபுரீசுவரரை நித்யம் பக்தியாய் பூஜை செய்திருந்தான். அப்போது சுவாமியானவர் ரிஷப வாகனத்தின்மேல் வந்து அவனைப் பார்த்து நீ நினைத்த வரத்தைக் கேளென்று சொல்ல அதற்கு தொண்டமான் கேளும் சுவாமி இன்றைய தினமானது தைமாதத்து பூர்வபக்ஷத்து பஞ்சமியானதால் இன்றைக்கு செய்கிற ஐந்தாம் திருவிழாவில் நீர் ரிஷபத்தின் மேலேறி இந்தப் பட்டணத்தை பிரதட்சணம் செய்ய வேணும். இந்த உத்சவம் எப்போதும் என்னுடையதாய் இருக்கவேண்டும் இந்தப்படி எனக்கு அனுக்கிரஹம் செய்ய வேண்டும் என்று கேட்டான்.

அதற்கு சுவாமியானவர் வருஷம் பிரதி வருஷத்தில் தைமாதம் தோறும் வருகிற பூர்வ பட்சத்தின் பஞ்சமி திதியில் நாம் ரிஷபத்தின் மேல் வந்து உனக்கு எப்போதும் அனுகிரஹம் செய்வோம் என்று சொல்லி அவர் சிவலிங்கத்தில் மறைந்தார். பின்பு அவன் சுவாமியை மிகவும் பணிந்து ஸ்தோத்திரம் செய்து தன் பட்டணத்தில் போய் வெகுகாலம் மேற்கு முகமாக இருக்கின்றார். அவரை வணங்குகிறவர்கள் பாபம் நீங்கி சுகமடைந்து சிவலோகம் போய் சேர்வார்கள்.

**முற்றும்**

## 26. தாலமகிமைச் சருக்கம்

பின்பு நைமிசாரண்ய முனிவர்களெல்லாம் சூதபுராணிகரைப் பணிந்து தோத்திரம் செய்து ஒரு பனைமரமானது சாரூபபதவியை அடைந்த சரித்திரத்தை சொல்ல வேண்டுமென்று கேட்க சூதமகரிஷி சொல்லுகிறார் கேளுங்கள்.

நைமிசாரணிய முனிவர்களே முன் ஒரு காலத்திலே ரிஷிகள் எல்லாம் சேர்ந்து கைலாசத்தில் போய் பரமசிவனை நமஸ்காரம் செய்து ஸ்வாமி கைலாசவாஸரே ஜங்கமமான சகல ஜீவன்களில் ஆணும் பெண்ணும் இருப்பதை அறிந்திருக்கிறோம். ஸ்தாவரங்கள் என்கிற விருட்சம் முதலானவைகளில் ஆண், பெண் இருப்பது எங்களுக்குத் தெரியாது. மேலும் முன் சொன்ன ஜீவராசிகள் சாலோகம் முதலான பதவிகளை அடைந்திருப்பதை அறிந்திருப்பதை அறிந்திருக்கிறோம். உயிரில்லாத வஸ்துக்களான மரம், கல் முதலானதெல்லாம் முன் சொன்ன பதவியை அடைவது

எங்களுக்குத் தெரியாது. ஆகையால் இந்த இரண்டு சங்கைகளும் எங்களுக்கு தெரியும்படி நன்றாக சொல்ல வேண்டும் என்று கேட்க பரமசிவன் சொல்லுகிறார், கேளுங்கள் ரிஷிக்கூட்டங்களே. நீங்கள் சந்தேகத்தை பரிகரிக்கிறேன். எப்படி என்றால் நீங்கள் எல்லாம் இந்த பூமியில் உள்ள காஞ்சி பிரதேசத்தில் இருக்கிற திருவோத்தூர் என்கிற சிவஸ்தலத்தில் போய் இருந்தால் அங்கே நம் முருகக் கடவுளானவர் திருஞானசம்பந்த மூர்த்தியாய் பிறந்து அங்கே வந்து ஆண் பனையை பெண் பனையாக்குவார். அப்போது நீங்கள் கேட்ட சந்தேகத்தை தீர்த்துக் கொள்ளலாமென்று சொல்ல அவர்கள் அப்படியே திருவோத்தூரில் பரமசிவனைப் பணிந்து தோத்திரம் செய்து தபசு செய்துக்கொண்டிருந்தார்கள்.

அப்படி இருக்கும்போது முருகக் கடவுளானவர் சோழ நாட்டிலேயிருக்கின்ற சீர்காழி ஸ்தலத்தில் பிராம்மண வம்சத்திலே பிறந்து திருஞானசம்பந்தர் என்ற திருநாமம் தரித்து சிவஸ்தலங்கள் தோறும் போய் சுவாமியைப் பணிந்து திருப்பதிகம் பாடிக்கொண்டு திருவோத்தூரில் வந்து சுவாமியைப் பணிந்து அவ்விடத்தில் இருக்கின்றவர் களுடைய வேண்டுகோளால் அங்கே இருக்கிற ஆண் பனை மரத்தை பெண் பனையாக்கி காய்க்கும்படிக்கு திருப்பதிகம் பாட அங்கிருந்த ஆண்பனை மரமானது, பெண் பனைமரமாகி குலைகள் விட்டு காய்த்தது. சிவரூபமும், சக்திரூபமும், ஆகி சாரூபபதவியை அடைந்தது. விருட்ச ஜாதிகளுள் முதலான ஸ்தாவரங்களுக்கு சாலோகம் முதலான பதவிகள் உண்டென்றும் தெரிந்துகொண்டு தங்களிடம் போய்ச்சேர்ந்தார்கள். பரமசிவன் திருவருள் பெற்ற அந்த

பனை விருட்சத்தை தரிசித்து பிரதட்சிணம் வந்து கார்த்திகை மாதத்து சோமாவாரத்தில் மாவிளக்கில் பசுநெய் விட்டு தீபம் வைத்தவர்கள் மனக்குறைகளெல்லாம் தீர்ந்து சாரூபபதம் பெற்று கைலாசகிரியில் எக்காலமும் வாழ்ந்திருப்பார்கள்.

**முற்றும்**

## 27. சமணர் கழுவேறிய சருக்கம்

இந்தப் பிரகாரமாக சூதமுனிவர் தாலமகிமையைச் சொல்ல அவை நைமிசாரண்ய முனிவர்கள் கேட்டு ரொம்பவும் சந்தோஷமாகி எழுந்திருந்து சூதமஹரிஷியைப் பணிந்து தோத்திரம் செய்து முருகக் கடவுளானவர் சம்பந்த சுவாமிகளாய் அவதாரம் செய்து சமணர்களை கழுவேரவும் (ஆண்பனையை, பெண்பனையாகி காய்க்கவும்) திருப்பதிகம் பாடினார் என்பதை எங்களுக்கு நன்றாக தெரியும்படிக்கு நீர் சொல்ல வேண்டும் என்று கேட்க சூதமகரிஷி சொல்லுகிறார். கேளுங்கள் நைமிசாரண்ய முனிவர்களே! இந்த பூமியிலே முன்னே ஒரு காலத்திலே பொய்மையான சமணர் குலமானது அதிக விருத்தியாகி பிரும்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்கிற நான்கு ஜாதியரும் மற்ற ஜாதியாரும், ரிஷிகளும், சைவ மார்க்கத்தை விட்டு சமணர் மார்க்கத்தைச் சேர்ந்து, அருகரே தெய்வம் என்று எண்ணிக்கொண்டு மலையில் உள்ள குகைகளில் போய் தவம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அப்படி இருக்கும்போது முருகக் கடவுளானவர் சமணரால் சைவசமயம் சுருங்கினதை விருத்தி செய்ய நினைத்து சோழநாட்டில் உள்ள சீர்காழி ரத்தின க்ஷேத்திரத்தில் சூஷணியகுலத்தில் பிராமண வம்சத்தில் பிறந்து திருஞானசம்பந்தரென்று பேர் பெற்று ஈசுவரியின்

திருமுலைப்பாலுண்டு தேவாரம் பாடி அஞ்சலை ஐந்து வயதில் முத்துப் பல்லக்கில் ஏறி மதுரை மாநகரத்தில் போய் அடைந்திருந்த சுந்தரேசுவரர் கோவில் கதவைத் திறந்து அவருக்கு பூஜை முதலானது முன்போல் நடக்கும்படி செய்வித்து, சைவசமயத்தை விருத்தி செய்து சிவஸ்தலங்கள் தோறும் போய் சுவாமியை தரிசித்துப் பணிந்து திருப்பதிகம் பாடிக்கொண்டு திருவோத்தூர் பக்கத்திலுள்ள திருவறத்துறை என்கிற ஸ்தலத்திற்கு வந்தார். அப்போது சமணர்களெல்லாம் மனம் பதைத்து ஏக்கங்கொண்டு ஒரு யோசனையும் தோன்றாமல் மனசு கலங்கி இருந்தார்கள்.

இவர்கள் இப்படி இருக்க, திருஞானசம்பந்த சுவாமிகளானவர் அந்த திருவாறத் துறையிலுள்ள கோவிலுக்குப்போய் பரமசிவனைப் பணிந்து திருப்பதிகம்பாடி ஆனந்த கூத்தாடி தான் திருவோத்தூர் ஸ்தலத்தில் மல ஜலாதிகள், விசர்ஜனம் செய்தால் தனக்கு நரகவாதை உண்டாகும்மென்று மனதில் எண்ணிக்கொண்டு முத்துப் பல்லக்கில் ஏறி திருவறத்துறையை விட்டுப் புறப்பட்டு வாகுநதி என்கிற சேயாற்றின் தென்கரை ஓரத்தில் இருக்கின்ற திருமடத்தில் போய் இறங்கி சூரியன் அஸ்தமனமாகி, அப்போது சம்பந்தரானவர் சேயாற்றில் ஸ்நானம் செய்து, ஜப, தப, அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு முத்துப் பல்லக்கில் ஏறி, சிவனடியார் கூட்டத்துடன் திருவோத்தூருக்குப் போய் வேதபுரீசுவரர் கோவிலை பிரதக்ஷணம் செய்து கோவிலுக்குள் வேதபுரீசுவரரை தரிசனம் செய்து அநேக நமஸ்காரம் செய்து தேவாரம் பாடி அடியார் கூட்டத்துடன் அதை விட்டுப் புறப்பட்டு அங்கே ஒரு திருமடத்தில் போய் வீற்றிருந்தார்.

அப்போது அந்த ஊரில் உள்ளவர்களெல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்துபோய் திருஞானசம்பந்த சுவாமிகளை நமஸ்கரித்து எங்கள் துயரத்தை தேவரீர் தீர்த்தருள வேணும், அது என்னவென்றால், இங்கே சமணர்கள் செய்யப்பட்ட உபத்ரவத்தால் நாங்களெல்லாம் ரொம்பவும் வருத்தத்தை அனுபவிக்கிறோம். எங்கள் ராஜாவும் அந்த சமணர்களுக்கு சஹாயமாய் இருக்கிறார். நம்முடைய சைவ சமயமானது எந்த விதமாய் நிலைக்கும். அந்தச் சமணர்கள் இந்த சேயாற்றின் தென்கரையோரத்தில் புன்னகையின் என்கிற ஒரு பட்டணங்கட்டிக்கொண்டு அதில் திருமடம் முதலானது செய்துகொண்டு அதில் குடியாயிருக்கிறார்கள். அந்த சமணர்களுக்கு எண்ணாயிரம் பேர்களும் இருக்கிறார்கள். அவர்கள் கோவில்கள் கட்டி பூஜை செய்கிறார்கள் என்று சொன்னார்கள். அவற்றை எல்லாம், திருஞானசம்பந்த சுவாமிகள் கேட்டு அவர்களைப் பார்த்து நம்முடைய சிவன் திருவருளாலே இன்று முதல் அந்தச் சமணர்கள் எல்லாம் துன்பம் அடைவார்கள் என்று திருவாய் மலர்ந்தருளி அவர்களுக்கு உத்தரவு கொடுத்தனுப்பிவிட்டு, திருவணையின்மேல் படுத்து நித்திரை செய்திருந்தார்.

இவர் இப்படி இருக்க முன்சொன்ன புன்னகை என்கிற ஊரில் இருக்கின்ற சமணர்கள் எல்லாம் திருஞானசம்பந்த சுவாமிகளின் பெருமையைப் பார்த்து அவர் அவர்கள் மனதில் தளர்வுகொண்டு எல்லோரும் ஒன்றாய்ச் சேர்ந்து, நாம் இனிமேல் சும்மாய் இருக்கலாகாது, இங்கே வந்திருக்கின்ற சம்பந்தனை சின்னபிள்ளை என்று ஒருக்காலும் எண்ணக்கூடாது. அது ஏனென்றால் முன்னே மதுரை மாநகரத்தில் நம்முடைய எண்ணாயிரம் பேரை கழுவிலேற்றிக் கொன்றானாம். இங்கேயும் அப்படியே நம்மை எல்லாம் கொல்லுவான், ஆகையால் நாமெல்லாம்

சீக்கிரமாய் இவனைக் கொன்றுவிட்டால் நமக்கெல்லாம் ஒரு துன்பமுமில்லை. ஆக இந்தப் பிரகாரம் சமணர்கள் எல்லாம் ஆலோசனை செய்து சம்பந்த சுவாமிகளை கொல்வதற்காக ஒரு யாகம் செய்தார்கள். அந்த யாகத்திலே ஆதிசேஷனைப் பார்க்கிலும் ரொம்பவும் பருத்த உருவத்தை உடையதாய் ஒரு பெரிய சர்ப்பம் உண்டாகி தேவர்கள் முதலானவர்களெல்லாம் பயம் அடையும்படி கண்களில் நெருப்புப் பொறி பறக்க எல்லோரும் கண்டு நடுங்க சீறிக்கொண்டு எழுந்தது.

அதை அந்த சமணர்கள் திருஞானசம்பந்த சுவாமிகள் மேல் அனுப்ப அது அந்த பாதிராத்திரியில் சீறிக்கொண்டு மகாவேகமாய் திருஞானசுவாமிகள் இருக்கின்ற திருமடத்தில் வந்தது. அதை அங்கே இருந்த சிவனடியார்கள் பார்த்து பயப்பட்டு ஓடிப்போய் திருஞான சம்பந்தருக்குச் சொல்ல அப்போது அவர் பரமசினை மனதில் நினைத்து அந்த சிவனடியார்களை பயப்படாது இருங்கள் என்று தைரியம் சொல்லிவிட்டு தன்முன்னே வருகின்ற சர்ப்பத்தைப் பார்த்து நீ இங்கே இருக்கிற அரண்மனைக்கு போவென்று கட்டளைஇட்டார். அப்படியே அந்த சர்ப்பமானது அங்கே ராஜா இருக்கிற அரண்மனைக்குப் போய் அங்கே இருந்த, குதிரைகளையும், சேனைகளையும் விழுங்கிவிட்டு அப்பால் ராஜாவினிடத்தில் போகப் புறப்பட்டது. அப்போது அதைப் பார்த்தவர்கள் பயந்து ராஜாவின் முன்னே போய் நின்று பணிந்து ஒரு பெரிய சர்ப்பமானது நம்முடைய அரண்மனையில் வந்து நம்முடைய குதிரைகளையும் அநேக சேனைகளையும் விழுங்கிவிட்டு இவ்விடத்திற்கு வருகின்றது என்று சொல்ல, அது கேட்டு ராஜா ஆச்சரியப்பட்டு வீரர்களைக் கூப்பிட்டு நீங்கள் போய் அந்த சர்ப்பத்தை அப்பால் ஓட்டி விடுங்கள் என்று சொல்ல அவர்கள் போய் பல ஆயுதங்களை அந்தப் பாம்பின்மேல்

எறிய ஆயுதங்கள் எல்லாம் பொடியாகி விட்டது. அப்போது அந்த பாம்பானது ரொம்பவும் கோபம் கொண்டு எழும்பி அந்த வீரர்களில் சிலரைக் கடித்தது. அதில் தப்பின சிலர்கள் ஓடிப்போய் ராஜாவுடன் அந்தச் செய்தியைச் சொல்லஅதை அவன் கேட்டு வியாகூலங்கவலை கொண்டு இந்தப்பாம்பை விலக்குவதற்கு நம் மதத்தில் மந்திரம் என்னவென்று நினைத்து மந்திரங்கள் தெரிந்த சமணர்களை அதி சீக்கிரத்தில் அழைப்பித்து அவர்களைப் பார்த்து இந்த சர்ப்பம் வந்து செய்கிற துன்பத்தை நீக்கிவிடுங்களென்று சொன்னான்.

சூரியன் உதயமானான். அப்போது அந்த சமணர்கள் ராஜாவைப் பார்த்து சந்தோஷித்து, சர்ப்பம் இறந்தது இறந்ததுதான். இனி நீர் பயத்தை விட்டு சுகமாக இருங்கள். என்று சொல்லி ராஜாவை அழைத்துக் கொண்டு அந்த பாம்பின் முன்னே போய் நின்று இது நாம் அனுப்பின சர்ப்பந்தான் என்று சொல்லி மயில்பீலிகுஞ்சத்தை அவர்கள் கையில் வைத்திருக்கிறகமண்டலத்தில் தோய்த்து அந்த பாம்பின்மேல் தெளித்தார்கள். அப்போது அந்தப் பாம்பானது அந்த சமணர்களைப் போய் விழுங்க அப்போது அவர்கள் பயந்து சீக்கிரமாய் நகர்ந்து ஓடிப்போனார்கள். ராஜாவும், அப்பாலே ஓடிப்போய் ஒரு வீட்டில் நுழைந்து தன்மந்திரிகளைச் சேர்த்து இந்த சர்ப்பமானது அப்பால் போகுவதற்கு என்னவிதம் செய்யலாம் என்று கேட்க, அந்த மந்திரிகளுள் ஒருவன் ராஜாவைப் பார்த்து கேளும் மகாராஜாவே, நேற்றைய தினம் மஹாத்மாவான ஒரு சிறுவர் சிவபக்தியில் மிகுந்தவர். அவர் சிவனடியார் புடைசூழ முத்துப்பல்லக்கின்மேல் வந்து மகாஆடம்பரத்துடன் இங்கே ஒரு திருமடத்தில் வீற்றிருக்கின்றார். அவரை நாம் போய் வணங்கி வேண்டிக்கொண்டால் இந்த சர்ப்பத்தின் பலத்தை ஒடுக்கி அதை அப்பால் வோட்டி விடுவாரென்றறு சொல்ல

அப்போது ராஜாவின் சபையில் இருந்தவர்களெல்லாம் எழுந்திருந்து ராஜாவை பணிந்து ஆம், ஆம் இவர் சொன்னது மெய்தானென்று சொன்னார்கள். அதை அந்த ராஜாவானவன், கேட்டு மந்திரிகளை அனுப்பி திருஞானசம்பந்தரை வரவழைத்து எதிர்கொண்டு போய் அவரை நமஸ்கரித்து அங்கே ஒரு ரத்நாசனம் போட்டு அதில் அவரை வீற்றிருக்கச் செய்து அவரை அநேக பிரதட்சணம் வந்து அவருடைய பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து சர்ப்பம் வந்துசெய்த துன்பங்களை எல்லாம் சொல்ல அவைகளை அவர் கேட்டு கொஞ்சம் சிரித்து ராஜாவின் முகத்தைப் பார்த்து, இந்த சர்ப்பஜாதியை ஆபரணமாய் தரித்த பரமசிவனுடைய திருவெண்ணீற்றை நீ தரித்துக்கொண்டால் இந்த துன்பங்கள் எல்லாம் நீங்கிவிடும் என்று சொல்லி விபூதியை எடுத்து பரமசிவனை நினைத்து ராஜா முதாலான சகலமான பேருக்கும் கொடுக்க அவர்கள் பக்தியுடன் தரித்துக் கொண்டார்கள்.

அப்பால் சம்மந்த சுவாமியானவர் ராஜாவின் முகத்தைப் பார்த்து இந்த சர்ப்பம் செய்கிற துன்பங்களை சர்ப்பரான சிவபிரானே தீர்ப்பரேயல்லாமல் மற்ற பொய்யான தெய்வங்கள் தீர்க்க மாட்டாது. இந்த சர்ப்பத்தை நீ வழிபாடு செய்கிற சமணர்கள் நீக்குவதானல் நீக்கும்படி செய்யச் சொல்ல அதை அந்த ராஜன் கேட்டு சமணர்களைப் பார்த்து நீங்கள் இந்த சர்ப்பத்தை அழித்துவிட்டால் லோகத்தில் இருக்கிற தெய்வங்கள் எல்லாம் உங்கள் தெய்வங்களுக்கு சமானமாகாது. நீங்கள் இந்த சர்ப்பத்தை விலக்காவிட்டால் உங்களுடைய தெய்வம் பொய்தான். அதை நீங்கள் நம்புவது வீண்தான் என்று சொன்னான். அதை அந்த எண்ணாயிரம் குருக்கள்மாரும் கேட்டு அந்த சர்ப்பத்தை அழிப்பதற்காக எண்ணி ஒன்று சேர்ந்து மயில் பீலியை கமண்டல ஜலத்தில்

நினைத்து அந்த பாம்பின் மேல் வீச அப்போது அந்த பாம்பானது கண்களில் நெருப்புப் பொறி பறக்க உக்ரமாய் எழும்பி ரொம்பவும் சீறிற்று. அப்போது அந்த எண்ணாயிரம் குருக்களும், மற்ற சமணர்களும், நடுநடுங்கி பயந்து வருத்தப்பட்டு ஓடிப் போனார்கள். அப்போது ராஜாவானவன், திருஞான சம்பந்த சுவாமிகளின் பாதத்தில் வீழ்ந்து நமஸ்கரித்து இந்த சர்ப்பத்தை நீக்கியருள வேண்டுமென்று சொல்ல திருஞானசம்பந்த சுவாமிகளானவர்கள் அப்படியே செய்கிறோம் என்று சொல்லி சம்மதித்து வேதபுரீசுவரரை மனதில் நினைத்து தேவாரம் பாடினார்.

அப்போது அந்த வேதபுரீசுவரரானவர் ஒரு பாம்பாட்டியைப் போல ரூபமெடுத்துக் கொண்டு தலையில் சக்கிரபாகையும், அதில் கோழியிறகும், கொக்கிறகும், கைகளில் கொடிகளாலும் வேர்களாலும் கடகமும், கழுத்தில் பலகறைமாலைகளும், இடுப்பில் சர்ப்பத்தோல் கச்சையும் ஆகிய இந்த அலங்காரமுடையவராகி ஒரு பாம்புப் பெட்டியை கையில் எடுத்துக்கொண்டு வந்து அந்த பாம்பை வாலைப் பிடித்திழுத்து அதை ஆட்டிவைத்து அதை கையில் பிடித்துக்கொண்டு திருக்கோவிலுக்குள்ளே போய் அந்த வேதபுரீசுவரருக்கு வடக்கு பக்கத்தில் அந்த பாம்பின் உடலை குடையாய் பிடித்துக்கொண்டு லிங்கவடிவாய் வீற்றிருக்கிறார். அந்த சிவலிங்கத்திற்கு நாகேச்வரரென்று பெயர் சொல்லுகிறார்கள். இதை வணங்குகிறவர்கள் பலவித மந்திரங்களில் வல்லமையுடையவராவார்கள். இந்தப் படியாக முன் சொன்ன சர்ப்பமானது நீங்கினபின்பு அந்த திருவோத்தூரில் உள்ளவர்களெல்லாம் பயம் நீங்கி மனதில் தைரியமும், சந்தோஷமும் உண்டாகி பரமசிவனானவர் பாம்பாட்டியைப் போல்வந்த திருவிளையாடலை

ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு அதிசயமடைந்தார்கள். தேவர்களும் இவைகளைப் பார்த்து அதிசயப்பட்டு மனம் மகிழ்ந்தார்கள்.

ராஜாவானவன் சம்பந்த சுவாமிகளுடைய பாதங்களில் விழுந்து நமஸ்காரம் செய்து எழுந்து நின்று கும்பிட்டுக்கொண்டு அவர் முகத்தைப் பார்த்து பலவாறாக ஸ்தோத்திரம் செய்து நானும் என்னுடைய சுற்றத்தாரும் தங்களுடைய திருவடிகளுக்கு அடிமையாகவிருக்கின்றோம் என்று சொல்ல அதற்கு சம்பந்த சுவாமிகள் நீயும் நானும் இந்த பூலோகத்தில் உள்ளவர்களும் யாவரும் நம்முடைய வேதபுரீசுவரருக்கு அடிமையாகும் நாம் அப்படி சிவனுக்கு அடிமையாய் இருந்தும் சிவன் முத்திரையான விபூதி, ருத்ராட்சம் முதலானவைகளை தரித்திருக்கின்ற சிவனடியார்களை, அந்த சமணர்கள் இழிவாக அநேகவசனம் சொல்லுவதை நாம்காதில் கேட்டுக் கொண்டிருப்பது நல்லதா முன்னே நாம் பாண்டிய நாட்டிலே மதுராபுரியிலே வைகையாற்றிலே நாம் திருமுகப்பாசுரம் எழுதி ஏடு விட்டும், அந்த ஏட்டை அக்கினியில் விட்டும் சமணர்களை எல்லாம் கழுவேற்றி அழித்தோம். நல்லவர்களை ரக்ஷிப்பதும், துஷ்டர்களைக் கொல்லுவதும் ராஜாவுக்கு கடமையாகையால் இந்த ராஜநீதியை நடத்தாதிருந்த அந்த ராஜாக்களுக்கு பாவம் கிடைக்கும். ஆகையால் பாய் மந்திரத்தால் மயக்குகின்ற இந்த சமணர்களுடைய குருக்கள்மாரைக் கொன்றால் பாவம் இல்லை என்றார். சமணர்கள் கேட்டு கோபம் கொண்டு எழுந்திருந்து ராஜாவைப் பார்த்து இந்த பிராமணப் பிள்ளையானவன் பாண்டி நாட்டில் சமணரை ஜெயித்தேன் என்று சொல்வது இங்கேயும் அப்படியே செய்தால் சரிதான். இவன் மகாத்மாதான் முன்னே வந்த பாம்பை யாரோ ஒருவன் வந்து மந்திர பலத்தால் பிடித்தாட்டினால் இவன் பெரியவனா

அவன்தான் பெரியவன் இவன் சொன்ன வசனம் வெறும் பொய்தான் என்று சொல்ல அதை சம்பந்தர் கேட்டு சிரித்து ராஜாவின் முகத்தைப் பார்த்து கேளாய் ராஜனே முன்னே வந்த சர்ப்பமானது அவர்கள் செய்த செய்கைக்கு வசப்படாமல் இருந்தது தெரிந்திருந்திருந்தும் என்ன சொன்னார்கள் பார்த்தாயா, அப்படி அவர்கள் சொல்லுகிற பக்ஷத்தில் அவர்கள் மனதின் படி செய்வதே சரி என்றார்.

ராஜாவானவன், அதற்கு சம்மதப்பட்டு சமணரிடத்திலும், சம்பந்தர் இடத்திலும் உறுதிமொழி வாங்கிக்கொண்டு சமணர்களைப் பார்த்து நாளைய தினம் வாருங்கள் மனசின்படி செய்கிறோம் என்று சொல்லி அவர்களை அவர்கள் ஊருக்கு அனுப்பிவிட்டு சம்பந்தரிடத்தில் உத்திரவு வாங்கிக்கொண்டு தன் அரண்மனைப் போய்ச் சேர்ந்தார். சூரியன் அஸ்தமனமானான், அப்போது சமணர்கள் எல்லாம் நாளையதினம் நாம் மந்திரத்தால் பிராம்மணப் பிள்ளையை ஜெயித்து விடுவோம் என்று பேசிக்கொண்டு மஹாதைரியத்துடன் தங்களுடைய புன்னகை என்கிற கிராமத்தில் போய் சேர்ந்தார்கள். சம்மந்த சுவாமிகளானவர் அதை விட்டு திரு அடியார் கூட்டத்துடன் திருக்கோவிலில் போய் சுவாமியைப் பணிந்து தேவாரம் ஓதி தோத்திரம் செய்து அதை விட்டு திருமடத்தில் போய் சேர்ந்தார். சீர்காழியிலுள்ள தோணியப்பரை தியானம் செய்து கொண்டு இருந்தார். முன்னே புன்னகையில் போய்ச் சேர்ந்த எண்ணாயிரம் சமணர்களும் ஒன்றாய்க் கூடி ராஜாவின் முன்னே அவர்கள் சொல்லிவிட்டு உறுதிமொழியையும், அதற்குத் தகுந்த ஏற்பாடுகளையும் பேசி ஆலோசனை செய்து

கொண்டிருந்தார்கள். சூரியன் உதயமானான். அப்போது ராஜாவானவன் காலைக்கடன்களை முடித்துக்கொண்டு தன் சபாமண்டபத்தில் வந்து சிம்மாசனத்தின் மேல் இருந்தான். ராஜாவின் மந்திரிமார் முதலானவர்களும், சம்மந்தரும், சமணர்களும், காலைக்கடன் முடித்துக்கொண்டு ராஜாவினிடத்தில் வந்து சேர்ந்தார்கள். இப்படியாக இருக்கிற சபையில் சமணர்களில் சாதுர்யம் உள்ள ஒருவன் எழுந்திருந்து தங்கள் மந்திரத்தை எழுதியிருக்கிற ஒரு ஓலையை கொண்டுபோய் ராஜாவின் முன்னே வைத்து இதை அக்கினியில் போட்டு வேகும்படி செய்யச் சொல்லும் அவர் சாமர்த்தியத்தை பார்ப்போம் என்று சொன்னான்.

அப்போது சம்மந்தரானவர் ஓலையை வரித்தறிந்து பரமசிவன் கீர்த்தியான திருப்பாசுரமெழுதி ராஜாமுன் வைக்க ராஜாவானவன் அதை எடுத்து சந்தி கையில் வைத்துச்சுருட்டி கருமான் உலைக்களத்தில் வைத்து வெகுநேரம் வரையில் எரிக்க அது வேகாமல் முன்போலவே இருந்தது. பின்பு சமணர்கள் வைத்த ஏட்டை அந்த அக்கினியில் போட்டான். அடுத்த கணம் அது சாம்பலாய் விட்டது. அதை சமணர்கள் பார்த்து மன வருத்தங்கொண்டு ராஜாவைப் பார்த்து தோத்திரம் செய்து ஜலத்தில் எதிர் போகும்படியாய் ஏடு விடும்படிக்கு செய்வீர் என்று சொல்ல, ராஜாவானவன் அதைக் கேட்டு எழுந்திருந்து மந்திரிமார், சம்பந்தர், அடியார்கள், சமணர்கள் ஆகிய இவர்களுடன் புறப்பட்டு சேயாற்றில் போய் நின்றான்.

அப்போது சமணர்கள் எல்லாம் அவர்கள் மந்திரத்தை எழுதின ஒரு ஓலையைக் கொண்டு வந்து ராஜாவின் கையில் கொடுத்தார்கள். உடனே சம்பந்த சுவாமிகளானவர் ஒரு ஓலையில் தேவார திருப்பாசுரத்தை எழுதி ராஜாவின் கையில் கொடுக்க, ராஜாவானவர் இதை வாங்கிக்கொண்டு சமணர்கள்

குடுத்த ஓலையை முன்னே அந்த ஆற்று ஜலத்தில் விட அதை கிழக்குபக்கமாய் ஜலத்தில் அடித்துக் கொண்டு போயிற்று. அப்பால் சம்மந்த சுவாமிகள் கொடுத்த ஓலையை அந்த ஜலத்தில் ராஜா விட்டான். அது மேற்கு முகமாய்த் திரும்பிப்போய் அகஸ்தியர் பூஜைசெய்த சிவலிங்கத் தினிடத்தில் சேர்ந்தது. அந்த ஊருக்கு அன்று முதல் சேயாற்றை வென்றான் என்று பேராயிற்று. சமணர்கள் எல்லாம் மனம் கலங்கி ஒடுங்கி ராஜாவைப் பார்த்து கேளும் மஹாராஜாவே இந்தப் பிராமணப் பிள்ளையானவர் தான் கற்றிருக்கிற மந்திர பலத்தாலே முன்னே மதுரையில் எங்கள் ஜாதியாரை ஜெயித்தான். ஆகையால் இது ஒரு பெரிதல்ல. வேதபுரீசுவரர் கோவிலின் பக்கத்திலும் ஆண் பனை மரங்கள் இருக்கிறது. அந்த மரங்களில் இப்போதே நல்ல காய்கள் காய்க்கும்படி எவர்கள் செய்கிறார்களோ அவர்கள் தெய்வமே பெரிது என்று சொன்னார்கள்.

ராஜாவானவன் அதைக் கேட்டு சம்மந்த சுவாமிகளின் முகத்தைப் பார்க்க அதற்கு சம்மந்த சுவாமிகள் இதில் நாம் தோற்றால் நம்மை கழுவிலேற்றிவிடும் என்று ஒரு ஓலையில் எழுதி ராஜாவின் கையில் கொடுத்தார். உடனே சமணர்களும் அப்படியே எழுதி ராஜாவின் கையில் கொடுத்தார்கள். இந்த இரண்டையும் ராஜா கையில் வாங்கிக்கொண்டு நாளைக்கு வாருங்கள் அப்படியே செய்வோம் என்று சொல்லிவிட்டு எல்லோரையும் அவர் அவர்கள் இடத்திற்கு போகச் சொல்லி அனுப்பிவிட்டு தான் தன் அரண்மனையில் போயிருந்து மற்றும் நான் காலையில் எழுந்து காலைக் கடனை முடித்துக்கொண்டு சபாமண்டபம் வந்து சேர்ந்தான். உடனே அவன் மந்திரிமார் முதலானவர்களும், அந்த ஊரில் உள்ளவர்களும், சம்மந்தரும் அடியார்களும் ஆகிய இவர்களெல்லாம் ராஜாவினிடத்தில் போய் சேர்ந்தார்கள்.

பின்பு அந்த சபையில் உள்ள ராஜா முதலான சமஸ்தரும் எழுந்திருந்து கோவிலின் பக்கத்திலே போய் சேர அப்போது சம்மந்த சுவாமியானவர் வேதபுரீசுவரரை தியானம் செய்து நமஸ்கரித்து தேவாரப் பதிகம் பாடினார். அந்த க்ஷணமே அந்த ஆண்பனை மரங்கள் காய்கள் காய்த்தன. அதை ராஜா முதலான எல்லோரும் பார்த்து ஆச்சரியப்பட்டு நமஸ்கரித்து சிவன் செயலென்று சொல்லி சம்மந்த சுவாமிகளின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து தோத்திரம் செய்தார்கள். அந்த சமயத்தில் முன்னே பராசரர் யாகம் செய்யும் போது அதை அழித்து பராசரரால் சாபம் அடைந்த பனைமரம், வேலமரம், இவைகளெல்லாம், முன் தேவேந்திரன் சேவகராக ரூபம் கொண்டு தேவலோகம் போய் இந்திரனிடத்தில் சேர்ந்தார்கள். அப்போது ராஜாவானவன் தன் சேவகரை சமணர்களை அழைத்து வரும்படி அனுப்பி வைக்க சமணர்கள் எல்லாம் ஆண்பனையைக் காய்க்கும்படி மந்திரஜபம் செய்ய அது காய்க்காதது தெரிந்து ராஜா நம்மை தண்டிப்பாரென்று சொல்லி யாகூலப்பட்டுக்கொண்டு இருந்தார்கள்.

அப்போது முன்னே போன சேவகர்கள் போய் சமணர் கூட்டங்களை எல்லாம் ஒன்று விடாமல் கொண்டு வந்து ராஜாவின் முன்னே விட அவர்கள் ஆண்பனை மரங்கள் காய்த்திருப்பதைப் பார்த்து மனம் திடுக்கிட்டு மயங்கி முகங்கள் கறுத்தார்கள். அப்போது சம்மந்த சுவாமிகளானவர் ராஜாவின் முகத்தைப் பார்த்து கேளும் மஹாராஜாவே, இந்த சமணர்களில் விபூதி தரித்து பரமசிவனுக்கு அடிமையான வர்களைக் காப்பாற்று என்று சொல்ல அதற்கு ராஜாவானவர் அப்படியே செய்வோம் என்று சொல்ல, அப்போது சமணர்களில் மானமுள்ளவர்கள் போய் கழுமரத்தில் ஏறி பிராணனை விட்டார்கள். சிலர்கள் வேதபுரீசுவரருக்கு அடிமையானோம் என்று நெற்றியில் விபூதி தரித்துக்

கொண்டார்கள். சிலர்கள் ராஜா நம்மைப் பார்க்கவில்லை என்று மெதுவாய் நடந்து, ஓடிப் போனார்கள். சமணர்கள் எல்லாம் இப்படியான பின் ராஜாவானவன், சமணர்களுடைய கோவில் மடம், ஊர் இவைகளை இடித்து பாழாக்கி விட்டான். அப்பால் சமஸ்தரும் உபத்திரவம் இல்லாமல் சுகமாய் வாழ்ந்திருந்தார்கள். சைவசமயம் நன்றாய் வளர்ந்தது. இந்த பிரகாரமாக சூதமகரிஷியானவர் நைமிசாரணிய முனிவர்களைப் பார்த்து, வேதபுரியின் ஸ்தலமகிமையைச் சொல்லி மேலும் வேதபுரியின் ஸ்தலமகிமையை அளவில்லாத கல்பகோடி காலம் சொன்னாலும் முடியாது. ஆகையால் இந்த வேதபுரீசுவரர் புராணத்தை படித்தவர்களும், கேட்டவர்களும், அவர்கள் நினைத்த காரியங்கள் சித்திபெற்று வாழ்வார்கள். நீங்கள் அந்த ஸ்தலத்தில் போய் வேதபுரீசுவரரைப் பணிந்து சிவபதத்தை அடைவீர்களென்று சூதர் சொல்ல நைமிசாரண்ய முனிவர்கள் எல்லாம் அவரைப் பணிந்து அவர் முகத்தைப் பார்த்து வணங்கி நின்று எங்களுடைய அக்ஞானம் நிறைந்த மனசில் இந்த சிவசரித்திரமான ஞானவிளக்கை ஏற்றி வைத்தீரே இதனால் மெய்ப் பொருளானது எங்கள் மனதில் நிறைந்திருக்கின்றது என்றார்கள். அப்பால் சூதமகரிஷி யானவர் அந்த முனிவர்கள் இடத்தில் உத்திரவு வாங்கிக்கொண்டு தன்னிடம் போய்ச் சேர்ந்தார். பின்பு நைமிசாரணிய முனிவர்கள் எல்லாம், திருவோத்தூருக்குப் போய் சேயாற்றில் முழுகி கோவிலில் சென்று வேதபுரீசுவரரை நமஸ்கரித்து சிலதினம் அங்கேயே வசித்திருந்து அப்பால் அவர் அவர்கள் இருக்கிற இடம் போய்ச் சேர்ந்தார்கள்.

**திருவோத்தூர் புராண வசன ஸங்கிரஹம் முற்றிற்று.**

இதை கள்ளப்புலியூர் பர்வத சஞ்ஜீவி அய்யர் சார்வரி வருஷம் தை மாதத்தில் செய்தார். இது சார்வரி வருஷம் தை மாதம் இருபதாம் தேதி சுக்ரவாரம் பூர்வபக்ஷம் திரயோதசி திதி, புனர்பூச நட்சத்திரம் மத்தியான்னத்தில் பர்வதசஞ்சீவி அய்யர் கையால் எழுதி நிறைவேறிற்று